


# ரெக்ஸ் ~

# தரம் ஊரறிந்த உன்னதம்!

## இப்போது மற்றும் ஒரு கவர்ச்சி- அதன் விலை நயம்

எங்கள் ஸ்க்வாஷ்கள் மிகமிக நேர்த்தியான பழங்களாகப் பார்த்துப் பறித்து அவற்றிலிருந்து தயாரிக்கப் பட்டவை. பிறகு தூய சீனிப்பாகும் விசேஷமான இதர சரக்குகளும் சேர்க்கப் பட்டவை. எனவே சுவைத்தறியாத புத்துணர்ச்சி தரும் பானமாக உங்களை அடைகிறது —ரெக்ஸ்.




கார்ன் ப்ராடக்ட்ஸ் கம்பெனி (இந்தியா) பிரைவேட் லிமிடெட், பம்பாய்-1.

Seasons/1911/TM

# கல்கி

## பொருளடக்கம்

கீலக௵, பங்குனி௴ 17உ. 1969, மார்ச். 30



அட்டைப் படம் : டி. தாமோதர ராவ்

"கல்கி"யில் வெளியாகும் கதைகளில் உள்ள பெயர்கள் எல்லாம் கற்பனைப் பெயர்களே; சம்பவங்களும் கற்பனையே.


பெரியவர்கள் பற்றுக்குறைச் சிகரெட் பிடிக்கலாம். குழந்தைகள், நீங்கள் பிடிப்பது அநியாயம்.
தில்லியின் பற்றுக் குறை


ராஜ்யங்களில் பற்றுக்குறை!


லாப நோக்கில்லாத தொழில் உயர்வானது என்றால், நஷ்ட நோக்கத்துடன் நாங்கள் நடத்தும் தொழில் அதைவிட உயர்ந்ததுதானே!
சர்க்கார் தொழில்
PK



தமிழ்த்திருநாடு தன்னைப் பெற்ற
தாயென்று கும்பிடடி பாப்பா — பாரதியார்

மலர் 28 ★ இதழ் 35



# பயனற்ற யோசனை!

நில உச்சவரம்பை மேலும் குறைப்பது தமிழக அரசின் உத்தேசம் என்று தமிழக நிதிமந்திரி திரு மதியழகன் சமீபத்தில் சட்டமன்றத்தில் கூறியதிலிருந்து தெரிகிறது.

'இயற்கையாகவே நில உடைமைகள் காலக்கிரமத்தில் சிறியதாகிக் கொண்டுதான் இருக்கின்றன. ஒரு நில உடைமையாளர் காலமாகும்போது அவரது உடைமை அவரது மக்களுக்கெல்லாம் பகிர்ந்து தரப்படுகிறது. அடுத்த தலைமுறையில் இது மேலும் பல துண்டுகளாகப் பிரிக்கப்படுகிறது. இதற்குச் சட்டம் போடத் தேவையே இல்லை' என்கிறார் ராஜாஜி. 'உச்சவரம்பு பற்றிப் பேசுவது வோட்டுப் பிடிப்பதற்காகவே செய்வது; இது அர்த்தமற்றது. நன்கு சிந்தித்துச் செயலாக்க வேண்டிய விஷயங்கள் எத்தனையோ உள்ளன. கவலை கொள்ள வேண்டிய பிரச்னைகள் பல உள்ளன. வோட்டுப் பிடிக்கிற பிரசார மந்திரங்களையும் சோஷலிஸ வேஷத்தையும் விட இப்பிரச்னைகளுக்கே முக்கியத்துவம் தர வேண்டும்' என்கிறார்.

விவசாய உடைமைகள் மிகவும் குறைக்கப்பட்டால் விளைச்சல் மிகமிகப் பாதிக்கப்படும் என்று அறிஞர்கள் பல முறை எடுத்துக் காட்டியுள்ளனர். ஓரளவுக்குக் கணிசமான நில உடைமை இருந்தால்தான், அதில் ஒரு பகுதியிலாவது புதிய விவசாய முறைகளைச் சோதித்துப் பார்க்கத் துணிவு ஏற்படும். உற்பத்தியைப் பெருக்குவதற்காகக் கணிசமான முதலீடு தேவைப்படும் நவீன முறைகளைச் சிறு உடைமையாளர்கள் மேற்கொள்ள முடியாது. அரசாங்கம் கடன் வசதி தருவதாகப் பேசலாம். ஆனால் நடைமுறையில் பல்லாயிரம் விவசாயிகளிடையே, பருவ நிலையைப் பொறுத்த உழவுத் தொழிலுக்கே உரிய அவசர உணர்வுடன் அரசாங்கத் திட்டங்களை அமுலாக்குவது வெகு சிரமம். இன்று பண்ணைக்காரர்கள் தாமே செலவு செய்து விவசாய அபிவிருத்தி செய்கையில், இப்பண்ணைகளைச் சிறிதாக்கிவிட்டு, அவற்றுக்காகச் செலவு செய்ய முடியாத உடைமையாளருக்காகச் சர்க்கார் பொது மக்களின் பணத்தைச் செலவு செய்வதில் என்ன அர்த்தமிருக்கிறது?

'ஜப்பானில் நில உடைமைகள் மிகச் சிறியதாக இல்லையா?' என்கிறார் மந்திரி. இதற்கு 'தினமணி' கூறும் பதில் கவனத்துக்கு உரியது. சாதாரணமாக ஜப்பானில் உணவு தானியத்தின் விலை இந்தியாவில் இருப்பதைப் போல் இரண்டரை மடங்காகும். அங்கு சராசரியில் ஓர் ஏக்கருக்கு இந்தியாவைவிட அதிகம் விளைந்தும்—ரசாயன உரத்தின் விலை நம் நாட்டைவிட அங்கு குறைவாக இருந்தும்—உற்பத்திச் செலவு அதிகமாக இருப்பதால் விலை இவ்வளவு அதிகமாக உள்ளது. எனவே, சராசரி விளைச்சல் குறைவாக உள்ள இந்தியாவில், மூலதனச் செலவை மிகவும் அதிகரிக்கச் செய்யும் 'ஜப்பான்-பாணி நில உடைமை'களை ஏற்படுத்தினால் இன்று ஜப்பானில் இருக்கும் விலையைவிட நம் நாட்டில் மும்மடங்கு விலை உயரும் என்கிறது 'தினமணி'—அதாவது இப்போது நம் நாட்டில் தாங்க முடியாதவிருக்கும் உணவு தானியங்களின் விலை இதைப் போல் ஏழரை மடங்காகும்!

நில உடைமை என்ற ஒன்றை மட்டும் வைத்து ஜப்பானை உதாரணம் காட்டுவது சிறிதும் பொருந்தாது. ஜப்பான் தொழில் வளம் பெருகிய நாடு. அங்கு உயர்ந்த விலையை மக்களால் தாங்க முடிகிறது. அந்த நிலை இந்தியாவில் ஏற்பட்டாலும்கூட இந்த நிலச் 'சீர்திருத்தம்' கண் துடைப்பாகவே இருக்கும். ஏனெனில் நம் நாட்டின் கோடானு கோடி உழவுத் தொழிலாளருக்கு நிலம் தருமளவுக்கு இங்கு ஒருபோதும் உபரி கிடைக்காது. தமிழகத்தில் பஞ்ச நிலைமை ஏற்பட்டுள்ளது என்று அவசர உணர்வுடன் கூறும் அரசாங்கத்தினர், விவசாயிகளுக்கு ஊக்கமும் உற்சாகமும் ஏற்படுத்தி, இப்போதுள்ள உற்பத்தியைப் பெருக்குவதில் கவனம் செலுத்தவேண்டியிருக்க, மேலும் ஊக்கத்தைக் குறைத்தால் அது பரிதாபகரமாகும்.

# என்ன சேதி?

## லாட்டரி மயம் ஜகத்!

இதுகாறும் லாட்டரி நடத்தாத ராஜ்யங்களும் இனி லாட்டரி நடத்தத் திட்டமிட்டு வருகின்றன.

சர்க்கார் செலவுக்குப் பணம் திரட்ட லாட்டரி நடத்துவதாகக் கூறுகின்றன, லாட்டரி நடத்தும் ராஜ்யங்கள்.

''எங்கள் ராஜ்ய மக்களின் பணம் லட்சக் கணக்கில் லாட்டரிநடத்தும் ராஜ்யங்களுக்குப் போகின்றன. நாங்களே அந்த லாட்டரியை நடத்தினல் எங்கள் ராஜ்ய மக்களின் பணம் எங்கள் சர்க்காருக்கே கிடைக்கும் அல்லவா?'' என்று கூறி இதுகாறும் லாட்டரி நடத்தாத ஒன்றிரண்டு ராஜ்யங்களும் லாட்டரி நடத்தப் போகின்றன.

## கம்யூனிஸ்ட் பல்டி

கம்யூனிஸ்டுகள் சுதந்திரக் கட்சியினராகி வருகிறார்கள் என்று சொன்னல் வியப்பாக இருக்கும். அதிலும் கம்யூனிஸ்டுகளிலேயே தீவிர வங்கக் கம்யூனிஸ்ட் தலைவர் சுதந்திரக் கட்சி சொல்லி வரும் கருத்தை வெளியிட்டிருக்கிறார். நான்காவது திட்டத்தை அமுல் படுத்துவதை இன்னும் ஒரு வருஷத்துக்குத் தள்ளிப் போடும்படி புதிதாகப் பதவிக்கு வந்துள்ள வங்க உதவிப் பிரதமர் ஜோதி பாசு மத்திய சர்க்காரைக் கோரியிருக்கிறார்.

''திட்டம் வேண்டும்'' என்று சொல்பவர்கள் தீவிர முற்போக்குவாதிகள் என்றும், ''திட்டத்தைத் தள்ளிப் போட வேண்டும்'' என்று சொல்பவர்கள் பிற்போக்குவாதிகள் என்றும் கம்யூனிஸ்டுகள் கூறி வந்தார்கள். இப்பொழுது பதவிக்கு வந்தவுடன், சுதந்திரக் கட்சிதான் தீவிர முற்போக்குக் கட்சி என்று புலப்பட்டது போலும்!

ஆனல் உண்மை என்ன? இப்பொழுது நான்காவது திட்டத்தை அமுல்படுத்தத் தொடங்கினல் வங்க சர்க்கார் உடனடியாகப் புதிய வரிகள் போட வேண்டி யிருக்கும். பதவிக்கு வந்ததும் வராததுமாக வரி போடத் தொடங்கினல் மக்கள் வெறுப்புக் கொள்வார்கள். ஏற்கனவே மக்கள் மத்திய சர்க்காரின் வரிகள் கட்ட முடியாமல் திணறி வருகிறார்கள். இன்னும் புதிய வரிகள் போட்டால் மக்களால் தாங்க முடியாது என்ற பிரத்தியட்ச உணர்வு ஏற்பட்டதால் மேற்கண்ட விதம் கம்யூனிஸ்ட் மந்திரி பேசியிருக்கிறார்.

பதவியில் இருக்கும்போது ஒரு பேச்சு, எதிர்க்கட்சியாகப் பணியாற்றும்போது வேறொரு பேச்சு. இது கம்யூனிஸ்ட் கட்சியின் அரசியல் நீதி.

## டிட்டோவின் கண்டனம்

மார்ஷல் டிட்டோ யுகோஸ்லேவிய நாட்டின் ஜனதிபதி. ஒரு முக்கியமான கம்யூனிஸ்ட் தலைவர். ஐரோப்பாவில் ருஷ்யாவுக்குச் சமீபமாக உள்ளவர். அவரே, ருஷ்யாவும் வார்ஸா உடன்படிக்கை நாடுகளும் செக்கோஸ்லோவேகியா மீது படையெடுத்தது பற்றி மிகவும் கண்டித்துத் துணிகரமாகப் பேசியிருக்கிறார். கம்யூனிஸம், ஸ்டாலினின் கொடுங்கோன்மைக்குத் திரும்புவது தவறு என்று கூறுகிறார். 'கம்யூனிஸ உலகுக்கு ருஷ்யாதான் ஒரே தலைமை நாடு; ருஷ்யத் தலைவர்கள் வகுக்கும் கம்யூனிஸ ஆட்சிமுறையைத்தான் அனைவரும் கடைப்பிடிக்க வேண்டும்' என வற்புறுத்துவது தவறு என்றும் தைரியமாகக் கண்டித்திருக்கிறார்.

செக்கோஸ்லோவேகியாவில் சுதந்திர வேட்கை மிக்க இளைஞர்கள், ருஷ்யப் படைகள் தங்கள் மண்ணில் இன்னும் இருப்பதைக் காணச் சகியாமல் பிராணத் தியாகம் செய்து வருகிறார்கள்.

ருஷ்யா உலகக் கண்டனத்தை எத்தனை நாட்கள்தான் தாங்க முடியும்?

# ராஜாஜியின் கருத்துக்கள்

கிழக்குப் பாகிஸ்தானில் மக்கள் வன்முறைச் செயல்களில் ஈடுபட்டிருப்பதையும், அராஜக நிலை ஏற்பட்டிருப்பதையும் பயங்கரமான விஷயமாக இந்தியா கவனத்தில் கொள்ள வேண்டும். இந்தியாவின் கிழக்கு வாசற்படியில் ஓர் ஆபத்தான போக்கு வளர்ந்து வருகிறது. இப்போது கம்யூனிஸ்ட்கள் மேற்கு வங்க மக்களைக் குழப்பும் உத்தேசத்துடன், 'ஐக்கிய வங்காளமே, விழித்தெழு' என்று கோஷிக்கத் தொடங்குவார்கள். இப்படிப்பட்ட நிலை வலுத்தால் இரண்டில் ஒன்று நடக்கும்: வங்காளம் முழுவதும் ஆசியக் கம்யூனிஸ சாம்ராஜ்யத்துக்குள் அடங்கிவிடும்; அல்லது வங்காளத்தில் முஸ்லீம்களின் பெரும்பான்மை ஆட்சி ஏற்படும்.

கிழக்குப் பாகிஸ்தானில் ஏற்பட்டுள்ள மக்களின் வன்செயல்களையும் அராஜக நிலையையும் ஜனதிபதி அயூப் விரைவிலேயே அடக்கிவிட முடியும். சர்வாதிகாரி ஒருவரின் கீழுள்ள சர்க்கார் வன்செயலில் இறங்கினல் மக்களின் வன்செயலை எளிதில் அடக்கிவிடலாம். அயூப்கான் விரைவில் ஓய்வுபெறுமுன் சட்டசபை ஜனநாயகம் ஏற்படுத்துவதாகச் சொல்லி, இப்போது தாம் காபந்து சர்க்காரே நடத்துவதாகக் கூறியிருப்பதிலும் அநுகூலம் உண்டு.

ஆனல் இந்தியாவைப் பொறுத்தமட்டில், குழப்பமான உணர்ச்சிகளின் தயவில் மேற்கு வங்கத்தின் தொழில்களையும், பொதுநலத்தையும் விட்டு வைப்பதற்கில்லை. இன்றைய மேற்கு வங்க அரசாங்கம் தனது வறட்டுக் கொள்கையையும், கட்சிக் கோஷத்தையும் விடுவதற்கு உறுதி பூண வேண்டும். ஏகாதிபத்தியப் போக்கற்ற, உறுதியான சட்டசபை ஆட்சி முறையைத் தான் பின்பற்ற விரும்புவதாகவும், அதற்குத் தனக்கு

ஆற்றல் உண்டு என்பதையும் மேற்கு வங்க சர்க்கார் நிரூபித்தாக வேண்டும்.

★

ராஜ்யங்களில் கவர்னர் பதவி இருக்க வேண்டும் என்பது அரசியல் சாஸன விதி. ஆனால் இப்பதவி வகிப்பவரை அவமரியாதை செய்கிற போக்கு ஏற்பட்டு, இதை ராஜ்ய மந்திரி சபையே ஊக்குவது என்றால், அதன்பின் கௌரவம் வாய்ந்த எவரும் கவர்னர் பதவி ஏற்பதற்கே இசையாமலிருக்கக் கூடும். இப்படிப்பட்ட நிலை ஏற்படுமாயின், அப்போது சம்பந்தப்பட்ட ராஜ்யம் ராஷ்டிரபதி ஆட்சிக்கு அழைப்பு அனுப்பி விட்டது என்றே கொள்ளலாம். இத்தகைய சந்தர்ப்பத்தை உண்டாக்குவது, சாஸனத்தைப் புறக்கணிப்பதற்குச் சமானம். சாஸனத்தை எதிர்த்துச் செய்கிற கிளர்ச்சி என்று கூடச் சொல்லலாம்.

★

துணைப் பிரதமர் மீது சாட்டப்பட்ட பழிக்காக ஒழுங்கு நடவடிக்கை எடுக்கப்பட மாட்டாது என்றும், இந்த உஷ்ணமான விஷயம் ஆறிப் போவதற்கு அவகாசம் தரப்படும் என்றும் அறிகிறோம். நாம் வெளியிடுகிற ஆசைகளுக்குத் தொடர்பின்றி, காலம் தன்பாட்டில் செயல்களை உண்டாக்கும். இப்போது காலம் துணைப் பிரதமரின் மீது மாசு ஏற்படுத்தி விட்டது. அவமரியாதைக்கு ஆளானபின்னும் விலகாமல் ஒட்டிக் கொண்டிருப்பதிலேயே அவர் கவனமாக இருப்பது போல் தோன்றுகிறது. பொறுத்துக் கொள்வது பெரிய சிலம்தான். ஆனால் பொறுத்துக் கொண்டிருக்கும் இடைக்காலத்தில், பழி சுமத்தியவர் ஒரு மதிப்புக்குகந்த தலைவர் போல் வளர்ச்சி பெறுவதை மறப்பதற்கில்லை.

காங்கிரஸ் கட்சி சொந்த விருப்பு வெறுப்புக்களை முன்னிட்டு உதிரிக் கும்பல்களாகப் பிரிந்திருக்கிறது என்பதும், இந்த உதிரிக் கும்பல்கள் யாவும் பிரதமர் என்கிற தொய்ந்த பட்டு இழையிலேயே கோக்கப் பட்டுப் படாடோபமாகக் காட்சி தருகின்றன என்பதும் பொதுவாக ஏற்பட்டுள்ள கருத்து.

★

பெரிய பரிசுகளில் தங்கள் அதிர்ஷ்டத்தை மக்கள் பரீட்சை பார்த்துக் கொள்ளுமாறு தூண்டிவிட்டு, லாட்டரி நடத்திச் சர்க்காருக்குப் பணம் திரட்ட ராஜ்யங்களுக்குச் சாஸனத்தின் கீழ் அதிகாரம் இல்லை என்பது என் வாதம். வெற்றிக்கு லட்சத்தில் ஒரு வாய்ப்பே இருக்கிறது. எனினும், இதில் மக்களைப் பணம் போடத் தூண்டுகின்றனர்.

ராஜ்யங்கள் லாட்டரி நடத்துவது சட்டப்படி சரியா என்ற கேள்வி எழும்போது, ஒரு ராஜ்யத்தின் அதிர்ஷ்டச் சீட்டுக்களை இன்னொரு ராஜ்யத்தில் விற்பதை மட்டும் தண்டனைக்குரியதாகச் செய்யும் நோக்கத்துடன் 'பீனல் கோட்' விதிகளைத் திருத்த மத்திய சர்க்கார் சட்டம் கொண்டு வரப் போவதாகத் தெரிகிறது. இப்படிச் சட்டம் கொண்டு வந்தால், அதுவே ராஜ்யங்கள் தங்கள் எல்லைக்குள் நடத்திக் கொள்ளும் லாட்டரிகள் சட்டப்படி செல்லத்தக்கன என்று மறைமுகமாக ஒப்புக் கொண்டதாகும். ராஜ்ய அரசாங்கங்கள் வருமானத்துக்காக லாட்டரிகள் நடத்துவதை அநுமதிப்பதாயின் அரசியல் சாஸனத்தையே திருத்த வேண்டும். 'பீனல் கோட்' திருத்தம் என்கிற புறக்கடை வழியால் அதைச் செய்ய முடியாது.

★

உத்தரப் பிரதேச எம். எல். ஏ. க்களில் ஆறு பேர்கள் ஹிந்தியில் விசுவாசப் பிரமாணம் எடுத்துக் கொள்ள மறுத்து, தங்களது தாய்மொழியான உருதுவிலேயே பிரமாணம் எடுத்துக் கொள்ள உரிமை கோரியுள்ளனர். இச்சம்பவம் கவனத்துக்குரியது என்பது மட்டுமல்ல; இதைப் பாராட்டி வரவேற்க வேண்டும். அரபு மொழி, பெர்சிய மொழி, சம்ஸ்கிருதம் மூன்றும் இயற்கையாக இசைந்ததில் உண்டான மொழி உருது. அது ஓர் அழகிய மொழி. மொகலாயக் கட்டடக் கலை போல் அது இந்தியாவில் பிறந்த ஒன்று. மொகலாய ஆட்சியின் மற்ற மகத்தான நினைவுச் சின்னங்களுக்குரிய மரியாதையை உருது பாஷைக்கும் செலுத்த வேண்டும்.

★

நம் நாட்டில் தனிமனிதர்களின் ஐம்பத்து மூன்று குட்டி ராணுவங்கள் இருப்பதாக அதிகாரபூர்வமாக அறிகிறோம். (இவற்றுள் சிவசேனைக்கே மிக அதிக அங்கத்தினர் — 80,500 பேர் உள்ளனர்.) இது சமாதானத்துக்கோ அபிவிருத்திக்கோ நன்மை பயக்கும் விஷயமல்ல. இந்தச் சேனைகள் அரசியல் நோக்கங்களுக்காக ஏற்பட்டவை. இவற்றிலிருந்து சொந்தப் பயன் அடையவே சில அரசியல் தலைவர்கள் இவற்றை முன் நின்று நடத்துகின்றனர். விஷய ஞானம் போதாதவர்களும், பசிக் கொடுமைக்கு ஆளானவர்களுமான மக்கள் மிகுந்துள்ள நம் நாட்டில் இது போன்ற சேனைகளால் எவ்வளவு தீமை விளையும் என்று முன்கூட்டி ஊகிப்பதற்கில்லை.

★

தொழில் நிறுவனத்தார், வர்த்தக சமூகத்தினர், சில்லறை வியாபாரிகள் ஆகியோரை இந்திய அரசாங்கமும், அதிகாரிகளும் எப்படி நடத்துகின்றனர் என்று பார்த்தால் குற்றவாளிகளைப் போலீசார் நடத்துவதைப் போல்தான் இருக்கிறதேயன்றி, நாகரிக மக்களை ஒரு சர்க்கார் நிருவகிப்பது போல் தோன்றவில்லை. சர்க்காருக்கும் அதன் முக்கியமான மக்கட் பிரிவினருக்குமிடையே நிலவ வேண்டிய தொடர்பு இப்படிப்பட்டதல்ல. ஒரு சாரார் மரியாதையும் விசுவாசமும் காட்டினால், எதிர்த் தரப்பினரும் அதையே திரும்பச் செலுத்துவர். 'வியாபாரிகள் யாவரும் திருத்த முடியாத குற்றவாளிகளாக உள்ள ஒரு நாடு இந்தியா' என்ற ரீதியில் எண்ணக் கூடாது. தொழில் துறையினரிடம் கண்டிப்பான போலீஸ் மனப்பான்மை காட்டும் போதே, தேசத்திலுள்ள நாச வேலைக்காரர்களிடம் அரசாங்கம் மன்னிக்கவொண்ணாத பலவீனத்தைக் காட்டி வருவது விசித்திரம்.



# கானகத்தில் ஒரு கோயில்



சுமார் நூற்றியெட்டு ஆண்டுகளுக்கு முன்னால் ஒருநாள் நண்பகல் வேளை. உடலைச் சுட்டெரிக்கும் வெய்யிலின் கொடுமை தாங்காது கம்போடிய நாட்டின் அடர்ந்த கானகங்களிடையே சென்றுகொண்டிருந்தார் ஒருவர். போதாக் குறைக்கு வழி தெரியாது சிக்கி அங்கங்கு ஏதாவது பாதை புலப்படுகிறதா என்று அலைந்தும் கொண்டிருந்தார். பிரான்ஸ் நாட்டு இயற்கைவள அறிஞர் அவர். பெயர் ஹென்றி மாஹுட். திடீரென்று ஓரிடத்தில் சிலை போல் திகைத்து நின்றார்.

அவர் எதிரே இருபதடி உயரத்துக்குப் பிரம்மாண்டமான, ஆனால் காலத்தின் கோலத்தால் சிதைந்து போன கற்சிலை ஒன்று கம்பீரமாக நின்று கொண்டிருந்தது. அது என்னவென்று உடனே அவரால் சொல்ல இயலவில்லை. மாஹுட் இந்த அடர்ந்த கானகத்தில் இந்தக் கற்சிலை எப்படி வந்து சேர்ந்தது என யோசித்தார். நெற்றியிலிருந்து கால் வரை கால்வாயாக உருண்டோடும் வேர்வை வெள்ளத்தைக் கூடப் பொருட்படுத்தாமல் அவர் சிலை இருந்த பிரதேசத்தைச் சுற்றி அலைந்தார். அப்படிச் சில மணி நேரம் சுற்றியதன் விளைவாக இன்று கம்போடிய நாட்டுக்கே பெருமை தரும் அங்கோர் வாட் ஆலயம் அவரால் கண்டுபிடிக்கப்பட்டது.

'கானகத்தில் கண்டெடுக்கப்பட்ட ஒரு கலைக் கோயில்' என வரலாற்றாசிரியர்களால் பின்னால் வர்ணிக்கப்பட்டது அங்கோர்வாட் ஆலயம். ஆனால் அன்று அது மாஹுட்டுக்கு எவ்வாறு காட்சியளித்தது தெரியுமா? மகத்தான ஐந்து கோபுரங்களையும் மிக நீளமான பிராகாரங்களையும் கொண்ட அக்கோயில் நண்பகல்! கதிரவனின் கொடிய கிரணங்கள் பட்டதால் அதன் பழுப்பு நிறம் இரத்தச் சிவப்பாக மாற "ஏன் யாரும் என்னை இன்னும் கவனிக்கவில்லை?" யென எரிமலையாகப் பொங்கிக் கேட்பதைப் போலத் தோன்றியது! கண்ட அக்கணமே தம்மை மறந்தார் மாஹுட். தமது தொழிலையும் மறந்தார்!

பேரறிஞர் சார்லஸ் டார்வினைப் போல் உலகத்திலுள்ள விசித்திரமான ஜீவ ஜந்துக்களைக் கண்டுபிடித்து அவற்றைப் பற்றி ஆராய்வதையே தம் தொழிலாகக் கொண்டிருந்தவர் மாஹுட். ஆனால் இப்போது தாம் வந்த காரியத்தை விட்டு விட்டுக் கானகத்தில் புதைந்து கிடந்த அந்த மகத்தான சிற்பக் குவியல்களை உலகின் பார்வைக்குக் கொண்டு வரவேண்டும் என முயன்றார். அவரது எண்ணம் 1907ம் ஆண்டில்தான் நிறைவேறியது. அப்போது கம்போடியாவை ஆண்ட பிரெஞ்சு அரசாங்கம் கானகத்தின் பிடியிலிருந்துஅங்கோர்வாட்டை விடுவித்தது.

இதன் பின்னர் 1963ம் ஆண்டில் பெர்னார்ட் கிராஸ்லியர் என்ற பிரெஞ்சு அறிஞரின் முயற்சியால் சுமார் ஐம்பது லட்சம் ரூபாய்கள் பொருட்செலவில் அங்கோர்வாட் ஆலயம் முழுமையாக மீட்கப்பட்டது. அவரது முயற்சியை ஓர் இமாலய முயற்சி என்றே வர்ணிக்கலாம்.

காரணம்? நூற்றுக் கணக்கான ஆண்டுகளாக ஆலயத்தைக் கானகத்தில் உள்ள செடிகளும் கொடிகளும் மூடி மறைத்துக் கொண்டிருந்தன. அவற்றின் பிடியிலிருந்து ஆலயத்தை மீட்க வேண்டுமெனில் ராட்சத புல்டோஸர்கள், கிரேன்கள், புதிய பாலங்கள் எல்லாம் தேவைப்பட்டன. இந்தப் பணியில்

1. அங்கோர்வாட் விமானத்திலிருந்து பார்க்கையில் அளிக்கும் தோற்றம்.

2. அங்கோர்வாட் சிற்பங்கள்.

3. அங்கோர்வாட் இரவு நேரத்தில் மின்விளக்கொளியில்.

4. அங்கோர்வாட் முன் வாயில்.





ஆயிரக் கணக்கான தொழிலாளர் ஈடுபட வேண்டியிருந்தது. இந்த வேலையில் முன்னேற்றம் காணக் காணப் பல புதிய பிரச்னைகள் தோன்றின.

இதுநாள் வரை போர்வை போலிருந்து சூரியனின் கொடிய வெம்மையினின்று ஆலயத்தைக் காத்த செடிகளும் கொடிகளும் வெட்டப்பட்டதால் அங்கோர்வாட் கதிரவனின் கடும் சீற்றத்துக்கு உள்ளாயிற்று. அதன் பலனாக ஆலயத்தின் சுவர்களிலும் ஏராளமான சிற்பங்களிலும் கீறல்கள் விழுந்து அவை சின்னாபின்னமான நிலைக்கு வரத் தொடங்கின. அதனால் கிராஸ்லியர் அந்தச் சிலைகளை அப்படி அப்படியே தனித் தனியாக எடுத்துக் கான்க்ரீட்டால் அஸ்திவார மிடப்பட்ட இடங்களில் வரிசையாகப் பிரதிஷ்டை செய்தார்.

கிராஸ்லியர் செய்த இன்னொரு மகத்தான தொண்டு 660 அடி நீளமுள்ள கால்வாயைப் புதுப்பித்ததாகும். அக்கால்வாயின் இரு பக்கங்களிலும் 54 அற்புத கற்சிலைகளைப் பெயர்த்தெடுத்து வைத்து அந்தக் கால்வாய்க்கே தனி அழகை ஊட்டினார்.

அங்கோர்வாட் ஆலயச் சுவர்களிலெல்லாம் ராமாயணம், மகாபாரதம் ஆகிய இரு இதிகாசங்களில் உள்ள பல சுவையான நிகழ்ச்சிகள் கல் லோவியங்களாகச் செதுக்கப்பட்டுள்ளன. அது மட்டுமின்றி ஆலயத்தை அமைத்தவனுக் கருதப்படும் மன்னனான இரண்டாம் சூர்யவர்மனின் மரணக் காட்சிகளும் தத்ரூபமாகச் சித்திரிக்கப்பட்டுள்ளன.

கிட்டத் தட்ட பத்தாயிரம் சிலைகளைக் கொண்ட இந்த விஷ்ணு ஆலயத்தைப் பற்றி ஹென்றி மாஹாட், "கடந்த காலம் நமக்காக விட்டு வைத்துப் போன மிக அற்புதமான, மிக முக்கியமான, கலைத் திறமை மிக்க நினைவுச் சின்னம்" என வர்ணித்தார்.

— அ. இராமதுரை

## சந்தா நேயர்களுக்கு...



ஒவ்வொரு கல்கி இதழும் குடும்பத்தில் உள்ள நாலைந்து பேர்களால் படிக்கப்படுவதுடன் பக்கத்து வீட்டிலும் எதிர் வீட்டிலும் உள்ளவர்களையும் மகிழ்விக்கிறது.

பல பேர்கள் கல்கியைப் படிக்கும்போது அது நைந்து போகாமல் பத்திரமாகப் பாதுகாக்க உதவும் வகையில் உயர்ரக பிளாஸ்டிக் மேலட்டை ஒன்று தயாரித்திருக்கிறோம். இந்தப் பிளாஸ்டிக் அட்டையை ஓரிதழிலிருந்து அடுத்த கல்கி இதழுக்கு மாற்றிக் கொள்ளலாம். கல்கியின் ஆதரிச தெய்வமான விநாயகப் பெருமானின் சிறு திருஉருவத்தைத் தாங்கி அழகுறப் பொலியும் இம் மேலட்டையைக் கல்கி காரியாலயத்துக்கு ஓராண்டுச் சந்தா ரூபாய் இருபதை அனுப்பி வைப்பவர்கள் இலவசமாகப் பெறலாம்.

இச் சலுகை ஏப்ரல் முதல் தேதியிலிருந்து தொடங்கி மே இறுதி வரை நீடிக்கும். இக் கால கெடுவுக்குள் ஏற்கெனவே சந்தாதாரர்களாக உள்ளவர்களும் சந்தாவைப் புதுப்பித்துக் கொள்ளலாம். அவர்கள் சந்தா எந்த இதழிலிருந்து முடிகிறதோ அந்த இதழிலிருந்து ஓராண்டுக்குச் சந்தா நீடிக்கப்படும்.

**மானேஜர், கல்கி காரியாலயம், சென்னை-31** என்ற விலாசத்துக்குச் சந்தா அனுப்ப வேண்டும்.



# ஞாயிறு தோறும் ஞான ஒளி!

(சாம்பு நடராஜன் அவர்களின் ஜாகையில் ஒரு ஹால். அமெச்சூர் நாடகத் துறையுடன் அவருடைய முப்பது வருட நெருங்கிய உறவை நிரூபித்துக் கொண்டிருப்பதுபோல் சுவரில் பல நாடக மேடைக் காட்சிப் படங்கள் தொங்கிக் கொண்டிருக்கின்றன. இன்றைய நாடக நடிகர்களில் சிலரும் அமர்ந்து நடராஜனுடன் பேசிக் கொண்டிருக்கிறார்கள். நண்பர் ஒருவர் உள்ளே வருகிறார்.)

**சந்தானம் :** முதலில் இந்த லாண்டரிக்காரனை மாத்தணும்!

**நண்பர் :** சரியாய்ப் போச்சு! ஒவ்வொரு பிரதேசத்திலே மந்திரியையே மாத்தணும்னு தீர்மானம் போடறா! நீ குறைந்தபட்சம் ஒரு லாண்டரிக்காரரையாவது மாற்றலாம்னு பார்க்கிறயாக்கும்!

**சாம்பு நடராஜன் :** சந்தானத்தின் கோபத்துக்குக் காரணமிருக்கு! நேற்று நம்ப இன்ஸ்பெக்டர் வாரன்லோட காக்கி உடுப்பை இஸ்திரி போட மறந்துட்டான்! முதல் சீன்லேயே வீரராகவன் அந்த டிரஸிலே வரவேணும். எப்படியோ ஓடிப்போய் இஸ்திரி போட்டுக் கொண்டு வந்து நேரத்தோடு நாடகத்தை ஆரம்பிச்சுட்டோம்!

**நண்பர் :** அது சரி! இந்த ஞான ஒளி நாடகம் எப்படி உம்ம தயாரிப்புக்கு வந்து சேர்ந்தது? அதைக் கொஞ்சம் சொல்லுமே!

**சாம்பு நடராஜன் :** நாடகத்தை எழுதிக் கொடுத்த சுந்தரமே இதோ இருக்கிறார். அவரையே கேளுங்களேன்.

**சுந்தரம் :** என்னை மாட்டி விட்டீர்களாக்கும்!...அதோ மேஜர் சுந்தரராஜனே வந்து விட்டார்! இந்த நாடகத்தோட டைரக்டர் என்ற முறையிலே அவர் சொல்றது தான் உசிதம்!

**மேஜர்** (வந்து உட்கார்ந்து கொண்டு): நோ! நோ!... நம்ப சுந்தரத்துக்குக் கதை சொல்லும் திறமை ஜாஸ்தி. தாம் கற்பனை செய்து வைத்திருக்கிற பாத்திரங்களை அப்படியே தம் வார்த்தைகளாலே உணர்ச்சி நிறைந்த மனிதர்களாகவே நம் முன் கொண்டு வந்து நிறுத்திடுவார். சில கட்டங்களிலே 'மானோ ஆக்டிங்கே' பண்ணிடுவார். அவருடைய கதையின் கதையையும் அவரே சொல்லட்டும்!

**சுந்தரம் :** இனிமேல் தப்ப முடியாது. நானே சொல்றேன்.... மேஜரை ஒரு நாள் ஏதேச்சையாகச் சந்தித்த போது நாடகத்துக்கான கருப்பொருள் ஒன்று இருப்பதாகச் சொன்னேன். "அப்படியா? நாளைக்கே சந்திக்கலாம். நாடகக்கதையைச் சொல்லுங்கள். எங்கள் தேவைக்குப் பொருத்தமாக இருக்கிறதா என்று பார்த்துவிடலாமே?" என்றார் வெகு ஆதரவாக. எனக்குப் பெரிய 'ஷாக்' அடித்த மாதிரி இருந்தது.

**நண்பர் :** இதிலே என்னப்பா ஷாக்கு?

**சுந்தரம் :** நான் சொல்லயிருக்கிற கதை அவருக்குப் பிடித்திருக்க வேண்டுமே என்ற பயம் அப்பவே வந்துடுத்து. நம்ப கதை அவ்வளவு திருப்திகரமாக இல்லாதபோனால்அவர் மனசு சங்கடப்படுமே என்ற கவலை. மறுநாள் அவரைச் சந்திக்காமலே இருந்து விடலாமா என்றுகூட நினைத்தேன். ஆனால் ஒரு தினுசா மனத்தைத் திடப்படுத்திக் கொண்டு அவரைச் சந்தித்தேன்.

**மேஜர் :** இனிமேல் நான் சொல்றேன். அவர் சொன்ன கதை எனக்குப் பிடிச்சுப் போச்சு. காரணம், 'பெக்கெட்' என்ற ஆங்கிலப் படத்தைப் பார்த்த பிறகு சமூகத்திலே வெவ்வேறு நிலையிலே இருந்தாலும் நண்பர்களாகவே இருக்கும் இரு நபர்களில் ஒருவரின் பாத்திரம் ஏற்று நடிக்க வேண்டும் என்று எனக்கு ஆர்வம் பிறந்திருந்தது. சுந்தரம் சொன்ன கதையில் அந்தோணி எனக்கு அந்த வாய்ப்பைக் கொடுப்பான் என்று தோன்றியது. கதையைக் காட்சி அமைப்புகளாக எழுதச் சொல்லி விட்டேன்.

**சுந்தரம் :** இந்தக் கதைக்குக் காரணகர்த்தா ஒருவர் உண்டென்றால் அவர் பூண்டியில் உள்ள மாதா கோவில் பாதிரியார். ஐந்தாறு வருடங்களுக்கு முன், நான் கம்யூனிஸ சித்தாந்தங்களைப் படிப்பதில் லயித்து வேலை வெட்டி இல்லாமல் அலைந்துகொண்டிருந்தேன். அப்போது என் உறவினர் ஒருவர் என்னைப் பூண்டியில் உள்ள மாதா கோவிலுக்கு அழைத்துச் சென்றிருந்தார். அங்குள்ள பாதிரியா

---

படம் : அடைக்கலம் பாதிரியாராக அருமையாக நடிக்கும் கோகுல்நாத்.

ரைச் சந்திக்கும் வாய்ப்பும் கிடைத்தது. அமைதி நிறைந்த முதியவர். 'தம்பி உனக்குத் தெய்வ நம்பிக்கை உண்டா?' என்றுதான் முதலில் கேட்டார். இல்லை என்று தலையை ஆட்டினேன். அன்றைய மனநிலை அது. அப்புறம் அவர் எனக்கு விக்டர் ஹியூகோவின் 'லே மிரபிளே' கதையைச் சொன்னார். பிறகு ஒரு சிறு பிரார்த்தனைக் கீதத்தைச் சொல்லி, எனக்குத் தெய்வ நம்பிக்கை ஏற்படலாம் என்று தோன்றினால் அதை நினைவு படுத்திக் கொள்ளவும் சொன்னார்.

அன்று பூண்டியில் நான் கண்ட சூழ்நிலை, சாந்தம் தவழும் அந்தப் பாதிரியார், அவர் சொன்ன கதை எல்லாமே என் மனத்தை வியாபித்துக் கொண்டன. இதை வைத்து ஒரு நாடகம் எழுத ஆசையும் எழுந்தது. எழுத ஆரம்பித்தேன். ஆனால் ஆரம்ப கட்டத்திலேயே அதை அப்படியே தள்ளியும் வைத்து விட்டேன். வேறு நாடகங்களில் கவனம் சென்று விட்டது. பின்னால் மேஜரிடம் கதை சொல்ல வந்தபோது அந்தப் பழைய கதையை இன்னும் கொஞ்சம் மாற்றிச் சொன்னேன். இதற்கும் 'லே மிரபிளே'க்கும் சூழ்நிலை தான் ஒற்றுமையே தவிர கதைப் போக்கில் அல்ல என்று அவர் ஒப்புக் கொண்டார். இந்தக்



நாடகம் ஆரம்பமாவதற்கு முன்னால் கடைசி நிமிஷ ஆலோசனை. இடமிருந்து வலம்: சந்தானம், மேஜர் சுந்தரராஜன், வியட்நாம் வீடு கே. சுந்தரம், சாம்பு என். எஸ். நடராஜன்.

கதையில் மாதா கோயில் உண்டு. பாதிரியார், மாதா கோவில் சிப்பந்திகள் எல்லாருமே வருகிறார்கள். ஆனால் நான் கிறிஸ்துவ சமூகத்தைச் சேர்ந்தவன் அல்ல. ஆகவே, காட்சி அமைப்பையும், வசனத்தையும் எழுதுவதற்கு முன்னால் நான் திருமுல்லைவாயிலுக்கு அருகிலுள்ள மாதா கோவிலுக்கும் சாந்தோமிலுள்ள மாதா கோயிலுக்கும் பல தடவைகள் போய், கிறிஸ்துவ சமூகத்தைப் பற்றியும் பிரார்த்தனை முறைகள் பற்றியும் நேரடியாகத் தெரிந்துகொண்டு வந்தேன். பிறகு எழுதி முடித்து மேஜரிடம் கொடுத்தேன். அவர் உசிதம் போல் மாற்றிக் கொள்ளலாம் என்றும் தெரிவித்தேன். டைரக்டர் அவரல்லவா!

**மேஜர்:** நாடகத்தை மேடைக்கேற்ப அமைத்தாயிற்று. அதற்கு ஒரு பெயர் வேண்டாமா? 'சரணாலயம்' என்று சுந்தரம் பெயர் கொடுத்திருந்தார். 'சாத்தானும் தேவனே' என்ற பெயர் எனக்குப் பிடித்திருந்தது. ஆனால் இதற்கு என் நண்பர்கள் மறுப்புத் தெரிவித்தார்கள். அதற்கப்புறம் 'ஞான ஒளி' என்ற பெயரைத் தேர்ந்தெடுத்தேன். 'சரணாலயம், ஞான ஒளி' என்று இரண்டு சீட்டுக்களில் எழுதி மடித்துப் போட்டு என் சகோதரனின் பெண்ணை விட்டு எடுக்கச் சொன்னேன். 'ஞான ஒளி'யை அவள் எடுத்தாள். இப்படித்தான் நாங்கள் எங்கள் முந்தைய நாடகங்களின் தலைப்புக்களையும் பொறுக்கியிருக்கிறோம். 'தீர்ப்பு'ம் 'ஒரு பொய்'யும்கூட இப்படி வந்தவைதான். நான்கெழுத்துத் தலைப்புக்கும் 'என்னெஸ்ஸன்' தியேட்டருக்கும் நல்ல உறவு உண்டு என்று நான் நம்புகிறேன். நகைச்சுவைப் பகுதியை உருவாக்கிக் கொடுத்தவர் எங்க குழுவிலுள்ள டி. பி. நடராஜன். இரண்டு மொட்டைக் கடுதாசிக் கனவான்களைப் புகுத்திக் கலகலப்பாக்கினார்.

மறுபிறவி எடுத்த அந்தோணி — இன்ஸ்பெக்டர் லாரன்ஸ். மேஜர் சுந்தரராஜனும் வீரராகவனும்.



**சுந்தரம்:** நாடகத்திலே வர டாக்டரைக் கூட நான் ஒரு கிறிஸ்துவராகத்தான் கற்பனை செய்திருந்தேன். ஆனால் மேஜர் அந்தப் பாத்திரத்தை ஒரு ஹிந்துவாக இருக்க வேண்டும் என்று விரும்பினார். அப்போதுதான் ஒரு நல்ல 'டிராமாடிக் காண்ட்ராஸ்ட்' கிடைக்குமென்று நம்பினார். இப்படித்தான் டாக்டர் சரவணன் உருவானார்.

**மேஜர்:** அவரை முருகபக்தராகவும் மாற்றினேன். எனக்கு அறிமுகமான ஒரு நண்பர் அடிக்கடி இதயபூர்வமான பக்தியுடன் 'உமையவளே! உமையவளே!' என அழைப்பார். நாடகத்தில் டாக்டர் சரவணன் முருகனை அழைக்கிறார்.

**சாம்பு நடராஜன்:** டாக்டர் சரவணன் சுலபமாக முருகனைக் கூப்பிடுவார். ஆனால் அவ்வளவு சுலபமாக

நாடக 'செட்'களைத் தயாரிக்க முடியுமா? எங்கள் 'ஆஹி வந்த' டைரக்டர் ரங்கண்ணு முதல் நாடக தேதிக்கு ஒரு வாரத்துக்கு முன்னல்தான் வெளி ஊரிலிருந்து வந்து சேர்ந்தார். மாதாகோவில் செட்டுக்கள் பிரமாதமாகவும், புனிதத் தன்மையோடும் அமைய வேண்டுமே என்ற கவலை எங்களுக்கு. ராமசாமி நாயுடு சன்ஸ் நிறுவனத்தார் இரவு பகலாக உழைத்துப் பிரமாதமாகக் காட்சியமைப்புக்களைத் தயார் செய்து விட்டார்கள். எங்கள் மியூஸிக் பார்ட்டியில் 'மேனர்ட்' என்ற கிறிஸ்துவ அன்பர் ஒருவர் இருக்கிறார். அவர் பல இடங்களுக்குச் சிரமத்தைப் பார்க்காமல் போய், தேவையான மாதாகோவில் சம்பந்தப்பட்ட பொருள்களை வாங்கி வந்தார். பாதிரியார் உட்காருவதற்கென்று ஒரு பிரம்பு நாற்காலியை நாங்களே பண்ணச் செய்தோம்!

**மேஜர் :** மாதா கோவில் மணியைப் பற்றிச் சொல்ல மறந்து விட்டீர்களே! எங்கிட்டே 'தீர்ப்பு' நாடகத்துக்காக வாங்கி வைத்திருந்த அம்மன் கோவில் மணி இருக்கிறது. ஆனல் அந்த மணியின் ஒலி மாதாகோவில் மணிநாதத்தை ஒத்திருக்காது என்று சொல்லி விட்டார்கள். மேலும் மாதா கோவில் மணி, மகிழ்ச்சிக்கும், துக்கத்துக்கும் மாறுபட்டு ஒலிக்க வேண்டும். திரைப்பட இசைக் குழு ஒன்றிடம் மேலை நாட்டு இசைக் கருவி ஒன்று இருப்பதாகக் கேள்விப் பட்டோம். வெவ்வேறு உயரங்களில் எட்டு உலோகக் குழல்கள் பொருத்தப்பட்ட கருவி அது. அதில் இரண்டு குழல்களை நாங்கள் வாங்கி வைத்திருக்கிறோம். அவற்றின் மேல் மரச் சுத்தியலால் பக்குவமாக அடிக்கும்போது மாதா கோவில் மணி ஓசை எழுகிறது. ஒவ்வொரு நாடகத்துக்கும் குறிப்பிட்ட தொகையை நாங்கள் அந்த வாத்தியக் குழுவுக்குக் கொடுத்து விடுகிறோம்.

**சந்தானம் :** முதல் நாடகத் தேதிக்கு முன்னலே மூன்று நான்கு நாட்கள் நாங்கள் இறுதி ஒத்திகைகளை மயிலாப்பூர் ஃபைன் ஆர்ட்ஸ் அரங்கத்திலேயே வைத்துக் கொண்டோம். அங்கேதான் அரங்கேற்றமும் நடந்தது. இரவு ஒன்பது மணிக்கு ஆரம்பித்தால் காலை நான்கு மணி வரைகூட நடக்கும். அரங்கத்துக்குப் பக்கத்தில் இஸபெல் ஆஸ்பத்திரி. இரவு பத்து மணிக்கு மேல் இரைந்து பேசினல் அவர்கள் சண்டைக்கு வந்து விடுவார்கள். ஆகையால் ஒத்திகைகளின் போது வசனங்களை ரகசியம் பேசும் குரலில் சொல்வோம். எதிரே யாரேனும் இருந்தால் அவர்களுக்கு அந்த நாளைய மௌன சினிமாப் படம் பார்ப்பது போலவே இருந்திருக்கும்!

**நண்பர் :** மாதாகோயிலையும் பாதிரியாரையும் வைத்துக் கதை புனைந்து நடித்துக் காட்டும் போது ஓரளவு அதிகமான, சிரத்தையும், குற்றச்சாட்டுகளுக்கு இடம் கொடுக்காத உழைப்பும் வேண்டும் என்பதை உணர்ந்திருப்பீர்களே!

**மேஜர் :** கரெக்ட்! ஆனல் இந்த 'ஞான ஒளி'யில் மதத்தைவிட மனிதாபிமானத்துக்குத்தான் முக்கியத்துவம். ரசிகர்கள், பாத்திரங்களின் எளிய சுபாவங்களிலும், அவர்களுடைய போலித்தனமற்ற ஆசாபாசங்களிலும் மனத்தைப் பறி கொடுத்து விடுகிறார்கள். ஏன்! காட்சி ஆரம்பமாகத் திரை விலகியவுடன், அரங்கத்தில் அலட்சியமாக உட்கார்ந்திருப்பவர்களெல்லாம் தங்களை மறந்து, புனிதமான மாதா கோவிலுக்கு வந்துவிட்டது போல் நிமிர்ந்து உட்காருகிறார்கள். முதல் காட்சியே அமலோத்பவ மேரி மாதா சன்னதிதானே!

**சாம்பு நடராஜன் :** அது மாத்திரமா?.... அடைக்கலம் சாமியார் வேஷம் தாங்கும் நம்ப கோகுல்நாத்தை, அன்றைக்கு நாடகம் முடிந்ததும், ஒரு பாதிரியார் உள்ளே வந்து அப்படியே அணைத்துக் கொண்டு, "உங்களைப் போல இரண்டு பாதிரிமார்கள் நிஜ வாழ்க்கையில் இருந்தால் சர்ச்சை மறந்தவர்களெல்லாம் நிச்சயம் சர்ச்சுக்குப் போகும் பழக்கத்தை மேற்கொள்வார்கள்" என்று நாத் தழுதழுக்கக் கூறினர்.

**சுந்தரம் :** அந்தோணி பாத்திரத்துக்கு மேஜர் உயிர் கொடுத்து விட்டார். என் கற்பனையைவிடப் பல மடங்கு அதிகமாகவே உயர்த்தி விட்டார். உணர்ச்சி பரவசமாகிச் சில சந்தர்ப்பங்களில் தம் கைவிரல்களில் அரிவாளால் காயம் ஏற்படுத்திக் கொண்டிருக்கிறார்.

**மேஜர் :** நானும் எவ்வளவோ நாடகங்களிலே நடித்திருக்கிறேன். ஆனல், இந்த நாடகத்திலேதான், கடைசித் திரை விழுந்த பிறகும் பெரிய பாரத்தைச் சுமப்பது போல் உணர்கிறேன். அந்தோணியின் குண இயல்பு அப்படி நெஞ்சை அழுத்துகிறது. சுந்தரராஜ

## சிந்தனைக்கு!

எதைப் படிக்க வேண்டும் என்று நினைத்துக் கொண்டே ஆனல் படிக்காமலேயே இருக்கிறார்களோ, அதுதான் காவியம். — **கரனெட்**

— **பாபு**

ஃ ஃ ஃ

காசால் பெறுவது அற்பம். மனசால் பெறுவது சொர்க்கம்.

ஃ ஃ ஃ

முட்டாள், புத்திசாலி யாவருமே நிழலின் அருமையை உணருவார்கள். அதிலே இதுதான் வித்தியாசம்: புத்திசாலி நிழலில் இருக்கும்போது அதன் அருமையை வியந்து மெச்சுவான்; முட்டாள் வெளியே சென்று வெய்யிலில் அடிபட்டு வதங்கித் திரும்பி வந்து நிழலின் அருமையை உணர முற்படுவான்.

— **மயிலன்**

ளுக மீண்டும் மாறக் கொஞ்ச நேரம் பிடிக்கிறது! போதாக் குறைக்கு ஒரே கண்ணுடன் நடிக்க வேண்டியிருக்கிறது. திடுமென ஒரு கண் பார்வையை இழக்கும்போது அந்த நிலைக்கு 'அட்ஜஸ்ட்' பண்ணிக் கொள்கிறதே ரொம்ப சிரமம் !

**நண்பர் :** இரண்டாவது காட்சியிலே இன்ஸ்பெக்டர் லாரென்ஸ் அந்தோணியைப் பார்த்து, 'போலீஸ்காரன் சட்டையை மாட்டும்போதே மனசைக் கழட்டி வைச்சுட்டுத்தான் மாட்டணும்' என்று சொல்லும் கட்டம் பிரமாதம். பிற்பகுதியிலே இரண்டையுமே கழற்றி வைக்க முடியாதபடி என்ன தவிப்பு தவிக்கிறார் லாரென்ஸ் ! வசனங்களின் பொருளாழம் அவ்வப்போது மின்னல் போலல்லவா பளிச்சிடுகின்றன.

**நடராஜன் :** போலீஸ் ஸ்டேஷனிலே அந்தோணி சொல்றானே. 'பூனை எப்பவும் தன் குட்டியை வாயில்தான் கவ்விட்டுப் போகும். அப்போ அந்தக் குட்டிக்கு வலியே தெரியாது. ஆனால் அதே பூனை வாயிலே கவ்வினதும் எலி மட்டும் ஏன் சாகணும்? ஒண்ணு பாசம்! இன்னொண்ணு பகை!...' இந்தக் கட்டத்திலே பார்க்கிறவா கண்ணிலே ஈரம் படர்ந்துடறது.



**சந்தானம் :** வாசல்லே டாக்ஸிகள் வந்துடுத்து ! சாமான்களை ஏத்துங்க !

**நண்பர் :** நீங்கள் நாடக அரங்கத்துக்கு ரொம்ப நேரம் ஆகிவிட்டது. நான் வரட்டுமா?

**சாம்பு நடராஜன் :** நாடகத்தைப் பார்த்த நீங்க என்ன நினைக்கிறீங்க? அதைச் சொல்லி விட்டுப் போங்க !

**நண்பர் :** கிறிஸ்துவ நண்பர்களே பிரமித்து வியக்கும்படி சிரத்தை எடுத்துப் புனிதத் தன்மையையும் மனிதத் தன்மையையும் இணைத்து நாடகத்தைத் தயாரித்திருக்கிறீர்கள். அடைக்கலம் பாதிரியார் என்ற தராசின் இரு தட்டுக்களிலும், அந்தோணியும், லாரென்ஸும், சம எடையாக நின்று தங்கள் பாத்திரத் தன்மையை வெளிப்படுத்துகிறார்கள். கலை உள்ளம் படைத்த நல்ல நண்பர்கள் நாடகத் துறையில் ஆர்வத்தோடு கூடி முயன்றால் வெற்றி நிச்சயம் என்பது புலனாகிறது.

**சாம்பு நடராஜன் :** கரெக்ட் ! என்னென்னவோ தியேட்டர் சம்பந்தப்பட்ட அனைவருக்குமே எங்கள் வெற்றியில் சமப் பங்கு உண்டு.

**நண்பர் :** சுந்தரம்! வரட்டுமா ?

**சுந்தரம் :** இப்போ நான் அடிக்கடி அன்று பூண்டி பாதிரியார் சொல்லிக் கொடுத்த பிரார்த்தனை கீதத்தை நினைவுபடுத்திக் கொள்கிறேன்.

**நண்பர் :** "உழைப்பே கடவுள்" என்று சொல்லுவார்கள்! இப்போ உன் எழுத்திலே உனக்கு நம்பிக்கை பிறந்திருக்கு!... கடவுள் நம்பிக்கையும் அதுதானே !

(சிரிப்பொலி எழுகிறது - எல்லோரும் எழுந்திருக்கிறார்கள்.)

— கோமதி சுவாமிநாதன்



சூரியனைச் சுற்றிப் பூமியும் மற்ற கிரகங்களும் ஒரு நியதிக்கு உட்பட்டுச் சுற்றி வருவது நமக்குத் தெரியும். ஒவ்வொரு நட்சத்திரமும் ஒரு சூரியனே என்றும் அந்த ஒவ்வொரு நட்சத்திரத்தைச் சுற்றியும் பல கிரகங்கள் முடிவில்லாப் பயணம் செய்கின்றன என்றும் விஞ்ஞானிகள் சொல்கிறார்கள்.

அகிலத்தின் இதே நியதியை விஞ்ஞானிகள் அணுவுக்குள்ளும் கண்டு வியக்கிறார்கள். உலகில் நமக்குத் தெரிந்த மூலப் பொருள்கள் தொண்ணூற்று இரண்டு. ஒவ்வொரு மூலப் பொருளிலும் அம்மூலப் பொருளின் தன்மைகள் முழுவதையும் உள்ளடக்கிய மிகச் சிறிய துணுக்கை அணு என்கிறார்கள்.

Atom—அணு என்ற சொல்லுக்கே பிளக்க முடியாதது என்று அர்த்தம். ஆனால் இன்று விஞ்ஞானம் அணுவைப் பிளந்து விட்டது.

அணுவின் மையத்தில் நியூகிளியஸ் இருப்பதையும், அதைச் சுற்றி எலெக்ட்ரான்கள் ஒரு நியதிக்குட்பட்டுச் சுழன்று சுழன்று வருவதையும் விஞ்ஞானிகள் உணர்ந்திருக்கிறார்கள்.

ஓர் அணுவினைப் பத்தாயிரம் *பிலியன் பாகங்களாகப் பிரிக்க முடியுமானால் அதில் ஒரு பாகம் நியூக்ளியஸ். அப்படியிருந்தும் அந்த நியூகிளியஸ்களை மட்டும் தனியே பிரித்து எடுக்க முடியுமானால் ஒரு நீர்த் துளி அளவே உள்ள நியூகிளியஸ்களின் எடை இரண்டு மிலியன் டன்களாக இருக்கும் என்று விஞ்ஞானிகள் மதிப்பிட்டிருக்கிறார்கள் !



# அணுவுக்குள் அகிலம்!



பிரமிப்பாக இருக்கிறதல்லவா ? உண்மையான விஞ்ஞானியும் இவ்வாறே பிரமிக்கத்தான் செய்கிறான். அணுவுக்குள் அகிலத்தின் இயக்கத்தையும் அகிலத்தில் அணுவின் இயல்பையும் காணும் விஞ்ஞானி, இன்று அம்புலியைத் தொட முயன்றாலும் அப்பாலுக்கு அப்பாலாய் உள்ள எல்லையற்ற பிரபஞ்சமும் அணுவுக்குள்ளே அடங்கியிருக்கிற மாபெரும் சக்தியும் அவனைப் பரம்பொருளையே நினைக்க வைக்கின்றன.

ஃ ஃ ஃ

பம்பாய் டிராம்பே பகுதியில் பாபா அணு ஆராய்ச்சி நிலையத்தைப் பார்க்கப் போகும் போது வழியில் மண்ணெண்ணெய் சுத்திகரிப்புத் தொழிற்சாலைகளும், அனல் மின் நிலையமும் இன்னும் பல தொழிலகங்களும் தென்படும். புகைப்போக்கிகள் புகையைக் கக்கும். வாயுக்களின் வாடை வீசும். சுற்றுச் சூழ்நிலை சுரேல் என்று அழுது வடிவது போல் தோன்றும்.

திடும்மென்று இந்தச் சூழ்நிலையில் ஒரு மாற்றம். பசுமையான மரம், செடி கொடிகள், பூத்துக் குலுங்கும் மலர்கள், செய்குன்றுகள், செயற்கைக் குளங்கள், பொங்கு புனல்கள், மாடர்ன் ஆர்ட் பாணியில் சில சிற்பங்கள். பாதை வளைந்து வளைந்து ஒரு குன்றின் மேல் செல்கிறது. நாம் அமர்ந்திருக்கும் காரும் அப்பாதையில் ஏறிப் போகிறது. அடாடா ! இங்கு எத்தனை விதமான மரங்கள், செடிகள் ! ஆஸ்திரேலியாவிலிருந்தும் ஆப்பிரிக்காவிலிருந்தும்கூடச் சில செடிகள் தருவிக்கப்பட்டுப் பயிராக்கப்பட்டிருக்கின்றனவே!

நாம் எங்கே வந்திருக்கிறோம் ? அணு ஆராய்ச்சி நிலையத்துக்கா? அல்லது தாவர இயல் பூங்காவுக்கா ?

கார் ஓரிடத்தில் நிற்கிறது. இறங்கிப் பார்க்கிறோம். கீழே குன்றின் அடிவாரத்தில்

* பிலியன் = ஆயிரம் மிலியன்.







படங்கள்: □ பாபா அணு ஆராய்ச்சி நிலையத்தில் உள்ள மூன்று அணு உலைகளுள் ஒன்று ஸெர்லினா. □ விஞ்ஞான மேதை பாபா.

இந்தப் பக்கத்தில்: □ மற்றொரு அணு உலை சைரஸ். □ அணு உலைக்குத் தேவையான மூலப்பொருள் யுரேனியம் உருக்கி வார்க்கப்படுகிறது. □ தும்பாவில் இந்தியா நடத்தும் விண்வெளி ஆராய்ச்சிகளுக்கு ராக்கெட்டுகள் பாபா அணு ஆராய்ச்சி நிலையத்தில்தான் தயாராகின்றன. □ அணு சக்தி கமிஷன் தலைவர் விக்ரம் சாராபாய். □ பாபா அணு ஆராய்ச்சி நிலையத் தலைவர் ஸேத்னாவும் அவர் மனைவியும். ●





பாபா அணு ஆராய்ச்சி நிலையத்தின் பல கட்டடங்கள் பெட்டி பெட்டியாகத் தெரிகின்றன. பெரிய கால்பந்துகள் போல் அணு உலைகளின் கூரைகள் தென்படுகின்றன.

பாரத நாட்டில் அணு ஆராய்ச்சித் துறையின் தந்தை எனக் கருதப்படும் பாபா விஞ்ஞான மேதை, கலை உள்ளம் கொண்டவர், செயல் திறன் மிக்கவர். இம்மூன்று சிறப்பியல்புகளும் ஒன்று சேர்ந்து உருவானது தான் பாபா அணு ஆராய்ச்சி நிலையம்.

எதிர்காலத்தில் பெரிய அளவில் ஆக்க வேலைகளுக்கு அணுவினைப் பயன்படுத்த வேண்டியிருக்கும் என்பதைத் தப்பாமல் புரிந்து கொண்ட அம்மேதை. அதற்குப் பூர்வாங்க வேலைகளை உடனடியாக மேற்கொள்ள வேண்டும் என்பதைப் பல ஆண்டுகளுக்கு முன்னதாகவே உணர்ந்து கொண்டார். அப்போது அவரது கருத்துக்களுக்கு மதிப்பளித்துச் செயல்பட ஆக்கமும் ஊக்கமும் அளித்தவர் டாடா. இதனால்தான் டாடா ஆராய்ச்சிக் கழகம் பம்பாயில் தோன்றியது. அணு ஆராய்ச்சி இந்தியாவில் தொடங்கிய இடம் இதுதான். நாளடைவில் பாரத அரசாங்கம் ஜவாஹர்லால் நேரு அவர்களின் உருவில் அணு ஆராய்ச்சியின் முக்கியத்துவத்தை உணர்ந்து கொண்டது. டிராம்பேயில் அணு ஆராய்ச்சி நிலையம் உருவாயிற்று. (பாபாவின் மறைவுக்குப் பிறகு பாபா அணு ஆராய்ச்சி நிலையம் என்று இதன் பெயர் மாற்றப்பட்டது.) நேருஜியிடம் பாபாவுக்கு நெருங்கிய ஒட்டுறவு இருந்த காரணத்தால்தான் இவ்வளவு துரிதமாக அணு ஆராய்ச்சி நிலையம் வளர்ச்சியுற முடிந்தது என்று பலர் கருதுவதில் தவறே இல்லை என்பதை, இந்நிலையத்தின் பல பிரிவுகளையும் ஒரு முறை சுற்றிப் பார்க்கும் யாரும் எளிதில் புரிந்து கொள்ளலாம். சிவப்பு நாடாவின் இறுகிய முடிச்சுக்களை அவிழ்த்துக் கொண்டிராமல் கத்தரித்து எறிந்திருந்தால் ஒழிய இப்படிப்பட்ட ஒரு பிரும்மாண்டமான சாதனையை எப்படி இத்தனை குறைந்த கால அளவில் புரிந்திருக்க முடியும்?

பாபாவின் தலைமை, பாரதத்தின் ஆற்றல் மிக்க விஞ்ஞானிகள் பலரை இங்கு ஈர்த்

## மகாத்மாவின் மணிமொழி



என்னிடம் இரகசியத் திட்டம் ஏதும் கிடையாது. சத்தியம் தவிர எனக்கு ராஜதந்திரம் ஏதும் தெரியாது. அஹிம்சையைத் தவிர என்னிடம் ஆயுதம் எதுவும் இல்லை. அவ்வப்போது நானே அறியாமல் வழியிலிருந்து விலகிச் செல்லக் கூடும்; ஆனால் இது நிரந்தரமாகி விடாது.

என் வாழ்க்கை ஒரு திறந்த புத்தகம். என்னிடம் இரகசியம் இல்லை, இரகசியம் வைத்துக் கொள்வதற்கு நான் ஊக்கமளிப்பதும் இல்லை.

தது. எத்தனைதான் விஞ்ஞான உபகரணங்களை அயல்நாடுகளிலிருந்து தருவிக்க முடிந்தாலும் அவற்றை இயக்கும் விஞ்ஞானிகள் முதல்தரமானவர்களாய் இல்லாது போனால் பலனில்லை என்பதை உணர்ந்தவர் பாபா. அவரது ஒரே நிபந்தனை திறமை.

விஞ்ஞானிகள் வந்த வேகத்திலே மரம் செடி கொடிகளும் வந்தன, சுற்று வட்டாரத்தை எழில் கோலமாக்க. பம்பாய்ச் சாலை ஒன்றை அகலப்படுத்த மிக வயதான ஒரு மரத்தை நகராட்சி மன்றம் வெட்டத் தீர்மானித்தபோது, பாபா அதை வேரோடு பெயர்த்தெடுத்து வந்து அணு ஆராய்ச்சி நிலையப் பூங்காவின் ஒரு பக்கத்தில் நடச் செய்தார்!

கட்டடங்கள் ஆராய்ச்சிக்குத் தோதாக இருக்கும்வகையில் அமைவதுடன் அழகிய தோற்றம் கொண்டவையாகவும் இருக்க வேண்டும் என்பதில் அக்கறை காட்டினார்.

இன்று இந்த ஆராய்ச்சிக் கூடங்கள் மயன் எழுப்பிய மாளிகைகளோ என மயங்க வைக்கின்றன. சரித்திர காலக் கற்கோட்டைகளோ எனக் கிறங்கச் செய்கின்றன.

காரியாலயக் கட்டடங்களுள் ஒன்றில், இரு பக்கமும் அறைகள் அறைகளாக வளர நடுவே நீநீநீண்ட பாதை! ஒரு மூலையில் நின்று பார்த்தால் பாதையின் அகலம் மறு மூலையில் காலே அரைக்கால் பங்காகச் சிறுத்திருப்பது போல் காண்கிறது — அத்தனை நீளம்

அணு ஆராய்ச்சி நிலையங்களுக்குள் நுழையும் போது நமக்கு ஜேம்ஸ்பாண்ட் பாணிப் படங்கள் நினைவுக்கு வரும். உலகையே அழித்து விடுகிறேன் என்று ஒரு விஞ்ஞானி தீர்மானிப்பதும், அவனை 007 ஒழித்துக் கட்டுவதும்தான் பெரும்பாலான ஜேம்ஸ் பாண்ட் படங்களின் மையக் கருத்து. வில்லனான அந்த விஞ்ஞானியின் மாபெரும் ஆராய்ச்சிக் கூடங்களை சினிமா 'செட்'டில் பார்த்திருக்கிறோமல்லவா? அவற்றைவிடப் பெரியவை, பிரும்மாண்டமானவை இந்த அணு ஆராய்ச்சிக் கூடங்கள்.

ஓர் அறைக்குள் ஒரே கம்ப்யூட்டர்கள் மயமாய் இருக்கும். முணுக்கு முணுக்கு என்று விளக்குகள் அணைந்து ஏற்றி அங்குள்ள விஞ்ஞானிகளிடம் நமக்குப் புரியாத மௌன பாஷையில் பேசும். இன்னும் ஓர் அறையில் ஆயிரக்கணக்கான கடிகாரங்களை ஒன்றாகப் பார்ப்பது போல் தோன்றும். வேறு ஓர் அறையில் நூற்றுக்கணக்கான ஊசிகள் சதா துடித்துத் துடித்துக் 'கிராப்' வரைந்து விஞ்ஞானிக்கு விஷயங்களைத் தெளிவாக்குகின்றன. அண்ணாந்து நோக்கினால் தலை சுற்றும் அளவுக்கு உயரமான கூரை. ஆங்காங்கே மேலே ஏறப் படிகளும் இறங்க ஏணிகளும் அணு உலையைச் சுற்றிலும் உண்டு.

கனடா நாட்டின் உதவியுடன் அமைக்கப் பட்டுள்ள அணு உலையை அடைவதற்கு முன்னால் இரண்டடி கனமுள்ள இரு இரும்புக் கதவுகளைத் தாண்டிச் செல்ல வேண்டும்! ஒரு கதவு திறக்கும்போது மற்றொரு கதவு தானாகவே மூடிக் கொள்கிறது. இந்தக் கதவுகளைத் தாண்டும்போதே நாம் முக்கால் ஜேம்ஸ்பாண்ட் ஆகி விடுகிறோம்!

அணு ஆராய்ச்சிக்கென நிறுவப்பட்டுள்ள மூன்று அணு உலைகளும் இயங்கும் விதம் பற்றி நான் ரொம்பவும் புரிந்து கொண்டு விட்டதாக வாசகர்களிடம் சொல்லிக் கொள்ள விரும்பவில்லை. ஏனெனில், இப்படிக் காண்பித்துக் கொண்டதில் நான் ரொம்பவும் அவஸ்தைப்பட்டு விட்டேன்! அணு உலைகள் இயங்கும் விதம் பற்றி அணு ஆராய்ச்சி நிலையத்தில் திரு காந்தம் கொஞ்சம் விவரித்தார். நான் உற்சாகமாகத் தலையாட்டினேன். எல்லாம் புரிந்து விட்டது என்று காண்பித்துக் கொண்டால் நண்பர் அத்துடன் ஆளை விட்டு விடுவார் என்று நினைத்தேன். ஆனால் அவரோ இந்த விஞ்ஞான நுணுக்கங்களை விரும்பிக் கேட்க ஓர் ஆள் அகப்பட்டானே என்று ஆனந்தம் கொண்டவராய் மேலே மேலே சிக்கலான விவரங்களைக் கொட்டித் தீர்த்தார்! என் பாடு தர்மசங்கடமாகப் போய் விட்டது!

அணு உலைகள் இயங்கும் விதமெல்லாம் நம் போன்றவருக்குத் தெளிவாகப் புரிய வேண்டிய அவசியமில்லை. எல்லாமே எல்லாருக்குமே புரிந்து போனால் விஞ்ஞானிகளுக்குத்தான் என்ன மதிப்பு? ஆனாலு



சிவகாமசுந்தரி — எஸ். சண்முகம்

பாளையங்கோட்டை ஸ்ரீ ஏ. சோமசுந்தரம் பிள்ளை அவர்கள் புதல்வி செல்வி சிவகாமசுந்தரிக்கும், தூத்துக்குடி எஸ். சுப்பிரமணியன் செட்டியார் அவர்கள் புதல்வன் செல்வன் எஸ். சண்முகம் B. COM.க்கும் சமீபத்தில் பாளையங்கோட்டையில் திருமணம் சிறப்பாக நடைபெற்றது. வாழ்க மணமக்கள்!

நாம் அவசியம் தெரிந்து கொள்ள வேண்டியது அணு ஆராய்ச்சித் துறையில் மகத்தான முன்னேற்றம் கண்டிருக்கிறது இந்தியா என்பதே. அணுவின் சக்தியை ஆக்க ரீதியில் பயன்படுத்துவதில் இந்தியா தீவிரமாக இருக்கிறது. இது அணு யுகம். அணு மின் நிலையங்களும் அணு சக்தியில் இயங்கும் நீர் மூழ்கிக் கப்பல்களும் இன்று உலகில் பல உள்ளன. எதிர்காலத்தில் அம்புலிக்கு அப்பால் அகிலத்தைக் காண மனிதன் பிரயாணம் செய்ய முற்படும்போது அணு சக்தியைப் பயன்படுத்துவான் என்று நம்ப இடம் இருக்கிறது.

பாரதத்தில் மூன்று அணு மின் நிலையங்கள் உருவாகி வருகின்றன, — தாராபூர், ராஜஸ்தான், கல்பாக்கம் ஆகிய இடங்களில். இவற்றில் தாராபூர் மின்நிலையம் இயங்க ஆரம்பித்து விட்டது.

அணு மின் நிலையங்கள் அமைப்பதில் செலவு அதிகம்தான் என்றாலும் நீண்டகால அடிப்படையில் பார்க்கும் போது பயன் மிகுதியாக இருக்கக்கூடும். உதாரணமாகத் தமிழ் நாட்டில் நீர் மின் நிலையங்கள் இனி அமைக்க வசதி இல்லை. அனல் மின் நிலையங்கள் அமைக்கவும் தரமான நிலக்கரி கிடையாது. இந்நிலையில் அணு மின் நிலையம் துரிதமாக உருவாகாது போனால் தொழில் துறை முன்னேற்றத்தில் தமிழ் நாட்டில் ஒரு தேக்கம் ஏற்பட்டு விடலாம்.

ஆயிரம் ஏக்கர் நிலப் பரப்பில் நீண்டு பரவியுள்ள பாபா அணு ஆராய்ச்சி நிலையத்தைச் சுற்றிப் பார்த்து விட்டுத் திரும்பும் போது இத்தனை முன்னேற்றத்துக்கும் காரணமான ஒரு தனிமனிதனின் தீர்க்கதரிசனத்தையும் அவனுக்குத் துணை நின்ற பாரத ரத்தினத்தையும் எண்ணிப் பெருமிதம் அடைவோம். இந்தப் பூரிப்பு பாபாவின் மேதாவிலாசம் குறித்து. அடுத்து அவரது கலை உள்ளம் நம் கவனத்தைக் கவரும். இரண்டு உலக யுத்தங்களையும் அதன் விளைவுகளையும் கண்டுள்ள மேற்கு ஜெர்மனியில் இன்று தொழில் வளம் மட்டும் போதாது; அத்துடன் மன வளமும் வேண்டும் என்று உணர்ந்திருக்கிறார்கள். அதனால்தான் எந்த ஒரு கட்டடமோ தொழிலகமோ உருவாவதானாலும் மொத்த செலவில் இரண்டு சதவீதத்தைச் சுற்றுச் சூழ்நிலையைக் கலைத்திறனுடன் அழகுபடுத்தச் செலவழிக்க வேண்டும் என்று சட்டமே இயற்றியிருக்கிறார்கள். பாரத நாட்டில் அப்படியொரு சட்டம் ஏதுமில்லாத போதே அணு உலைகளுடன் எழில் நிலைகளும் உருவாக வழிவகுத்தார் பாபா. மாதுங்காவில் அரியக்குடியின் கச்சேரியைக் கேட்டு மெய்ம்மறந்து விமானத்தைக் கோட்டை விட்டவராயிற்றே! சிறந்த ஓவியராகவும் விளங்கிய பாபாவின் செயல் திறனே நம்மை வெட்கப்படவே வைக்கும்!

அணு ஆராய்ச்சி நிலையத்தின் சில பகுதிகளை ஹைதராபாத்துக்கு மாற்றத் தீர்மானித்தபோது அதற்கு உகந்த இடத்தைத் தேர்ந்தெடுக்கச் சென்றிருந்தார் பாபா. விஸ்தாரமான ஒரு நிலப்பரப்பைக் காட்ட ஆந்திர மந்திரிகள் அழைத்துச் சென்றார்கள் அவரை. பல ஏக்கர் பரப்பளவுள்ள அந்தப் பிரதேசத்தில் ஆங்காங்கே சிரம பரிகாரம் செய்து கொள்ளச் சிறு துணிப் பந்தல்களும் விரித்திருந்தார்கள். ஐஸ் போட்ட பானங்களும் இப்பந்தல்களுக்கடியில் இருந்தன.

இரண்டாவது பந்தலை அடைந்ததும் மந்திரிகள் உட்கார்ந்து விட்டார்கள். ஒரு கையால் காலைப் பிடித்துக் கொண்டு மற்றொரு கரத்தில் குளிர் பானத்தை ஏந்தி அருந்தத் தொடங்கினார்கள். ஆனால் அரை நிஜார் அணிந்திருந்த பாபாவோ மூன்று மணி நேரம் கொளுத்தும் வெய்யிலில் நிலப் பரப்பை முழுமையாகச் சுற்றிப் பார்த்து விட்டு வந்தார். வந்த கையோடு மேஜையின் மேல் இருந்த குளிர் பானக் குவளைகளையும் கோப்பைகளையும் அகற்றினார். அதற்குப் பதில் தம் கையில் சுருண்டு இருந்த வரைபடத்தைப் பிரித்து வைத்தார். இன்னின்ன இடத்தில் இந்த இந்தக் கட்டடங்கள் எழும்ப வேண்டும் என்று உற்சாகமாகப் பொறி இயல் நிபுணர்களுக்கு விவரிக்க ஆரம்பித்தார். இவரோடு போட்டி போட யாரால் முடியும் ?

அறிவாற்றலும் செயல் திறனும் கலை உள்ளமும் ஒருங்கே பெற்று நிறைகுடமாக அவர் திகழ்ந்ததால்தான், பாபா பிரயாணம் செய்த விமானத்தில் இந்தியாவின் விரோதிகள் வெடி வைத்து விட்டார்கள் என்ற கட்டுக்கதை உண்மையாகக்கூட இருக்குமோ என்று எண்ணத் தோன்றுகிறது!

— வி. ராஜேந்திரன்

## ஸ்ரீ ஆதிசங்கரர் லட்சார்ச்சனை

பாரதத்தைப் பாரதமாக்கிய மகான் ஸ்ரீ ஆதி சங்கரபகவத்பாதர்களின் ஜயந்தி ஏப்ரில் 21ந் தேதி நிகழ்கிறது. ஞானமார்க்கத்தின் மூலம் அத்வைதசித்தி பெற உபாயம் வகுத்த அத்வைத ஸ்தாபகாசிரியரும், நன் மதங்களைச் செம்மை செய்து பக்தி மூலம் பரமனை அடைய வழி கண்ட நன்மதாசாரியருமாகிய ஸ்ரீ ஆதிசங்கரருக்கு இந்த நன்னாளையொட்டி நாமனைவரும் அஞ்சலி தெரிவிக்க ஒரு சத்காரியம் காஞ்சிபுரத்தில் நடக்கிறது. ஸ்ரீ காமகோடி ஆலயத்தில் உள்ள ஆசாரியர்களின் மூர்த்தத்துக்கு மார்ச் 20ந் தேதியிலிருந்து மே 31ந் தேதிவரை லட்சார்ச்சனை நடக்கிறது. லட்சார்ச்சனை வரவில் செலவு போக மிஞ்சிய தொகையைக் கொண்டு ஸ்ரீ ஆசாரியர்களுக்கு வெள்ளித் திருவாசி செய்யும் திருப்பணி பூர்த்தி செய்யப்படும். ஸ்ரீ காமகோடி பீடாதிபதிகளின் திரு உள்ளப்படி நடக்கும் லட்சார்ச்சனை இது. அன்பர் யாவரும் தங்கள் பெயர், கோத்திரம், நட்சத்திரம் ஆகிய விவரங்களுடன் கீழ்க் கண்ட விலாசத்துக்கு, அர்ச்சனை ஒன்றுக்கு ரூ 8 அனுப்பக் கோருகிறோம். டாக்டர் வி. எஸ். வி. ராஜப்பா, பொருளாளர், ஸ்ரீ சங்கர பக்தஜன சபா, 4, சாலைத் தெரு, காஞ்சிபுரம்.

# பொன்னியின் செல்வன்

அமரர் கல்கி



பன்னிரண்டாம் அத்தியாயம்

## குருவும் சீடனும்

இந்தச் சந்தர்ப்பத்தில் தமிழ் நாட்டுச் சரித்திர ஆராய்ச்சி சம்பந்தமான ஒரு நிகழ்ச்சியை இக்கதையைப் படித்து வரும் நேயர்களுக்குத் தெரிவித்துக் கொள்ள விரும்புகிறோம்.

திருச்சிராப்பள்ளி ஜில்லா லால்குடி தாலுக்காவில் அன்பில் என்ற பெயர் கொண்ட கிராமம் ஒன்று இருக்கிறது. இதை வடமொழியாளர் 'பிரேமபுரி' என்று மொழி பெயர்த்துக் கையாண்டிருக்கிறார்கள். இன்றைக்குச் சுமார் நாற்பத்தைந்து ஆண்டுகளுக்கு முன்பு இந்தக் கிராமத்தில் ஒரு வேளாளர் தம்முடைய பழைய வீட்டை இடித்துப் புதுப்பித்துக் கட்டுவதற்காக அஸ்திவாரம் தோண்டினார். அப்போது ஓர் அதிசயமான வஸ்து



பூமிக்கடியிலிருந்து அகப்பட்டது. பல செப்புத் தகடுகளை நுனியில் துவாரமிட்டு வளையத்தினால் கோத்திருந்தது. அந்தத் தகடுகளில் ஏதோ செதுக்கி எழுதப் பட்டிருந்தது. இரண்டு ஆள் தூக்க முடியாத கனமுள்ள அந்தத் தகடுகளை அவர் சில காலம் வைத்திருந்தார். பிறகு அந்தக் கிராமத்துக் கோயிலைப் புதுப்பித்துத் திருப்பணி செய்யலாம் என்று வந்த ஸ்ரீ ஆர். எஸ். எல். லக்ஷ்மண செட்டியார் என்பவரிடம் அத்தகடுகளைக் கொடுத்தார். ஸ்ரீ லக்ஷ்மண செட்டியார் அத்தகடுகளில் சரித்திர சம்பந்தமான விவரங்கள் இருக்கலாம் என்று ஊகித்து அவற்றை எடுத்துக் கொண்டு போய் மகாமகோபாத்தியாய சுவாமிநாத அய்யர் அவர்களிடம் தந்தார். அய்யர் அவர்கள் அச்செப்பேடுகளில் மிக முக்கியமான விவரங்கள் இருப்பதைக் கண்டு அந்த நாளில் சிலாசாஸன ஆராய்ச்சியில் ஈடுபட்டிருந்த ஸ்ரீ டி. ஏ. கோபிநாத ராவ் எம். ஏ. என்பாரிடம் அத்தகடுகளைச் சேர்ப்பித்தார். ஸ்ரீ கோபிநாத ராவ் அச்செப்புத் தகடுகளைக் கண்டதும் அருமையான புதையலை எடுத்தவர்போல் அக மகிழ்ந்தார். ஏனென்றால், சோழ மன்னர்களின் வம்சத்தைப் பற்றிய அவ்வளவு முக்கியமான விவரங்கள் அச்செப்பேடுகளில் செதுக்கப்பட்டிருந்தன.

சுந்தர சோழச் சக்கரவர்த்தியின் 'மான்ய மந்திரி'யான அன்பில் அநிருத்தப் பிரம்மராயருக்குச் சக்கரவர்த்தி பட்டத்துக்கு வந்த நாலாம் ஆண்டில் அளித்த பத்து வேலி நில சாஸனத்தைப் பற்றிய விவரங்கள் அந்தச் செப்பேடுகளில் செதுக்கப் பட்டிருந்தன. இந்த நில சாஸனத்தை எழுதிய மாதவ பட்டர் என்பவர் சுந்தர சோழர் வரைக்கும் வந்த சோழ வம்சாவளியை அதில் குறிப்பிட்டிருந்தார். அத்துடன் அநிருத்த பிரம்மராயரின் வைஷ்ணவ பரம்பரையைக் குறிப்பிட்டு, அவருடைய தந்தை, தாயார், பாட்டனார், கொள்ளுப் பாட்டனார் ஆகியவர்கள் ஸ்ரீ ரங்கநாதரின் ஆலயத்தில் செய்து வந்த சேவையைக் குறித்தும் எழுதியிருந்தார்.

இதற்கு முன்னால் அகப்பட்டிருந்த ஆனைமங்கலம் செப்பேடுகள், திருவாலங்காட்டுச் செப்பேடுகள் — ஆகியவற்றில் கொடுத்திருந்த சோழ வம்சாவளியுடன் அன்பில் செப்பேடுகளில்



கண்டது பெரும்பாலும் ஒத்திருந்தது. எனவே, அச்செப்பேடுகளில் கண்டவை சரித்திர பூர்வமான உண்மை விவரங்கள் என்பது ஊர்ஜிதமாயிற்று. மற்ற இரண்டு செப்பேடுகளில் காணுத இன்னும் சில விவரங்களும் இருந்தபடியால் ''அன்பில் செப்பேடுகள்'' தமிழ் நாட்டுச் சரித்திர ஆராய்ச்சித் துறையில் மிகப் பிரசித்தி அடைந்தன.

எனவே, அநிருத்த பிரம்மராயர் என்பார் சரித்திரச் செப்பேடுகளில் புகழ் பெற்ற சோழ சாம்ராஜ்ய மந்திரி என்பதை மனத்தில் வைத்துக் கொண்டு மேலே கதையைத் தொடர்ந்து படிக்கும்படி நேயர்களைக் கேட்டுக் கொள்கிறோம்.

* * *

**மா**னிய முதன் மந்திரி அநிருத்தப் பிரம்மராயர் வீற்றிருந்த மண்டபத்துக்குள் ஆழ்வார்க்கடியான் பிரவேசித்தான். அவரை மூன்று தடவை சுற்றி வந்தான். சாஷ்டாங்கமாக விழுந்து நமஸ்கரித்து எழுந்தான்.

''ஓம் ஹிராம் ஹ்ரீம் வஷட்டு!'' என்று நாலு தடவை உரத்த குரலில் உச்சரித்துவிட்டு, ''குருதேவரே! விடை கொடுங்கள்!'' என்றான்.

அநிருத்தர் புன்னகையுடன், ''திருமலை! என்ன இந்தப் போடு போடுகிறாய்? எதற்கு என்னிடத்தில் விடை கேட்கிறாய்?'' என்றார்.

''தாஸன் அவலம்பித்த ஸ்ரீ வைஷ்ணவ சம்பிரதாயத்தையும் 'ஆழ்வார்க்கடியான்' என்ற பெயரையும் தங்களுக்குக் கைங்கரியம் செய்யும் பாக்கியத்தையும் இந்த மாகடலில் அர்ப்பணம் செய்துவிட்டு வீர சைவ காளாமுக சம்பிரதாயத்தைச் சேர்ந்துவிடப் போகிறேன். கையில் மண்டை ஓட்டை எடுத்துக் கொண்டு 'ஓம் ஹிராம் ஹ்ரீம் வஷட்டு' என்ற மகத்தான மந்திரத்தை உச்சரித்துக் கொண்டு ஊர் ஊராகப் போவேன்! தலையில் ஜடா மகுடம் தரித்து, முகத்தில் நீண்ட தாடியும் வளர்த்துக் கொண்டு, எதிர்ப்படுகிற ஸ்ரீ வைஷ்ணவர்களுடைய மண்டைகளை யெல்லாம் இந்தத் தடியினால் அடித்துப் பிளப்பேன்!...''

''அப்பனே! நில்! நில்! என்னுடைய மண்டைக்குக் கூட அந்தக் கதிதானா?''

''குருவே! தாங்கள் ஸ்ரீ வைஷ்ணவ சம்பிரதாயத்தை இன்னமும் அவலம்பிக்கிறவர் தானே?''

''திருமலை! அதைப் பற்றி உனக்கு என்ன சந்தேகம்? என்னை யார் என்று நினைத்தாய்!''

''தாங்கள் யார்? அது விஷயத்திலே தான் எனக்கும் சந்தேகம் ஏற்பட்டு விட்டது. இரண்டு நதிகளின் நடுவில் அறிதுயில் புரிந்து சகல புவனங்களையும் காக்கும் ஸ்ரீ ரங்கநாதருக்குப் பணி செய்வதையே வாழ்க்கை எடுத்த பயனாகக் கொண்டிருந்த அன்பில் அனந்தாழ்வார் சுவாமிகளின் கொள்ளுப் பேரர் தாங்கள்தானே!...''

''ஆம், அப்பனே! நான்தான்!''

''ஸ்ரீமந் நாராயண நாமத்தின் மகிமையை நானிலத்துக்கெல்லாம் எடுத்துரைத்த அன்பில் அநிருத்தப் பட்டாச்சாரியின் திருப் பேரரும் தாங்கள் தானே?''

''ஆமாம்; நானேதான்! அந்த மகானுடைய திருநாமத்தைத்தான் எனக்கும் சூட்டினார்கள்!''

''ஆழ்வார்களுடைய அமுதொழுகும் மதுர கீதங்களைப் பாடிப் பக்த கோடிகளைப் பரவசப் படுத்தி வந்த நாராயண பட்டாச்சாரியின் சாக்ஷாத் சீமந்த புத்திரரும் தாங்களே யல்லவா?''

''ஆமாம், அப்பா, ஆமாம்!''

''ஸ்ரீ ரங்கநாதர் பள்ளி கொண்ட பொன்னரங்கக் கோயிலில் தினந்தினம் நுந்தா விளக்கு ஏற்றி வைத்தும் யாத்திரிகர்களுக்கு வெள்ளித் தட்டில் அன்னமிட்டும் கைங்கரியம் புரிந்து வந்த மங்கையர் திலகத்தின் புதல்வரும் தாங்களே அல்லவா?''

''சந்தேகமே இல்லை!''

''அப்படியானல் என் கண்கள் என்னை மோசம் செய்கின்றனவா? என் கண் முன்னே நான் பார்ப்பது பொய்யா? என் இரு செவிகளில் நான் கேட்பதும் பொய்யா?''

''எதைச் சொல்கிறாய் அப்பனே? உன் கண்களின் மேலும் காதுகளின் பேரிலும் சந்தேகம் கொள்ளும்படி என்ன நேர்ந்து விட்டது?''

''தாங்கள் இந்த ஊர்ச் சிவன் கோயிலுக்குச் சென்று அபிஷேகம் — அர்ச்சனை யெல்லாம் நடத்தி வைத்ததாக என் செவிகளால் கேட்டேன்.''

''அது உண்மையேதான்; உன் செவிகள் உன்னை மோசம் செய்துவிடவில்லை.''

''தாங்கள் சிவன் கோவிலுக்குப் போய்வந்ததன் அடையாளங்கள் தங்கள் திருமேனியில் இருப்பதாக என் கண்கள் காண்பதும் உண்மைதான் போலும்!''

''அதுவும் உண்மையே!''

''இந்தக் கலியுகத்தில் ஸ்ரீமந் நாராயணனே தெய்வம் என்றும், ஆழ்வார்களின் பாசுரங்களே வேதம் என்றும் ஹரிநாம சங்கீர்த்தனமே மோட்சத்தை அடையும் மார்க்கம் என்றும் எனக்குக் கற்பித்த குருதேவர் தாங்களே அல்லவா?''

''ஆம்; அதனால் என்ன?''

''குருதேவராகிய தாங்களே சொல்வது ஒன்றும், செய்வது ஒன்றுமாக இருந்தால் சீடனாகிய நான் என்ன செய்யக் கிடக்கிறது?''

''திருமலை! நான் சிவன் கோயிலுக்குப் போய்த் தரிசனம் செய்தது பற்றித் தானே சொல்கிறாய்?''

''குருதேவரே! அங்கே எந்தக் கடவுளைத் தரிசனம் செய்தீர்கள்?''

''சந்தேகம் என்ன? நாராயண மூர்த்தியைத்தான்.''

''இராமேச்சுரக் கோயிலுக்குள் இலிங்க வடிவம் வைத்திருப்பதாகவல்லவோ கேள்விப்பட்டிருக்கிறேன்? அதனால்தானே இங்குள்ள வீர சைவ பட்டர்மார்கள் என்னைச் சூழ்ந்து கொண்டு அவ்வளவு கொக்கரித்தார்கள்?''

''பிள்ளாய்! நீ திருநகரியில் திரு அவதாரம் செய்த நம் சடகோபரின் அடியார்க்கடியான் என்று நாமம் பூண்டிருப்பது சத்தியம்தானே?''

''அதில் என்ன சந்தேகம்?''

''நம்மாழ்வாரின் அருள்வாக்கைச் சற்று ஞாபகப்படுத்திக் கொள். நீ மறந்திருந்தாலும் நானே நினைவூட்டுகிறேன்; கேள்:

> **''இலிங்கத்திட்ட புராணத்தீரும்**
> **சமணரும் சாக்கியரும்**
> **வலிந்து வாது செய்வீர்களும் மற்று**
> **நுந் தெய்வமுமாகி நின்றானே!''**

இவ்வாறு சடகோபரே சாதித்திருக்கும் போது சிவலிங்கத்தில் நான் நாராயணனைத் தரிசித்தது தவறா?''

''ஆகா! சடகோபரின் அருள் வாக்கே வாக்கு! இலிங்கத்தை வழிபடுவோரைச் சமணரோடும் சாக்கியரோடும் கொண்டு போய்த் தள்ளினார், பாருங்கள்!''

''அப்பனே! உன் குதர்க்க புத்தி உன்னை விட்டு எப்போது நீங்குமோ, தெரியவில்லை. நம் சடகோபர் மேலும் சொல்லி யிருப்பதைக் கேள்.

> **'நீராய் நிலனாய்த் தீயாய்க்**
> **காலாய் நெடுவானாய்ச்**
> **சீரார் சுடர்கள் இரண்டாய்ச்**
> **சிவனாய் அயனாய்....'**

உள்ளவன் ஸ்ரீ நாராயண மூர்த்தியே என்று திருவாய் மலர்ந்திருக்கிறார். இன்னும் கேள் திருமலை! கேட்டு உன் மனமாசைத் துடைத்துக்கொள்!

> **'முனியே நான்முகனே முக்கண்ணப்பா!**
> **என் பொல்லாக்**
> **கனிவாய்த் தாமரைக்கண்**
> **கருமாணிக்கமே என் கள்வா!**
> **தனியேன் ஆருயிரே என்தலை**
> **மிசையாய் வந்திட்டு....'**

கேட்டாயா, திருமலை! 'முக்கண்ணப்பா!' என்று நம் சடகோபர் கூவி அழைத்துத் தம் தலைமீது வரும்படி பிரார்த்திக்கிறார்! நீயோ சிவன் கோயிலுக்கு நான் போனது பற்றி ஆட்சேபிக்கிறாய்!...''

''குருதேவரே! மன்னிக்க வேண்டும்; அபசாரத்தை க்ஷமிக்க வேண்டும்! நம்மாழ்வாரின் பாசுரங்கள் அனைத்தையும் தெரிந்து கொள்ளாமையினால் வீண் சண்டைகளில் காலம் கழித்தேன். தங்களையும் சந்தேகித்தேன். இனி எனக்கு ஒரு வரம் கொடுத்து அருள வேண்டும்.''

''என்ன வரம் வேண்டும் என்று சொன்னாயானால் கொடுப்பதைப் பற்றி யோசிக்கலாம்.''

''திருக்குருகூர் சென்று அங்கேயே தங்கிவிட ஆசைப்படுகிறேன். நம் சடகோபரின் ஆயிரம் பாடல்களையும் சேகரித்துக் கொண்டு பிறகு ஊர் ஊராகச் சென்று அந்தப் பாடல்களைக் கானம் செய்ய விரும்புகிறேன்...''

''இந்த ஆசை உனக்கு ஏன் வந்தது?''

''வடவேங்கடத்திலிருந்து வரும் வழியில் வீரநாராயணப் பெருமாள் சந்நிதியில் ஆழ்வார் பாசுரங்கள் சிலவற்றைப் பாடினேன். அந்தச் சந்நிதியில் கைங்கரியம் செய்யும் ஈசுவரப் பட்டர் என்னும் பெரியவர் கேட்டு ஆனந்தக் கண்ணீர் விட்டார்...''

''ஈசுவர பட்டர் மகா பக்திமான்; நல்ல சிஷ்டர்.''

''அவருடைய இளம் புதல்வன் ஒருவனும் அவர் அருகில் நின்று கேட்டுக் கொண்டிருந்தான். அந்த இளம் பாலகனின் பால் வடியும் முகம் ஆழ்வார் பாசுரத்தைக் கேட்டுப் பூரண சந்திரனைப் போல் பிரகாசித்தது. 'மற்றப் பாடல்களும் தெரியுமா?' என்று அந்தச் சின்னஞ் சிறு பிள்ளை பால் மணம் மாறாத வாயினால் கேட்டான். 'தெரியாது' என்று சொல்ல எனக்கு வெட்கமாயிருந்தது. ஆழ்வார்களின் தொண்டுக்கே ஏன் இந்த நாயேனை அர்ப்பணம் செய்துவிடக் கூடாது என்று அப்போதே தோன்றியது. இன்றைக்கு அந்த எண்ணம் உறுதிப்பட்டு விட்டது...''

''திருமலை! அவரவர்களும் ஸ்வதர்மத்தைக் கடைப்பிடிக்க வேண்டும் என்று கீதாசாரியார் அருள் புரிந்திருக்கிறார் அல்லவோ?''

''ஆம், குருவே!''

''ஆழ்வார்களின் பாசுரங்களைச் சேகரிப்பதற்கும் பரப்புவதற்கும் மகான்கள் அவதரிப்பார்கள். அது போலவே ஆழ்வார்களுடைய பாடல்களில் உள்ள வேதசாரமான தத்துவங்களை நிருபணம் செய்து வடமொழியின் மூலம் பரத



கண்டம் எங்கும் நிலைநாட்டக் கூடிய அவதார மூர்த்திகளும் இந்நாட்டில் ஜனிப்பார்கள். நீயும் நானும் இராஜ்ய சேவையை நமது ஸ்வதர்மமாகக் கொண்டவர்கள். சோழ சக்கரவர்த்தியின் சேவையில் உடல் பொருள் ஆவியை அர்ப்பணம் செய்வதாக நாம் சபதம் செய்திருப்பதை மறந்தனையா?...''

''மறக்கவில்லை, குருவே! ஆனால் அது உசிதமா என்ற சந்தேகம் தோன்றி என் உள்ளத்தை அரித்து வருகிறது. முக்கியமாகத் தங்களைப் பற்றிச் சில இடங்களில் பேசிக் கொள்வதைக் கேட்டால்...''

''என்ன பேசிக் கொள்கிறார்கள்?''

''தங்களுக்குச் சக்கரவர்த்தி பத்து வேலி நிலம் மானியம் விட்டு அதைச் செப்பேட்டிலும் எழுதிக் கொடுத்திருப்பதால் தாங்கள் வைஷ்ணவ சம்பிரதாயத்தை விட்டு விட்டதாகச் சிலர் சொல்கிறார்கள். ஜாதி தர்மத்தைப் புறக்கணித்துக் கப்பல் பிரயாணம் செய்வதாகவும் கூறுகிறார்கள்...''

''அந்தப் பொறாமைக்காரர்கள் சொல்வதை நீ பொருட்படுத்த வேண்டாம். நம்முடைய ஜாதி கிணற்றுத் தவளைகளாக இருக்க வேண்டும் என்று அவர்கள் நினைக்கிறார்கள். சக்கரவர்த்தி எனக்குப் பத்து வேலி நிலம் மானியம் கொடுத்திருப்பது உண்மைதான். அதைச் செப்பேட்டிலும் எழுதிக் கொடுத்திருக்கிறார். ஆனால் அதற்கு நாலு வருஷங்களுக்கு முன்பே சக்கரவர்த்திக்கு நான் மந்திரியானேன் என்பது உனக்குத் தெரியும் அல்லவா?''

ஆழ்வார்க்கடியான் மௌனமாயிருந்தான்.

''சக்கரவர்த்திக்கும் எனக்கும் எப்போது நட்பு ஏற்பட்டது என்றாவது உனக்குத் தெரியுமா? நாங்கள் இருவரும் இளம் பிராயத்தில் ஒரே ஆசிரியரிடம் பாடம் கற்றோம். செந்தமிழும் வடமொழியும் பயின்றோம். கணிதம், வான சாஸ்திரம், தர்க்கம், வியாகரணம் எல்லாம் படித்தோம். அப்போதெல்லாம் சுந்தரசோழர் சிம்மாசனம் ஏறப் போகிறார் என்று யாரும் கனவிலும் எண்ணியதில்லை. அவராவது நானாவது அதைப் பற்றிச் சிந்தித்ததே கிடையாது. ராஜாதித்தரும் கண்டராதித்தரும் காலமாகி அரிஞ்சய சோழர் பட்டத்துக்கு வருவார் என்று யார் நினைத்தது? அரிஞ்சயருக்கு அவ்வளவு விரைவில் துர்மரணம் சம்பவித்துச் சுந்தர சோழர் பட்டத்துக்கு வரும்படியிருக்கும் என்றுதான் யார் நினைத்தார்கள்? சுந்தர சோழர் சிம்மாசனம் ஏறியபோது அதனால் பல சிக்கல்கள் விளையும் என்று எதிர்பார்த்தார். உடனிருந்து நான் உதவுவதாயிருந்தால் பட்டத்தை ஒப்புக்கொள்வதாகவும் இல்லாவிட்டால் மறுத்து விடுவதாகவும் கூறினார். இராஜ்ய நிர்வாகத்தில் அவருக்கு உதவுவதாக அப்போது வாக்களித்தேன். அந்த வாக்குறுதியை இன்றளவும் நிறைவேற்றி வருகிறேன். இதெல்லாம் உனக்குத் தெரியாதா, திருமலை?''

''எனக்குத் தெரியும் குருதேவா! எனக்கு ஒருவனுக்கு மட்டும் தெரிந்து என்ன பயன்? ஜனங்களுக்குத் தெரியாதுதானே? நாட்டிலும் நகரத்திலும் வம்பு பேசுபவர்களுக்குத் தெரியாதுதானே?''

''வம்பு பேசுபவர்களைப் பற்றி நீ சிறிதும் கவலைப்பட வேண்டாம். பரம்பரையான ஆசாரியத் தொழிலை விட்டு விட்டு நான் இராஜ சேவையில் இறங்கியது பற்றி இதற்கு முன்னால் தானே சில சமயம் குழப்பமடைந்ததுண்டு. ஆனால் சென்ற இரண்டு நாட்களாக அத்தகைய குழப்பம் எனக்குச் சிறிதும் இல்லை. திருமலை!

நான் இராமேசுவர ஆலயத்தில் சுவாமி தரிசனத்துக்காக இங்கு வரவில்லை என்பதும் மாதோட்டம் போவதற்காகவே வந்தேன் என்பதும் உனக்குத் தெரியுமல்லவா?''

''அப்படித்தான் ஊகித்தேன், குருதேவரே!''

''நீ ஊகித்தது சரியே. அன்றைக்குச் சம்பந்தரும் சுந்தரமூர்த்தியும் பரவசமாக வர்ணித்தபடியேதான் இன்றைக்கும் பாலாவி நதிக்கரையில் மாதோட்டம் இருக்கிறது.

'வண்டுபண்செயும் மாமலர்ப் பொழில்
மஞ்ஞை நடமிடு மாதோட்டம்
தொண்டர் நாடொறுந் துதிசெய
அருள்செய் கேதீச்சர மதுதானே!'

என்று சம்பந்தர் பாடியிருக்கிறாரே, அந்த மாதோட்டத்தை நேரில் பார்க்காமல் எழுதியிருக்க முடியுமா? இந்த இராமேச்சுரத் தீவில் இருந்தபடியே மாதோட்டத்தை எட்டிப் பார்த்துவிட்டு எழுதியதாகச் சொல்லுகிறார்கள் இன்றுத் தவளைப் பண்டிதர்கள் சிலர். அதை நீ பொருட்படுத்த வேண்டாம்...''

''சுவாமி! மாதோட்டத்தின் இயற்கை வளங்களைக் கண்டு களிப்பதற்காகவா தாங்கள் அந்த க்ஷேத்திரத்துக்குச் சென்றிருந்தீர்கள்?''

''இல்லை; உன்னை அங்கே அனுப்ப எண்ணியிருப்பதால் அதைப் பற்றியும் சொன்னேன். நான் சென்றது இளவரசர் அருள்மொழி வர்மரைப் பார்ப்பதற்காக...''

''இளவரசரைப் பார்த்தீர்களா, குருதேவரே?'' என்று ஆழ்வார்க்கடியான் கேட்டான். அவனுடைய பேச்சில் இப்போதுதான் சிறிது ஆர்வமும் பரபரப்பும் தொனித்தன.

''ஆகா! உனக்குக்கூட ஆவல் உண்டாகி விட்டதல்லவா? இளவரசரைப் பற்றித் தெரிந்து கொள்வதற்கு? ஆம், திருமலை! இளவரசரைப் பார்த்தேன். பேசினேன்; இலங்கையிலிருந்து வந்து கொண்டிருந்த அதிசயமான செய்திகள் எவ்வளவு தூரம் உண்மை என்பதை நேரில் தெரிந்து கொண்டேன். கேள், அப்பனே! இலங்கை அரசன் மகிந்தனிடம் ஒரு மாபெரும் சைன்யம் இருந்தது. அந்தச் சைன்யம் இப்போது இல்லவே இல்லை. சூரியனைக் கண்ட பனி போல் கரைந்து மறைந்து போய்விட்டது! மகிந்தனுடைய சைன்யத்திலே பாண்டிய நாட்டிலிருந்தும் சேர நாட்டிலிருந்தும் சென்ற வீரர்கள் பலர் இருந்தார்கள். அவர்கள் எல்லாரும் நம் இளவரசர் படைத் தலைமை வகித்து வருகிறார் என்று அறிந்ததும் ஆயுதங்



களைக் கீழே போட்டு விட்டு நம்முடைய கட்சிக்கே வந்து சேர்ந்து விட்டார்கள்! மகிந்தன் எப்படிப் போர் புரிவான்? போயே போய் விட்டான். மலைகள் சூழ்ந்த ரோஹண நாட்டுக்குச் சென்று ஒளிந்து கொண்டிருக்கிறான்! ஆக நமது சைன்யம் போர் செய்வதற்கு இப்போது எதிரிகளே இல்லை!''

''அப்படியானால், குருதேவரே! இளவரசர் நம் சைன்யத்துடன் திரும்பிவிட வேண்டியதுதானே? நம் வீரர்களுக்குத் தானியம் அனுப்புவது பற்றிய ரகளையெல்லாம் எதற்காக?''

''எதிரிகள் இல்லையென்று சொல்லித் திரும்பி வந்துவிடலாம். ஆனால் இளவரசருக்கு அதில் இஷ்டமில்லை. எனக்கும் அதில் சம்மதமில்லை. இளவரசரும் சைனியமும் இப்பால் வந்ததும் மகிந்தன் மலைநாட்டிலிருந்து வெளிவருவான். மறுபடியும் பழையபடி போர் தொடங்கும். அதில் என்ன பயன்? இலங்கை மன்னரும் மக்களும் ஒன்று நமக்குச் சிநேகிதர்களாக வேண்டும். அல்லது புலிக்கொடியின் ஆட்சியை அங்கே நிரந்தரமாக நிறுவுதல் வேண்டும். இந்த இரண்டு வகை முயற்சியிலும் இளவரசர் ஈடுபட்டிருக்கிறார். நமது போர் வீரர்கள் இப்போது இலங்கையில் என்ன செய்து கொண்டிருக்கிறார்கள் தெரியுமா? பழைய போர்களில் அநுராதபுர நகரமே நாசமாகிவிட்டது. அங்கிருந்த பழைமையான புத்த விஹாரங்கள், கோயில்கள் தாது கர்ப்ப கோபுரங்கள்—எல்லாம் இடிந்து பாழாய்க் கிடக்கின்

றன. இளவரசரின் கட்டளையின் பேரில் இப்போது நம் வீரர்கள் இடிந்த அக் கட்டிடங்களைப் புதுப்பிக்கிறார்கள்!''

''அழகாய்த்தானிருக்கிறது. சைவம், வைஷ்ணவம் இரண்டையும் கைவிட்டு இளவரசர் சாக்கிய மதத்திலேயே ஒருவேளை சேர்ந்து விடுவாரோ? அதையும் தாங்கள் ஆமோதிப்பீர்களோ?''

''நானும் நீயும் ஆமோதித்தாலும் ஒன்றுதான்; ஆமோதிக்கா விட்டாலும் ஒன்றுதான். நம்மைப் போன்றவர்கள் நம்முடைய மதமே பெரிது என்று சண்டையிட்டுக் கொண்டிருக்கலாம். ஆனால் ஒரு நாட்டை ஆளும் அரசர் அவருடைய பிரஜைகள் அனுசரிக்கும் சமயங்கள் எல்லாவற்றையும் ஆதரித்துப் பராமரிக்க வேண்டும். இந்த உண்மையை யாருடைய தூண்டுதலும் இல்லாமல் இளவரசர் தாமே உணர்ந்திருக்கிறார். சந்தர்ப்பம் கிடைத்ததும் காரியத்திலும் செய்து காட்டுகிறார். திருமலை! இதைக் கேள்! நம் இளவரசர் அருள்மொழி வர்மருடைய கரங்களில் சங்கு சக்கர ரேகை இருப்பதாகச் சொல்லக் கேட்டிருக்கிறேன்; நீயும் கேட்டிருப்பாய். ஆனால் நான் பார்த்ததில்லை. அவர் கையில் சங்கு சக்கர ரேகை இருந்தாலும் சரி, இல்லாவிட்டாலும் சரி. ஒன்று நிச்சயமாகச் சொல்கிறேன். இந்தப் பூமண்டலத்தை ஏக சக்ராதிபதியாக ஆளத் தகுந்தவர் ஒருவர் உண்டு என்றால் அவர் இளவரசர் அருள்மொழி வர்மர்தான்! பிறவியிலேயே அத்தகைய தெய்வ கடாட்சத்துடன் சிலர் பிறக்கிறார்கள். சற்று முன் சில வர்த்தகத் தலைவர்களும் கைக்கோளப் படை சேநாதிபதிகளும் வந்து பேசிக் கொண்டிருந்தார்களே, அது உன் காதில் விழுந்ததா? இளவரசருக்கு என்றால் நம் வர்த்தகர்கள் — காசிலேயே கருத்துள்ளவர்கள் எவ்வளவு தாராளமாகி விடுகிறார்கள் பார்த்தாயா? போர் வீரர்கள் அவர் கீழிருந்து போர் செய்ய எப்படிப் போட்டி போடுகிறார்கள் பார்த்தாயா? சில நாளைக்கு முன்னால் பொதிகை மலைச் சிகரத்தில் ஒரு தவயோகியைப் பார்த்தேன். அவர் ஞானக் கண் படைத்த மகான். அவர் என்ன சொன்னார் தெரியுமா? 'யானைக்கு ஒரு காலம் வந்தால் பூனைக்கு ஒரு காலம் வரும்.' இப்போது தென்னாடு மேம்பாடு அடையும் காலம் வந்திருக்கிறது. வெகு காலமாக இப்புண்ணிய பாரத பூமியில் பெரிய பெரிய சக்கரவர்த்திகளும், வீராதி வீரர்களும், ஞானப் பெருஞ் செல்வர்களும் மகா கவிஞர்களும் வட நாட்டிலேயே அவதரித்து வந்தார்கள். ஆனால் வட நாட்டைச் சீக்கிரம் கிரகணம் பிடிக்கப் போகிறது. இமய மலைக்கு அப்பாலிருந்து ஒரு மகா முரட்டு ஜாதியார் வந்து வடநாட்டைச் சின்ன பின்னம் செய்வார்கள். கோயில்களையும் விக்கிரகங்களையும் உடைத்துப் போடுவார்கள். ஸநாதன தர்மம் பேராபத்துக்கு உள்ளாகும். அப்போது நமது தர்மம், வேத சாஸ்திரம், கோயில் வழிபாடு—ஆகிய வற்றை யெல்லாம் தென்னாடுதான் காப்பாற்றித் தரப் போகிறது. வீராதி வீரர்களான சக்கரவர்த்திகள் இந்தத் தென்னாட்டில் தோன்றி நாலு திசைகளிலும் ஆட்சி செலுத்துவார்கள். மகா ஞானிகளும், பண்டிதோத்தமர்களும், பக்த சிரோமணிகளும் இத் தென்னாட்டில் அவதரிப்பார்கள்!' என்று இவ்விதம் அந்தப் பொதிகைமலைச் சிவயோகி அருளினார். அந்த யோகியின் தீர்க்க தரிசனம் உண்மையாகும் என்ற நம்பிக்கை எனக்கு இப்போது பிறந்திருக்கிறது. திருமலை!''

''சுவாமி! தாங்கள் ஏதேதோ ஆகாசக் கோட்டைகள் கட்டிக் கொண்டிருக்கிறீர்கள். ஆனால் அங்கே இராஜ்யத்தின் அஸ்திவாரத்தையே தகர்த்தெறியப் பார்க்கிறார்கள். குருதேவரே! நான் பார்த்ததையெல்லாம் தாங்கள் பார்த்து நான் கேட்டதை யெல்லாம் தாங்களும் கேட்டிருந்தால் இவ்வளவு குதூகலமா யிருக்க மாட்டீர்கள். இந்தச் சோழ சாம்ராஜ்யத்துக்கு ஏற்படப் போகும் அபாயத்தை நினைத்துக் கதி கலங்குவீர்கள்...''

''திருமலை! ஆம், நான் மறந்தே விட்டேன். அதிக உற்சாகம் என் அறிவை மூடிவிட்டது. நீ உன் பிரயாணத்தில் தெரிந்து வந்த செய்திகளை இன்னம் நான் கேட்கவே இல்லை. சொல், கேட்கிறேன். எவ்வளவு பயங்கரமான செய்திகளா யிருந்தாலும் தயங்காமல் சொல்!''

''சுவாமி! இங்கேயே சொல்லும்படி ஆக்ஞாபிக்கிறீர்களா? நான் கொண்டு வந்த செய்திகளை வாயு பகவான் கேட்டால் நடுங்குவார்; சமுத்திர ராஜன் கேட்டால் ஸ்தம்பித்து நிற்பார்; பட்சிகள் கேட்டால் பறக்கும் சக்தியை இழந்து சுருண்டு விடும்; ஆகாசவாணியும் பூமாதேவியும் கூட அலறிவிடுவார்கள். அப்படிப்பட்ட செய்திகளை இங்கே பகிரங்கமாகச் சொல்லும்படியா பணிக்கிறீர்கள்?'' என்றான் ஆழ்வார்க்கடியான்.

''அப்படியானால் வா! காற்றும் கனலும் புகாத பாதாளக் குகை ஒன்று இந்தத் தீவிலே இருக்கிறது. அங்கே வந்து விவரமாகச் சொல்லு!'' என்றார் அநிருத்தப் பிரம்மராயர்.

## பதின்மூன்றும் அத்தியாயம்

# "பொன்னியின் செல்வன்"

வந்தியத்தேவன் நாகத்தீவின் முனையில் இறங்கி மாதோட்டத்தை நோக்கிப் போய்க் கொண்டிருந்த அதே சமயத்தில் அநிருத்தப் பிரம்மராயரும் ஆழ்வார்க்கடியானும் சாம்ராஜ்ய நிலைமையைப்பற்றி விவாதித்துக் கொண்டிருந்த அதே நேரத்தில், குந்தவை தேவியும் கொடும்பாளூர் இளவரசி வானதியும், அம்பாரி வைத்த ஆனை மீது ஏறித் தஞ்சை நகரை நெருங்கினார்கள்.

இளையபிராட்டி சில காலமாகத் தஞ்சைக்குப் போவதில்லை என்று வைத்துக் கொண்டிருந்தாள். இதற்குப் பல காரணங்கள் இருந்தன. தஞ்சையில் அரண்மனைப் பெண்டிர் தனித் தனியாக வசிக்கும்படியாகப் போதிய அரண்மனைகள் இன்னும் உண்டாகவில்லை. சக்கரவர்த்தியின் பிரதான அரண்மனையிலேயே எல்லாப் பெண்டிரும் இருந்தாக வேண்டும். மற்ற அரண்மனைகளை யெல்லாம் பழுவேட்டரையர்களும் மற்றும் பெருந்தரத்து அரசாங்க அதிகாரிகளும் ஆக்கிரமித்துக் கொண்டிருந்தார்கள். பழையாறையில் அரண்மனைப் பெண்டிர் சுயேச்சையாக இருக்க முடிந்தது. விருப்பம் போல் வெளியில் போகலாம்; வரலாம். ஆனால் தஞ்சையில் வசித்தால் பழுவேட்டரையர்களின் கட்டுப்பாடுகளுக்கு உட்பட்டுத் தீர வேண்டும். கட்டுப்பாடுகளும், நிர்ப்பந்தங்களும் இளைய பிராட்டிக்குப் பிடிப்பதில்லை. அல்லாமலும் பழுவூர் இளைய ராணியின் செருக்கும் அவளுடைய அகம்பாவ நடத்தைகளும் குந்தவைப் பிராட்டிக்கு மிக்க வெறுப்பை அளித்தன. அரண்மனைப் பெண்டிர்கள் பழையாறையில் இருப்பதையே சக்கரவர்த்தியும் விரும்பினார். இந்தக் காரணங்களினால் குந்தவைப் பிராட்டி பழையாறையிலேயே வசித்து வந்தாள். உடம்பு குணமில்லாத தன் அருமைத் தந்தையைப் பார்க்க வேண்டும், பணிவிடை செய்ய வேண்டும் என்ற ஆர்வத்தையும் கட்டுப்படுத்திக் கொண்டிருந்தாள்.

ஆனால் வந்தியத்தேவன் வந்து விட்டுப் போனதிலிருந்து இளைய பிராட்டியின் மனத்தில் ஒரு மாறுதல் ஏற்பட்டிருந்தது. இராஜரீகத்தில் பயங்கரமான சூழ்ச்சிகளும் சதிகளும் நடைபெற்றுக் கொண்டிருக்கும்போது நாம் பழையாறையில் உல்லாசமாகப் பூங்காவனங்களில் ஆடிப் பாடிக் கொண்டு காலம் கழிப்பது சரியா? தமையன் தொண்டை நாட்டில் இருக்கிறான்; தம்பியோ ஈழ நாட்டில் இருக்கிறான். அவர்கள் இருவரும் இல்லாத சமயத்தில் இராஜ்யத்தில் நடக்கும் விவகாரங்களை நாம் கவனித்தாக வேண்டும் அல்லவா? தலைநகரில் அவ்வப்போது நடக்கும் நிகழ்ச்சிகளை அந்தரங்கத் தூதர்கள் மூலம் அறிவிக்க வேண்டும் என்று தமையன் ஆதித்த கரிகாலன் கேட்டுக் கொண்டிருக்கிறானே? பழையாறையில் வசித்தால் தஞ்சையில் நடக்கும் காரியங்கள் எப்படித் தெரிய வரும்?

வந்தியத் தேவன் அறிவித்த செய்திகளோ மிகப் பயங்கரமாக இருந்தன. பழுவேட்டரையர்கள் தங்கள் அந்தஸ்துக்கு மீறி அதிகாரம் செலுத்தி வந்தது மட்டுமே இதுவரை இளைய பிராட்டிக்குப் பிடிக்காம லிருந்தது. இப்போதோ சிம்மாசனத்தைப் பற்றியே சூழ்ச்சி செய்ய ஆரம்பித்து விட்டார்கள். பாவம்! அந்தப் பரம சாது மதுராந்தகனையும் தங்கள் வலையில் போட்டுக் கொண்டார்கள். சோழ நாட்டுச் சிற்றரசர்களையும் பெருந்தனத்து அதிகாரிகளையும் தங்கள் வசப்படுத்திக்கொண்டார்கள். எந்த நேரத்தில் என்ன நடக்குமோ தெரியாது. இவர்களுடைய சூழ்ச்சியும், வஞ்சனையும், துராசையும் எந்த வரையில் போகும் என்று யார் கண்டது? சுந்தர சோழரின் உயிருக்கு உலை வைத்தாலும் வைத்துவிடுவார்கள்! சக்கரவர்த்தியின் புதல்வர்கள் இருவரும் இல்லாத சமயத்தில் அவருக்கு ஏதாவது நேர்ந்து விட்டால்? மதுராந்தகனைச் சிம்மாசனத்தில் ஏற்றி வைத்துவிடுவது எளிதாக இருக்கும் அல்லவா? ஒருவேளை அவர்களுக்கு யோசனை தெரியாவிட்டாலும் அந்த ராட்சஸி நந்தினி சொல்லிக் கொடுப்பாள். அவர்கள் தயங்கினாலும் இவள் துணிவூட்டுவாள். ஆகையால் தஞ்சாவூரில் நம் தந்தையின் அருகில் நாம் இனி இருப்பதே நல்லது. சூழ்ச்சியும் சதியும் எந்த வரைக்கும் போகின்றன என்று கவனித்துக் கொண்டு வரலாம். அருமைத் தந்தைக்கும் ஆபத்து ஒன்றும் வராமல் பார்த்துக் கொள்ளலாம்.

சாதுவாகிய மதுராந்தகனை ஏன் இவர்கள் சிம்மாசனத்தில் ஏற்றப் பார்க்கிறார்கள்? தர்ம நியாய முறைக்காகவா? இல்லவே இல்லை! மதுராந்தகனுக்குப் பட்டம் கட்டினால் அவனைப் பொம்மையாக வைத்துக் கொண்டு தங்கள் இஷ்டம் போல் எல்லாக் காரியங்களையும் நடத்திக் கொள்ளலாம் என்பதற்காகத்

தான். அப்புறம் நந்தினி வைத்தது தான் சோழ சாம்ராஜ்யத்தில் சட்ட மாகிவிடும்! அவளுடைய அதிகாரத் துக்குப் பயந்துதான் மற்றவர்கள் வாழ வேண்டும். அவளிடம் மற்ற அரண்மனை மாதர் கைகட்டி நிற்கவேண் டும். சீச்சீ! அத்தகைய நிலைமைக்கு இடம் கொடுக்க முடியுமா? நான் ஒருத்தி இருக்கும்வரையில் அது நட வாது. பார்க்கலாம் அவளுடைய சாமர்த்தியத்தை!

தஞ்சாவூரில் இருப்பது தனக்குப் பலவகையிலும் சிரமமாகவே இருக் கும். சுயேச்சை என்பதே இல்லா மற்போய்விடும். தன்னுடைய திரு மணத்தைப் பற்றிய பேச்சை யாரே னும் எடுப்பார்கள். அதைக் கேட்கவே தனக்குப் பிடிக்காது. நந்தினியைச் சில சமயம் பார்க்கும்படியாக இருக்கும். அவளுடைய அதிகாரச் செருக்கைத் தன்னால் சகிக்க முடியாது. ஆனால் இதையெல்லாம் இந்தச் சமயத்தில் பார்த்தால் சரிப்படுமா? இராஜ்யத் துக்குப் பேரபாயம் வந்திருக்கிறது; தந்தையின் உயிருக்கும் அபாயம் நேர லாம் என்ற பயமும் இருக்கிறது. இப் படிப்பட்ட சந்தர்ப்பத்தில் நாம் இருக்க வேண்டிய இடம் தஞ்சையே அல்லவா?

இவ்வளவையும் தவிர வேறொரு முக் கிய காரணமும் இருந்தது. அது வந் தியத்தேவனைப் பற்றி ஏதேனும் செய்தி உண்டா என்று தெரிந்துகொள்ளும் ஆசைதான். வந்தியத் தேவன் கோடிக் கரைப் பக்கம் போயிருக்கிறான் என்பது தெரிந்து அவனைப் பிடித்து வரப் பழு வேட்டரையர்கள் ஆட்களை அனுப்பி யிருப்பதைப் பற்றி இளைய பிராட்டி கேள்விப்பட்டாள். புத்தி யுக்திகளில் தேர்ந்த அந்த இளைஞன் இவர்களிடம் அகப்பட்டுக் கொள்வானா? ஒரு வேளை அகப்பட்டால் தஞ்சாவூருக்குத்தான் கொண்டு வருவார்கள். அச்சமயம் நாம் அங்கே இருப்பது மிகவும் அவ சியம் அல்லவா? ஆதித்த கரிகாலன் அனுப்பிய தூதனை அவர்கள் அவ் வளவு எளிதில் ஒன்றும் செய்துவிட முடியாது. ஏதாவது குற்றம் சாட்டித் தான் தண்டிக்க வேண்டும். அதற் காகவே சம்புவரையர் மகனை முதுகில் குத்திக் கொல்ல முயன்றதாகக் குற்றம் சாட்டியிருக்கிறார்கள். அது பொய் என்பதில் சந்தேகம் இல்லை. ஆனால் அது பொய் என்பதை நிரூபிக்க வேண் டும். கந்தமாறனுடன் பேசி, அவ னுடைய வாய்ப் பொறுப்பை அறிந்து கொள்வது அதற்கு உபயோகமா யிருக்கலாம்...

இவ்விதமெல்லாம் குந்தவையின் உள்ளம் பெரிய பெரிய சூழ்ச்சிகளி லும் சிக்கலான விவகாரங்களிலும் சஞ் சரித்துக் குழம்பிக் கொண்டிருக்கையில் அவளுடன் யானை மீது வந்த அவள் தோழி வானதியின் உள்ளம் பால் போன்ற தூய்மையுடனும் பளிங்கு போன்ற தெளிவுடனும் ஒரே விஷ யத்தைப் பற்றியே சிந்தித்துக் கொண் டிருந்தது. அந்த ஒரு விஷயம் இளவர சர் அருள்மொழி வர்மர் எப்போது இலங்கையிலிருந்து திரும்பி வருவார் என்பது பற்றித்தான்.

''அக்கா! அவரை உடனே புறப் பட்டு வரும்படி ஓலை அனுப்பி யிருப்ப தாகச் சொன்னீர்கள் அல்லவா! வந் தால் எவ்விடம் வருவார்? பழை யாறைக்கா? தஞ்சாவூருக்கா?'' என்று வானதி கேட்டாள்.

தஞ்சாவூருக்கு இவர்கள் போயிருக் கும்போது இளவரசர் பழையாறைக்கு வந்துவிட்டால் என்ன செய்கிறது என்பது வானதியின் கவலை.

வேறு யோசனைகளில் ஆழ்ந்திருந்த குந்தவைப் பிராட்டி வானதியைத் திரும்பிப் பார்த்து, ''யாரைப் பற்றி யடி கேட்கிறாய்? பொன்னியின் செல் வனைப் பற்றியா?'' என்றாள்.

''ஆமாம் அக்கா! அவரைப் பற்றித் தான். இளவரசரைப் 'பொன்னியின் செல்வன்' என்று நாலைந்து தடவை தாங்கள் குறிப்பிட்டு விட்டீர்கள். அதற்குக் காரணம் சொல்லவில்லை. பிற்பாடு சொல்வதாகத் தட்டிக்கழித் துக்கொண்டு வந்திருக்கிறீர்கள். இப் போதாவது சொல்லுங்களேன். தஞ் சாவூர்க் கோட்டை இன்னும் வெகு தூரத்தில் இருக்கிறது. இந்த யானையோ ஆமை நகர்வது போல் நகர்கிறது!'' என்றாள் வானதி.

''இதற்கு மேல் யானை வேகமாகப் போனால் நம்மால் இதன் முதுகில் இருக்க முடியாது. அம்பாரியோடு நாமும் கீழே விழ வேண்டியதுதான்! அடியே! தக்கோலப் போரில் என்ன நடந்தது என்று உனக்குத் தெரியுமா?''

''அக்கா! 'பொன்னியின் செல்வன்' என்னும் பெயர் எப்படி வந்தது என்று சொல்லுங்கள்!''

''அடி கள்ளி! நீ அதை மறக்க மாட்டாய் போலிருக்கிறது. சொல் கிறேன், கேள்!'' என்று குந்தவைப் பிராட்டி சொல்லத் தொடங்கினாள்.

* * *

சுந்தரசோழ சக்கரவர்த்தி பட் டத்துக்கு வந்த புதிதில் அவருடைய குடும்ப வாழ்க்கை ஆனந்த மயமாக

இருந்தது. அரண்மனைப் படகில் குடும்பத்துடன் அமர்ந்து சக்கரவர்த்தி பொன்னி நதியில் உல்லாசமாக உலாவி வருவார். அத்தகைய சமயங்களில் படகில் ஒரே குதூகலமாக இருக்கும். வீணை கானமும் பாணர்களின் கீதமும் கலந்து காவேரி வெள்ளத்தோடு போட்டி யிட்டுக் கொண்டு பெருகும். இடையிடையே யாரேனும் ஏதேனும் வேடிக்கை செய்வார்கள். உடனே கலகலவென்று சிரிப்பின் ஒலி கிளம்பிக் காவேரிப் பிரவாகத்தின் சலசலப்பு ஒலியுடன் ஒன்றுகும்.

சில சமயம் பெரியவர்கள் தங்களுக் குள் பேசி மகிழ்வார்கள். படகில் ஒரு பக்கத்தில் குழந்தைகள் கும்மாள மடித்துக் கொண்டிருப்பார்கள். சில சமயம் எல்லோருமாகச் சேர்ந்து வேடிக்கை விநோதங்களில் ஈடுபட்டுத் தங்களை மறந்து களிப்பார்கள்.

ஒரு நாள் அரண்மனைப் படகில் சக்கர வர்த்தியும் ராணிகளும் குழந்தைகளும் உட்கார்ந்து காவேரியில் உல்லாசப் பிரயாணம் செய்து கொண்டிருந்த போது, திடீரென்று, "குழந்தை எங்கே? தம்பி அருள்மொழி எங்கே?" என்று ஒரு குரல் எழுந்தது. இந்தக் குரல் குந்தவையின் குரல்தான். அருள் மொழிக்கு அப்போது வயது ஐந்து. குந்தவைக்கு வயது ஏழு. அரண்மனை யில் அனைவருக்கும் கண்ணினும் இனிய செல்லக் குழந்தை அருள்மொழி. ஆனால் எல்லாரிலும் அவனிடம் வாஞ்சை உடையவள் அவனுடைய தமக்கை குந்தவை. படகில் குழந்தை யைக் காணும் என்பதைக் குந்தவை தான் முதலில் கவனித்தாள். உடனே மேற்கண்டவாறு கூச்சலிட்டாள். எல் லோரும் கதி கலங்கிப் போனார்கள். படகில் அங்குமிங்கும் தேடினார்கள். ஆனால் அரண்மனைப் படகில் அதிக மாகத் தேடுவதற்கு இடம் எங்கே? சுற்றிச் சுற்றித் தேடியும் குழந்தையைக் காணவில்லை. குந்தவையும் ஆதித்த னும் அலறினார்கள். ராணிகள் புலம்பி னார்கள். தோழிமார்கள் அரற்றி னார்கள். படகோட்டிகளில் சிலர் காவேரி வெள்ளத்தில் குதித்துத் தேடி னார்கள். சுந்தர சோழரும் அவ்வாறே குதித்துத் தேடலுற்றார். ஆனால் எங்கே என்று தேடுவது? ஆற்று வெள் ளம் குழந்தையை எவ்வளவு தூரம் அடித்துக்கொண்டு போயிருக்கும் என்று யார் கண்டது? குழந்தை எப்போது வெள்ளத்தில் விழுந்தது என்பதுதான் யாருக்குத் தெரியும்? நோக்கம், குறி என்பது ஒன்றுமில்லாமல் காவேரியில் குதித்தவர்கள் நாலாபுறமும் பாய்ந்து துளாவினார்கள். குழந்தை அகப்பட வில்லை. இதற்குள் படகில் இருந்த இராணிகள் — தோழிமார்களில் சிலர் மூர்ச்சை போட்டு விழுந்து விட் டார்கள். அவர்களைக் கவனிப்பார் இல்லை. உணர்ச்சியோடு இருந்த மற்ற வர்கள் 'ஐயோ!' என்று அழுது புலம் பிய சோகக் குரல் காவேரி நதியின் ஓங்காரக் குரலை அடக்கிக் கொண்டு மேலெழுந்தது. நதிக்கரை மரங்களில் வசித்த பறவைகள் அதைக் கேட்டுத் திகைத்து மோனத்தில் ஆழ்ந்தன.

சட்டென்று ஓர் அற்புதக் காட்சி தென்பட்டது. படகுக்குச் சற்றுத் தூரத் தில் ஆற்று வெள்ளத்தின் மத்தியில் அது தெரிந்தது. பெண் உருவம் ஒன்று இரண்டு கைகளிலும் குழந்தையைத் தூக்கிப் பிடித்துக் கொண்டு நின்றது. அந்த மங்கையின் வடிவம் இடுப்பு வரை யில் தண்ணீரில் மறைந்திருந்தது. அப் பெண்ணின் பொன் முகமும் மார்பகமும் தூக்கிய கரங்களும் மட்டுமே மேலே தெரிந்தன. அவற்றிலும் பெரும் பகுதி யைக் குழந்தை மறைத்துக் கொண் டிருந்தது. எல்லாரையும் போல் சுந்தர சோழரும் அக்காட்சியைப் பார்த்தார். உடனே பாய்ந்து நீந்தி அந்தத் திசை நோக்கிச் சென்றார். கைகளை நீட்டிக் குழந்தையை வாங்கிக் கொண்டார். இதற்குள் படகும் அவர் அருகில் சென்றுவிட்டது. படகிலிருந்தவர்கள் குழந்தையைச் சுந்தர சோழரிடமிருந்து வாங்கிக் கொண்டார்கள். சக்கர வர்த்தியையும் கையைப் பிடித்து ஏற்றி விட்டார்கள். சக்கரவர்த்தி பட கில் ஏறியதும் நினைவற்று விழுந்து விட்டார். அவரையும் குழந்தையை யும் கவனிப்பதில் அனைவரும் ஈடு பட்டார்கள். குழந்தையைக் காப்பாற் றிக் கொடுத்த மாதரசி என்னவானாள் என்று யாரும் கவனிக்கவில்லை. அவ ளுடைய உருவம் இப்படி இருந்தது என்று அடையாளம் சொல்லும்படி யாரும் கவனித்துப் பார்க்கவும் இல்லை. 'குழந்தையைக் காப்பாற்றியவள் நான்' என்று பரிசு கேட்பதற்கு அவள் வரவும் இல்லை. ஆகவே, காவேரி நதியாகிய தெய்வந்தான் இளவரசர் அருள் மொழிவர்மரைக் காப்பாற்றிக் கொடுத் திருக்க வேண்டும் என்று அனைவரும் ஒருமுகமாக முடிவு கட்டினார்கள். ஆண்டுதோறும் அந்த நாளில் பொன்னி நதிக்குப் பூஜை போடவும் ஏற்பாடா யிற்று. அதுவரை அரண்மனைச் செல்வ னாக இருந்த அருள்மொழி வர்மன் அன்று முதல் 'பொன்னியின் செல்வன்' ஆனான்.

(தொடரும்)

# நிகோ

## கிருமி நாசினி சோப்பு

## பார்க்-டேவிஸ் தயாரிப்பு

பருக்கள், கரும்புள்ளிகள், வேர்க்குரு மற்றும் இதர சரும நோய்களினின்று உங்கள் சருமத்தைப் பாதுகாத்து அதை சுத்தமாகவும், ஆரோக்கியத்துடனும் வைத்திருக்கிறது. ஷாம்புவாக உபயோகிக்கும் போது கிருமிகளைக் கொல்லும் சக்தி வாய்ந்த அதன் நுரை பொடுகளிலிருந்து உங்களைக் காக்கிறது. ஒப்பற்ற கிருமி நாசினி சோப்பான நிகோ மூன்று விதங்களில் இணையற்றது—சுத்தம் செய்து, கிருமிகளை அழித்து, பராமரிக்கிறது. உங்கள் சருமத்திற்குத் தேவையான தினசரி பாதுகாப்பை அளியுங்கள்




தினந்தோறும் உபயோகிப்பதற்கான ஒரிஜினல் கிருமி நாசினி சோப்பு.

JAISONS

# மகாபாரதம்

## ராஜாஜி

"அப்பனே! நீ என் நூறு மக்களில் ஒருவனையாவது விட்டு மற்றவர்களையெல்லாம் கொன்று கோபம் தீர்த்துக் கொண்டிருந்தாயாகில் முதியவர்களாகிய எங்கள் இருவருக்கும் ஊன்றுகோலாவது இருந்திருக்கும். தருமபுத்திரன் எங்கே? அவனைக் கூப்பிடுங்கள்" என்றாள் காந்தாரி.

இதைக் கேட்டதும் யுதிஷ்டிரன் நடுக்கமுற்று, கைகூப்பிக் கொண்டு கண்களை வஸ்திரத்தினால் கட்டிக் கொண்டிருந்த காந்தாரியிடம் வந்து வணங்கி, "தேவி! உன் புத்திரர்களைக் கொன்றவனும், கொடியவனுமான யுதிஷ்டிரன் இதோ உன் முன் நிற்கிறான். சாபத்துக்குத் தகுந்தவன்; சபிப்பாயாக. நான் துரோகம் செய்தவன்; எனக்கு உயிரிலாவது ராஜ்யத்திலாவது இனிப் பயனில்லை" என்று கூறிக் காந்தாரியின் காலில் விழுந்தான்.

காந்தாரி பெருமூச்சு விட்டு ஒன்றும் சொல்லாமல் இருந்தாள். யுதிஷ்டிரன் பேரில் தன் பார்வை விழுந்தால் அவன் எரிந்து போவான் என்று அறிந்து அவனைப் பார்க்காமல் வேறு பக்கம் முகத்தைத் திருப்பிக் கொண்டாள். ஆயினும் கண்களை மறைத்துக் கட்டியிருந்த வஸ்திரத்தின் இடைவெளி வழியே யுதிஷ்டிரன் கால் விரல்களை மட்டும் பார்த்து விட்டாள். அவை உடனே விகாரப்பட்டுப் போயின என்கிறார் பௌராணிகர்.

அருச்சுனன் காந்தாரியினுடைய சோகத்தின் வேகத்துக்குப் பயந்து, வாசுதேவனுக்குப் பின்புறமாக ஒளிந்து கொண்டானாம்.

பிறகு மகா அறிவாளியும் புண்ணியவதியுமான காந்தாரி தன் கோபத்தை அடக்கிக் கொண்டு பாண்டவர்களை ஆசீர்வதித்து விட்டு அவர்களைக் குந்தியிடம் போகச் சொன்னாள்.

தன் புத்திரர்கள் அனைவரையும் இழந்து புலம்பிக் கொண்டிருந்த திரௌபதியைப் பார்த்துக் காந்தாரி, "பெண்ணே! துக்கப்படாதே! உன்னையும் என்னையும் எவன் தேற்றப் போகிறான்; என்னுடைய குற்றத்தினாலேயே இந்தக் குலம் நாசமாயிற்று" என்றாள்.



## 98. "அண்ணனைக் கொன்றேன்"

யுத்தத்தில் இறந்தவர்களுடைய ஆத்மசாந்திக்காக என்றும் தண்ணீரும் விட்டு விட்டுக் கங்கைக் கரையில் பாண்டவர்கள் ஒரு மாதம் தங்கினார்கள்.

ஒரு நாள் நாரதர் வந்து, "தருமபுத்திரனே! கிருஷ்ணனுடைய அனுக்கிரகத்தினாலும் அருச்சுனனுடைய பலத்தினாலும் உன்னுடைய தரும பலத்தினாலும் நீ வெற்றி பெற்றாய். பூமி முழுவதும் உனதாயிற்று. சந்தோஷம் அடைந்தாயா?" என்றார்.

"பகவானே! பூமி எனதாயிற்று என்பது உண்மை. ஆயினும் சுற்றத்தார்கள் மாண்டார்கள். பிரியமான குமாரர்களைப் பலி கொடுத்தோம். இந்த வெற்றி பெரிய அபஜயமாகவே எனக்குத் தோன்றுகிறது. நாரதரே! மாறுபடாத நியாயமும் உலகம் வியக்கும்படியான சாமர்த்தியமும் படைத்திருந்த எங்களுடைய தமையன் கர்ணனைப் பகைவன் என்று கருதிக் கொன்று விட்டோம். ராஜ்யத்தில் ஆசை வைத்து இந்தப் பெரிய பாபத்தைச் செய்து விட்டோம். அவனோ தாயாருக்குத் தான் கொடுத்த வாக்கைக் காப்பாற்றி என்னைக் கொல்லாமலேயே விட்டான். இத்தகைய தமையனைக் கொலை செய்த நீசனை என்னுடைய மனம் மிகவும் தவிக்கிறது. கர்ணனுடைய பாதங்கள் எங்களுடைய தாயார் குந்தியினுடைய பாதங்களைப் போலவே இருந்தன.

சபையில் எங்களை அவன் அவமதித்த போது எனக்கு உண்டான கோபம் அவனுடைய கால்களைக் கண்டதும் எப்படியோ தணிந்து விட்டது. இது இப்போது நினைவுக்கு வருகிறது.''

இவ்வாறு சொல்லி யுதிஷ்டிரன் பெருமூச்சு விட்டு மிகவும் துக்கப்பட்டான். இதன் பின் நாரதர் கர்ணனுடைய சரித்திரத்தை யெல்லாம் எடுத்துச் சொல்லி அவனுக்கு ஏற்பட்ட சாபங்களையும் எடுத்துச் சொன்னார்.

அருச்சுனன் தன்னைவிட தனுர் வேதத்தில் சிறந்தவன் என்று கர்ணன் தெரிந்து கொண்டு அதற்காகத் துரோணரை அடைந்து தனக்குப் பிரம்மாஸ்திரத்தை உபதேசித்துத் தரும்படி கேட்டான். அவர் அது தன்னால் முடியாது. ஒழுக்கம் தவறாத பிராமணன் அல்லது பெருந் தவம் புரிந்து சுத்தமடைந்த க்ஷத்திரியன் இருவருமேதான் அதை அடைய முடியும் என்றும் சொல்லிவிட்டார். பிறகு கர்ணன் மகேந்திர மலைக்குச் சென்று பரசுராமரை ஏமாற்றித் தான் பிராமணன் என்று சொல்லி அவரிடம் சிடனாக அமர்ந்து தனுர் வேதமும் அஸ்திரங்களும் கற்றுக் கொண்டான்.

ஒரு நாள் கர்ணன் தனியாக விற்பயிற்சி செய்து கொண்டிருந்த சமயம் அந்த ஆசிரமத்துக்குச் சமீபத்தில் ஒரு பிராமணருடைய பசு தற்செயலாக அடிபட்டு இறந்து விட்டது. பசுவுக்கு உடையவரான பிராமணர் கோபமுற்று, ''யுத்தத்தில் உன் தேர்ச் சக்கரம் மண்ணில் பதிந்து போகும். அப்போது இந்தப் பசுவைப் போல் நீயும் கொல்லப்படுவாய்'' என்று சொல்லிச் சபித்தார்.

பரசுராமர் கர்ணனிடம் மிகுந்த அன்பு கொண்டு எல்லாவித விற் பயிற்சியும் பிரம்மாஸ்திரத்தைப் பிரயோகிக்கும் முறையும் நிவர்த்திக்கும் முறையும் உள்பட உபதேசித்தார். ஒரு நாள், அவர் இந்த மாணவன் பிராமணன் அல்ல என்று கண்டு கொண்டு விட்டார். ஒரு புழு கர்ணனுடைய துடையைக் கடித்துத் துளைத்த; கொண்டிருந்தும் வெகுநேரம் அதைப் பொறுத்துக் கொண்டு கொஞ்சமும் அசையாமல் தன் துடைமேல் தலை வைத்துத் தூங்கிக் கொண்டிருந்த பரசுராமரை எழுப்பாமல் இருந்தான். பிறகு ரத்தம் ஓடிப் பெருகி அவரை எழுப்பிற்று. பரசுராமர் எழுந்து, கர்ணனைப்பார்த்து, ''மூடனே, இத்தகைய சகிப்புத் திறமை



க்ஷத்திரியன்தான் படைத்திருப்பான். உண்மையைச் சொல். நீ பிராமணன் அல்ல. என்னை ஏமாற்றி விட்டாய். என்னிடம் நீ கற்றுக் கொண்ட வித்தை மரண காலத்தில் உன் நினைவுக்கு வராது'' என்று சபித்து விட்டார்.. கர்ணனுடைய சகிப்புத் தன்மையே அவன் க்ஷத்திரியன் என்பதைக் காட்டி விட்டது. பரசுராமருக்கு க்ஷத்திரியர்கள் மேல் மிகுந்த க்ஷாத்திரம்.

கர்ணன் மகா கொடையாளி. ஒரு நாள் பிராமண வேஷம் பூண்டு வந்த தேவேந்திரனால் யாசிக்கப்பட்டுத் தன் குண்டலங்களையும் கவசத்தையும் கர்ணன் கழற்றிக் கொடுத்து விட்டான். தெய்விக சக்தி பொருந்திய குண்டலங்களையும் உடன் பிறந்த கவசத்தையும் கொடுத்துவிட்டுப் பிறகு கர்ணன் பலவீனமடைந்தான்.

''குந்திக்குக் கர்ணன் தந்த வரத்தினாலும் பரசுராமருடைய சாபத்தாலும் பசுவை இழந்த பிராமணருடைய கோபத்தாலும் பீஷ்மர் மகாரதர்களில் இவனை ஒருவனாகக் கணக்கிடாமல் அவமானப்படுத்தியதாலும், தேரை ஓட்டிய சல்லியன் செய்த இகழ்ச்சியின் பயனாகவும், வாசுதேவனுடைய யுக்தி முறைகளினாலும் கர்ணன் இறந்தான். இவ்வாறு பல காரணங்கள் ஒன்றுகூடிக் கர்ணன் மரணமடைவதற்கு ஏதுவாகின்றன. நீதான் அதற்குக் காரணம் என்று நினைத்துத் துக்கிக்க வேண்டாம்'' என்றார் நாரதர்.

யுதிஷ்டிரன் நாரதர் சொற்களால் ஆறுதல் அடையவில்லை.

குந்தி தேவி சொல்லலானாள்: ''கர்ணனைக் குறித்து நீ சோகப்படாதே! கெட்ட புத்தியுள்ள துரியோதனனை விட்டுவிட்டு உன் பட்சம் வந்து சேரும்படி அவன் தகப்பனான சூரிய பகவானே முயன்றான். நானும் எவ்வளவோ சொல்லிப் பார்த்தேன். அவன் கேட்கவில்லை. அவன் முடிவுக்கு அவனே காரணம்'' என்றாள்.

''கர்ணனுடைய பிறப்பின் ரகசியத்தை மூடி வைத்து எங்களை நீ வஞ்சித்துவிட்டாய். அதனால் எங்களுடைய பெரும் துக்கத்துக்குக் காரணமானாய். இன்று முதல் பெண்கள் ரகசியத்தைக் காப்பாற்றச் சக்தியற்றவர்களாகட்டும்'' என்று யுதிஷ்டிரன், 'அண்ணனைக் கொன்றோமே' என்ற வருத்தத்தில் சாபமிட்டதைப் பௌராணிகர் ஒரு கதையைக் கற்பித்துச் சொல்கிறார்.

பெண்கள் ரகசியத்தைக் காப்பாற்ற மாட்டார்கள் என்பது உலக அபிப்பிராயம். அதை யொட்டி இந்தக் கதையும் அழகாகக் கற்பனை செய்யப்பட்டிருக்கிறது. லௌகிக லாப நஷ்டம் எவ்வாறாயினும் ரகசியத்தைக் காப்பாற்றுவது ஒரு பெரிய தார்மீக குணம் என்று எண்ண வேண்டியதில்லை. அது இல்லையே என்று ஸ்திரீகள் விசனப்பட வேண்டியதில்லை. ரகசியத்தைக் காப்பாற்றும் சக்தி இல்லாமலிருப்பது அறத் துறையில் ஒரு பெரும் குறையல்ல. பெண்களுக்கு இயற்கையான அன்பினால் இரகசியங்களைக் காப்பாற்றுவதில் குறை ஏற்படலாம்.

ஆயினும் பெண்கள் சிலர் ரகசியங்களை நன்றாகவே காப்பாற்றி வருகின்றனர். தவிர, ஆண்மக்கள் எல்லோருமே இந்தச் சாமர்த்தியம் பெற்றிருக்கிறார்கள் என்றும் சொல்ல முடியாது. பயிற்சி பேதத்தினாலும் தொழில் பேதத்தினாலும் உண்டாகும் வித்தியாசங்களை ஆண்களின் குணம் பெண்களின் குணம் என்று பிரித்துச் சொல்லிவிடுவது உலக இயல்பு.

# 99. சோகமும் சாந்தியும்

**ப**ந்துக்களைக் கொன்றோம் என்று எண்ணி எண்ணி யுதிஷ்டிரன் மனம் வாடினான். துறவு பூண்டு வனம் சென்றால்தான் இந்தப் பாவம் நீங்கும் என்று தீர்மானித்து, சகோதரர்களிடம் ''இராஜ்யத்தினாலாவது போகங்களினாலாவது எனக்குப் பிரயோஜனமில்லை. இந்தப் பூமியை நீங்கள் ஆளுங்கள். நான் வனம் போகிறேன்'' என்றான்.

அருச்சுனன் இல்லறத்தின் சிறப்பையும் கிரகஸ்தாசிரமத்தில் செய்யக் கூடிய புண்ணியங்களையும் எடுத்துக் காட்டினான். பீமசேனனும் கடுமையாகப் பேசினான். ''சாஸ்திரங்களைக் குருட்டுப் பாடம் செய்து உண்மையான அறிவு பெறாமல் மந்த புத்தியைப் படைத்தவன் போல் நீரும் பேசுகிறீர்'' என்று ஆரம்பித்து க்ஷத்திரியர்களுக்கு சந்நியாசம் கூடாது, கடமைகளைச் செய்து வாழ்க்கையை நடத்துவதே அவர்களுக்குரிய முறை என்று வற்புறுத்தினான்.

நகுலனும் கருமமார்க்கமே தகுந்தது, சந்நியாசம் சிரமமான வழியென்று தருமபுத்திரனோடு வாதாடினான். சகதேவனும் இதையே சொல்லி, ''எனக்குத் தந்தை, தாய், ஆசாரியர், உடன் பிறந்தவர் எல்லாரும் நீரே. எங்களைப் பொறுத்தருள்வீராக'' என்று மன்றாடினான்.

திரௌபதியும் பேசினாள்: "துரியோதனனையும், அவர்களைச் சேர்ந்தவர்களையும் கொன்றது நியாயமே. அதற்காக வருத்தப்படுதல் கூடாது. அரசனுடைய கடமைகளில் தண்டனை விதிப்பதும் ஒன்று. ராஜ தருமத்தில் இன்றியமையாதது. தீச்செயல் செய்தவர்களைத் தண்டித்தீர். ஆகையால் உம்முடைய சோகத்துக்குக் காரணம் இல்லை. ராஜ தருமத்தை நடத்தி இந்தப் பூமியை ஆளுவது உம்முடைய கடமை. சோகம் வேண்டாம்" என்றாள்.

பிறகு வியாசர் அநேக நியாயங்களையும் இதிகாசங்களையும் எடுத்துக் காட்டி யுதிஷ்டிரனைச் சமாதானப் படுத்தி நகரத்துக்குப் போய் ராஜ்ய பாரம் வகிக்கச் சம்மதிக்கச் செய்தார்.

அஸ்தினபுரத்தில் ராஜ்யாபிஷேகம் நடந்தது.

மறுபடியும் ராஜ்ய பாரம் வகிக்க ஆரம்பிப்பதற்கு முன் அம்புப் படுக்கையில் தவம் செய்து கொண்டு மரணத்துக்குக் காத்திருந்த பீஷ்மரிடம் சென்ற யுதிஷ்டிரன் தர்மோபதேசம் பெற்றான்.

பீஷ்மர் செய்த இந்தத் தர்மோபதேசம் மகாபாரதத்தில் சாந்த பருவம் என்று மிகப் புகழ் பெற்ற பாகமாகும்.

யுதிஷ்டிரனுக்குச் செய்ய வேண்டிய உபதேசமெல்லாம் செய்து விட்டு பீஷ்மர் உயிரை நீத்தார். பரம்பரை ஆசாரத்தின்படி யுதிஷ்டிரன் பிதாமகருக்குக் கங்கா நதியில் இறங்கி உதக தானம் செய்தான். செய்து விட்டுக் கரை ஏறி நின்றதும் நடந்து போன நிகழ்ச்சிகளையெல்லாம் எண்ணித் தாங்காத துக்கம் மேலிட்டு வேடனால் அடிக்கப்பட்ட யானையைப் போல் பூமியில் திடீரென்று விழுந்தான்.

பீமன் தமையனைக் கட்டித் தழுவித் தடவிக் கொடுத்து ஆறுதல் மொழிகள் சொன்னான். திருதராஷ்டிரனும் அப்போது யுதிஷ்டிரனை நெருங்கி, "இவ்விதம் துயரப்படுதல் கூடாது. எழுந்திரு. சகோதரர்களுடனும் நண்பர்களுடனும் பூமியை ஆள்வாயாக. அது உன் கடமை. நானும் காந்தாரியும் அல்லவா துயரப்பட வேண்டும்? க்ஷத்திரிய தருமத்தின்படி நீ வெற்றி பெற்றாய். வெற்றியை அடைந்ததனால் உண்டான கடமைகளை இப்போது செய். மந்த புத்தியுள்ள நான் விதுரனுடைய சொல்லைக் கேளாமல் பெரும் பிழை இழைத்தேன். துரியோதனனுடைய அறிவற்ற சொற்களைக் கேட்டு ஏமாந்தேன். என்னுடைய நூறு புத்திரர்களும் கனவில் கண்ட தனத்தைப் போல மறைந்து விட்டார்கள். இனி நீயே என் மகன். நீ துக்கப்பட வேண்டாம்" என்றான். (தொடரும்)





## கு. அழகிரிசாமி

எழுதும்
சமூக
நாவல்

# தீராத விளையாட்டு



கல்கி

ஏப்ரல் 13
புத்தாண்டு
மலரில்
ஆரம்பமாகிறது




# உழைக்கும் கரங்கள்



## எஸ். வெங்கடேசன்

கிராமத்திலே அப்பா வீட்டிலிருந்து சின்ன வயதிலேயே சித்தப்பா என்னைப் பட்டணம் அழைத்துக் கொண்டு வந்துவிட்டார். ஐந்தாவது வரை படித்தேன். அப்புறம் சித்தப்பா கூட அவர் தகரக் கடையிலே வேலை கற்றுக் கொண்டேன். அப்போதெல்லாம் யாராவது வீடு கட்டினல் தகரக்கடைக்கு வேலை இருக்கும். மழை தாரை, ஓட்டுக் கூரை கால்வாய் என்று சாமான் பண்ண வேணும். அதே போல் யார் வீட்டில் கல்யாணம் என்றாலும் சில்லறை வேலை நிறையச் சேரும். பருப்புக் கூடு, முறுக்குப் பெட்டி, கோலக் குழல் என்றெல்லாம் நிறையத் தேவைப்படும். சாதாரணமாக ஜட்கா வண்டி விளக்கு, தெரு விளக்குக் கூடு என்று ஓயாமல் வேலை. நிறையத் தகரக்கடை தெருவுக்குத் தெரு இருந்ததால் நான் மோட்டார் வேலை கற்றுக் கொண்டால் நல்லது என்று சித்தப்பா சொன்னர். அவரே அழைத்துப் போய் என்னை அடிசன் கம்பெனியில் டிங்கராகச் சேர்த்தார். எனக்கு வயது பதினெட்டு. அப்போது கல்யாணமாகி யிருந்தது.

மதராஸில் அப்போது பெரிய தொழிற்சாலைகள் கொஞ்சம் தான். அடிஸன், ஸ்பென்சர்;— ஸிம்ஸன். இல்லாவிட்டால் பின்னி அல்லது பெரம்பூர் ரயில்வே ஒர்க்ஷாப்பில்தான் சேர வேண்டும். தினக்கூலி 15 அணு. ஞாயிற்றுக்கிழமை சம்பளம் கிடையாது. தினம் எட்டரை மணி நேரம் வேலை. சனிக்கிழமை ஆறு மணி நேரம். டிராம் சத்தம் அரையணு. அப்படியும் நடந்தே வேலைக்குப் போயிருக்கிறேன்.

மானேஜர், என்ஜினீயர் எல்லாரும் துரைமார்கள். செய்யும் வேலை சுத்தமாக இருக்க வேண்டும். என் சித்தப்பாகூட அப்படித்தான் என்னைப் பழக்கியிருந்தார். "நாம் செய்யற வேலையை நம்மைப்போல ஓர் ஆள் பார்த்துக் குறை சொல்லக் கூடாது. தெரிந்த வரையில் சுத்தமாகச் செய்ய வேண்டும்" என்பார்.

பதினொரு வருஷங்கள் கழிந்தன. வேலையை விடும்படி வந்தது. அடுத்த நாளே வேறு கம்பெனிக்குப் போக முடிந்தது. பதினொரு வருஷங்கள் வேலை பார்த்து விலகினல் கையிலே காலணு கிடையாது. அடுத்த நாள் ஏதாவது வேலை பார்த்தால் தான் கூலி. 'பிராவிடன்ட் பண்'டாவது 'கிராசுடி'யாவது'! இப்போது அதுபோல யாராவது பதினொரு வருஷங்கள் சர்வீஸ் செய்தால் குறைந்தது மூவாயிரமாவது பிராவிடெண்ட் பண்ட் சேர்ந்துவிடாதா?

நாலு வருஷங்கள் வேறு இடங்களில் இருந்த பிறகு மறுபடியும் பழைய கம்பெனியிலேயே சேர்ந்தேன். இங்கே இப்போது மாதச் சம்பளம் போட்டார்கள். யுத்த காலம் முடிந்து, சுதந்திரமும் வந்ததும் ஒன்றென்ருகச் சௌகரியங்கள் கிடைத்தன. என்னைப்போன்ற பழைய ஆள்தான் அதன் அருமையைத் தெரிந்து கொள்ள முடியும். வெயிலில் இருந்தவனுக்குத்தானே நிழலின் அருமை தெரியும்! யூனியன் ஆரம்பித்த பிறகு எல்லாம் கிடைக்கத் தொடங்கின. ஆர். வெங்கட்ராமனும் குருமூர்த்தியும் எங்களுக்குச் செய்தது எவ்வளவோ. தொழிலாளர் அடைந்து வரும் நன்மைகள் பல. உதாரணமாக ஒன்று: இறந்தோர் குடும்ப நிவாரண நிதி என்று வைத்திருக்கிறேம். முதலில் அதிலே பன்னிரண்டு ரூபாய் போட வேண்டும். அவ்வளவு தான். சேர்ந்த நிதி டிரஸ்டாக இருக்கிறது. சர்வீஸில் யாராவது காலமாகி விட்டால் அந்தக் குடும்பத்துக்கு உடனே கைமேல் ஆயிரம் ரூபாய் தருகிறேம்.

இன்று என் பையன்கள் பார்த்தசாரதியும் மணிவண்ணனும் கிரைண்டராகவும் மெக்கானிக்காகவும் இருக்கிறார்கள். தம்பி மகனுக்கு 'டெக்னிகல்' படிக்கவே யோசனை சொன்னேன்.

நமது சம்பளம் ஜரிப்பதற்கு மனச்சாட்சிக்கு விரோதம் இல்லாமல் உழைக்கணும். இது போதும்.

## எஸ். தேவராஜன்

நான் எஸ். எஸ். எல். ஸி. முடித்து விட்டு ஒரு வருஷம் சும்மா இருந்தேன். அப்பா மூர்மார்க்கெட்டில் கடை வைத்திருந்தார். எனக்கு ஏதாவது பிஸினஸ் செய்யலாம் என்ற எண்ணம். அப்பாவின் நண்பர் ரயில்வே ஃபோர்மென் ஒருவர் என்னை லோகோ ஒர்க்ஸில் சேர்த்து விடுவதாகச் சொன்னார். கோடம்பாக்கத்தில் இன்டஸ்டிரியல் டிரெயினிங் சென்டர் என்று மத்திய அரசின் பயிற்சிப் பள்ளிக்கூடம் ஒன்று இருந்தது. அதிலே சேர்ந்து பயிற்சி பெற்றேன்.

பெரம்பூர் கோச் பாக்டரி ஆரம்பித்த புதிது. என்னோடு படித்த எல்லாருமாக அதற்கு மனுப் போட்டோம். அங்கே இருந்த ஸ்விஸ் நிபுணர்கள் பாட்ச் பாட்சாகப் புது ஆட்களை எடுத்துப் பயிற்சி கொடுத்தார்கள். இதிலே ஐந்தாவது பாட்சில் நான் சேர்ந்தேன். தச்சு வேலை, பிட்டிங், கருமார் வேலை, எலெக்ட்ரிகல் என்று எல்லாப் பிரிவிலும் பயிற்சிக்கு ஆள் எடுத்தார்கள். ஒரு வருஷம் பயிற்சிப் படிப்பு. தொழிற்சாலை வேலை, பிரேட் எல்லாம் உண்டு. அப்போதே சம்பளம் போட்டார்கள்.

இப்போது நிறையப் பயிற்சிப் பள்ளிக்கூடங்கள் தோன்றி விட்டன. கோச் பாக்டரி காலனியில் தனியே ஒரு டிரெயினிங் பள்ளிக்கூடம் இருக்கிறது. இங்கே மூன்று வருஷப் படிப்புப் படித்தால் எத்தனையோ துறைகளில் வேலை கற்றுக் கொள்ளலாம்.

பத்து வருஷங்களுக்கு முன்பு அடிப்படைச் சம்பளம் 55 ரூபாய். இப்போது நூற்றுப் பத்து. ஸ்கில்ட், ஹைலி ஸ்கில்ட், — இதிலே இரண்டு தரம் — என்றெல்லாம் உண்டு. பயிற்சியும் அனுபவமும் இருந்து சில தேர்வுகளில் தேர்ச்சி பெற்றால் முன்னுக்கு வரலாம். நான் இப்போது 'ஹைலி ஸ்கில்ட் இரண்டாவது கிரேட்' ஆக இருக்கிறேன். முதல் கிரேட் பாஸ் செய்திருக்கிறேன்.

அனுபவமும் பயிற்சியும் இருப்பவர் முன்னுக்கு வர முடியும். முன்பு சார்ஜ்மேன் ஆக இருந்த ஒருவர் இப்போது உதவித் தொழில் மானேஜர் ஆக இருக்கிறார்.

எங்கள் தொழிற்சாலை நவீனமயமானது. காரை விட்டு இறங்காமல் பிரபலஸ்தர்கள் எல்லா இலாகாவையும் சுற்றிப் பார்க்கலாம்.

மாதம் இரண்டரை நாள் கணக்கில் விடுமுறை. வேலையின்போது விபத்து ஏற்பட்டு வேலைக்கு வர முடியாமல் போனால் அது ஸ்பெஷல் லீவு. சம்பளம் உண்டு. எனக்கே இப்படி இரண்டு முறை நேர்ந்தது.

குடும்பத்தினர் பிரயாணச் சலுகை பாஸ், கோ-ஆபரேட்டிவ் ஸ்டோர், தொழிற்சாலைக்குப் போக விசேஷ பஸ், அங்கே பொழுதுபோக்குக் கிளப் என்றெல்லாம் வசதிகள் இருக்கின்றன. எத்தனையோ தொழிலாளருக்கும் நிர்வாகிகளுக்கும் இருப்பிடம் கட்டித் தந்து வருகிறார்கள்.

அதிகாலையிலே வேலைக்குப் போவதால், மாலையில் சீக்கிரம் வேலை முடிந்து வீடு திரும்ப முடிகிறது. வெல்டராக இருந்த என் நண்பர் மாலை நேரத்தில் படித்து எல். எம். இ. டிப்ளமா வாங்கினார். இப்போது இன்ஸ்பெக்டராக உயர்ந்திருக்கிறார்.

வேலை செய்யும் இடம் நல்ல சூழ்நிலை. கோடையில் பெரிய மின் விசிறி கொண்டு வைப்பார்கள். சாப்பாட்டு நேரத்தில்



ரேடியோ இசைக்கும். வேலைக் கருவிகளும் முறைகளும் நவீனமானவை.

ஓயாமல் உழைத்தால்தான் நாம் முன்னேறுவோம். நாடும் முன்னேறும். இதுவரை நான் 'ஆப்செண்ட்' ஆனதில்லை. சொல்லிக் கொள்ளாமல் மட்டம் போட்டதில்லை.

முதலில் சைக்கிளில்தான் தொழிற்சாலைக்குப் போவேன். இப்போது ஸ்கூட்டரில் போகிறேன். எத்தனையோ பேருக்கு ஸ்கூட்டர் இருக்கிறது.

ஆயிரக் கணக்கில் ஆட்கள் இருக்கிறோம். பலரும் ஒரே வயதுப் பிரிவு. ரிடையர் ஆகும் வயது வந்தால் தினம் பதினைந்து பேர் ரிடையர் ஆனபடி இருப்போம் என்று நினைக்கிறேன்!

உரிமைகளைப் போராடிப் பெறும்போது கடமைகளை மறந்துவிடக் கூடாது; அதில் கண்ணும் கருத்துமாய் இருக்கணும் என்பது தான் என் கொள்கை.

பேட்டி: **அம்பி ஆசீர்வாதம்**






# விஷயம் தெரியாதவர்கள்!

காலஞ்சென்ற ஹோமி மோடி ஒரு முறை சொன்னார்: ''நூல் ஆலை ஒன்றில் என்னைப் பாகஸ்தராகச் சேர்த்துக் கொண்டிருக்கிறார்கள். எனக்கு இந்தத் துறை பற்றி எதுவுமே தெரியாது. ஆனாலும் நூல் ஆலை மிகவும் வெற்றிகரமாக நடக்கிறது!''

இதே போல் அயல்நாடுகளில் இந்தியத் தூதுவராகப் பல வருடங்கள் பணியாற்றிய கே. பி. எஸ். மேனன் அகில — இந்திய புள்ளி விவரக் கழகத்தில் பொறுப்பான பதவியில் இருக்கிறார். ''எனக்குப் புள்ளி விவரங்கள் பற்றி எதுவுமே தெரியாது. இருந்தாலும் என்னை இதற்குப் பொறுப்பேற்கும்படி செய்திருக்கிறார்கள்!'' என்று அவர் சொன்னார்.



கே. பி. எஸ். மேனன் உண்மையிலேயே இதைக் குறித்து வருத்தப்பட்டாரா அல்லது சந்தோஷப்பட்டாரா என்பது தெரியவில்லை. என்னைக் கேட்டால் 'விஷயம் தெரியவில்லையே' என்று அவர் வருத்தப்பட வேண்டிய அவசியமே இல்லை என்பேன். ஏனென்றால், தகுதி இருப்பவர்தான் — விஷயம் தெரிந்தவர்தான் — பொறுப்பேற்க வேண்டுமென்றால் அப்புறம் நமது மந்திரிமார்களில் பலருக்கு வேலையில்லாது போய் விடும்! அது மட்டுமல்ல; விஷயம் தெரிந்தவர்கள் உயர் பதவியில் இருந்தால் அப்புறம் உதவிக் காரியதரிசிகள், கூட்டுக் காரியதரிசிகள், துணைக் காரியதரிசிகள் என்று நூற்றுக்கணக்கில் இருக்கிறார்களே, அவர்களுடைய சேவையை யார் பயன்படுத்திக் கொள்வார்கள் ?



நமது அரசியல் முறை அற்புதமான ஒன்று. யார் வேண்டுமானாலும் தேர்தலுக்கு நிற்கலாம்; அமைச்சராகலாம்; தம்முடைய படிப்

புக்கும் அநுபவத்துக்கும் சம்பந்தமில்லாத ஓர் இலாகாவுக்குப் பொறுப்பேற்கலாம். பிறகு, பல வருடக் கணக்கில் அதே துறையில் அநுபவம் வாய்ந்த அதிகாரிகளை ஓட ஓட விரட்டலாம்; 'அவர்களுக்கு விஷயம் ஒன்றும் தெரியாது!' என்று முத்திரை குத்தலாம் !

விஷயம் தெரியாதவர்கள் பதவிக்கு வந்தால் அவர்களைப் பற்றிய பல சுவையான 'கதை'களும் உருவாகும். முன்பு ஒரு பாதுகாப்பு அமைச்சர், ''காஷ்மீரில் நமது தரைப் படைகளும் விமானப் படைகளும் தோல்வியுற்றால் கப்பல் படைகளை அனுப்புவோம்'' என்று மார் தட்டியதாக ஒரு கதை உலவி, எல்லாரையும் வெகு நாட்களுக்குச் சிரிக்க வைத்துக் கொண்டிருந்தது. இதே போல, இன்னொர் அதிகாரி கிராமப் புறத்தில் வயற்புறங்களையெல்லாம் சுற்றிப் பார்த்து விட்டு வந்து, '' ஆமாம்.... இங்கேயெல்லாம் பச்சரிசிதான் விளைகிறதா ? புழுங்கலரிசி விளைகிற நிலம் எதுவும் கிடையாதா ?....'' என்று கேட்டாராம் !

இந்த மாதிரி ஆசாமிகள் சிலரைப் பிடித்து அமெரிக்காவுக்கு ஏற்றுமதி செய்யலாம் என்று தோன்றுகிறது. ஏனென்றால், புதிய ஜனாதிபதி நிக்ஸன் பொறுப்பான பதவிகளை ஏற்கச் சரியான மனிதர்கள் அகப்படவில்லை என்பதால் பல பதவிகளை நிரப்பாமலே வைத்திருக்கிறார் என்று சில தினங்களுக்குமுன் பத்திரிகைகளில் செய்தி வந்தது. விஷயம் தெரியாதவர்களை வைத்துக் கொண்டு ஆட்சியை நடத்திக் கொண்டு போவது எப்படி என்பதற்குத் திருவாளர் நிக்ஸன் இந்தியாவுக்கு 'அப்ரண்டிஸ்'ஸாக வந்து பாடம் கற்றுக் கொள்ள வேண்டும் என்று யோசனை கூறவும் துணிகிறேன் !

அரசாங்கத்தில் மட்டும்தான் என்றில்லை; தனியார் நிறுவனங்களிலும் விஷயம் தெரியாத பலர் இருக்கிறார்கள். முதலாளியின் உறவினர்கள், வேண்டியவர்கள், அவர்களுடைய சிபாரிசுகளுடன் வருபவர்கள் — இவர்களுக்கெல்லாம் எந்த விஷயமும் தெரிந்திருக்க வேண்டியதில்லை. சில இடங்களில் வேலைக்குப் போனால் கையெழுத்து மட்டும் போடத் தெரிந்திருந்தால் போதும். வேறு சில இடங்களில் முகஸ்துதி பண்ணுதல், 'காக்காய்' பிடித்தல், 'ஆமாஞ் சாமி' போடுதல், முதலாளி வீட்டுக்குக் காய்கறி முதல் அவரது கடைக்குட்டிக்குக் கமர்க்கட் வரை வாங்கித் தருதல் போன்ற 'வேலை'கள் தெரிந்தவர்கள் மளமளவென்று முன்னுக்கு வர வழியுண்டு.

அது கிடக்கட்டும்; நம் நாட்டிலே மொத்தம் 65,000 ஆசிரியர்கள் விஞ்ஞான பாடங்கள் போதிக்கிறார்கள் என்றும், இவர்களில் 10,000 பேருக்கு விஞ்ஞானத்தைப் பற்றி எதுவுமே தெரியாது என்றும் சமீபத்தில் எடுக்கப்பட்ட ஒரு புள்ளி விவரக் கணக்குப்படி தெரிய வந்திருக்கிறது. இதில் ஆச்சரியப்படுவதற்கு என்ன இருக்கிறது என்கிறேன்....? விளக்கு, தன்னைச் சுற்றியுள்ள இருட்டைப் போக்குமே தவிர, அதன் கீழேயே விழுந்து கிடக்கிற நிழலைப் போக்க முடியாமல் திண்டாடுவதில்லையா, அதைப் போலத்தான் இதுவும்.

பெண்டாட்டிக்குக் கடிதம் எழுதியவர்கள்கூட எழுத்தாளர் சங்கத்தில் அங்கத்தினராகி விடலாம் என்பது ஒவ்வொரு முறையும் எழுத்தாளர் சங்க மகாநாடு கூடும்போது காதில் விழும் சிரஞ்சீவி ஹாஸ்யம். இப்படியே நடிக்கத் தெரியாத நடிகர்களும் பேசத் தெரியாத பேச்சாளர்களும் ஆடத் தெரியாத நாட்டிய மணிகளும் நம் நாட்டில் ஏராளம்! ஏராளம்! இதனால்தானோ என்னவோ இப்போதெல்லாம் கலைஞனாகை இருப்பதைவிட விமர்சகனாய் இருப்பதையே பலரும் விரும்புகிறார்கள். ஏனெனில், விமர்சகர்கள் எல்லோருமே விஷயம் தெரிந்தவர்கள் என்று சாதாரணமாக நாம் அபிப்பிராயம் கொண்டிருப்பது இவர்களுக்குத் தெரியும்! ஆனால் ஓர் ஆங்கில ஆசிரியரோ, ''விஷயம் தெரிந்தவன் கலைஞனாகிறான்; தெரியாதவன் விமர்சகனாகிறான்....!'' என்று சொல்கிறார்.

விஷயம் அப்படி இருக்கிறது !

— எஸ். வி. ஆர்.

பாலு ஏறிய டாக்சியைப் பின் தொடர்ந்த காரில் போலீஸ் உடை தரித்த பார்த்தன், ஷரீனாவின் வீட்டுக்கு வந்ததும் உள்ளே புகத் துடித்தார். ஆனால் விக்ரம் அவரை அவசரப் பட வேண்டாம் எனத் தடுத்தார். தலைமை அலுவலகத்துடன் ரேடியோ தொடர்பு கொண்டு தாங்கள் இருக்கும் விலாசத்தைச் சொன்னார்.

# 007 பாலு 24

கதை: குமரன் படம்: விஜயா















மர்மக் கோட்டைக்குள்ளே...

ஆகா! இந்தக் குள்ள நரி பாலு என்னை ஏமாற்றி விட்டானே! ஆனாலும் என்ன? லாரிஜாவின் வீட்டைச் சோதனை போட்டாலும் ஒழிய மர்மக் கோட்டையின் வாயிலைக் கண்டு பிடிக்க முடியாது!

அதுதான் இல்லே!...










ராஜா தரதர வென்று பாலுவை இழுத்துக் கொண்டு ஓடுகிறான். கோட்டை மாடியில்....

ஏறு உள்ளே! ம்... சீக்கிரம்! ராணி நீயும் வா!

ராஜா! எங்களை விட்டுட்டுப் போகாதீங்க! போலீஸார் தோலை உரிச்சுடுவாங்க!

நாங்களும் வர்றோம் காப்பாத்துங்க!

சீ! நாய்களா! என் திட்டங்கள், கனவுகள் எல்லாம் பாழான பிறகு, ஜாக்கியும் சந்திரனும் மற்றவர்களும் என்ன ஆனால் தான் என்ன!

பாலுவையாவது விட்டு விட்டுப் போங்க! அவனைக் கொன்று பழி தீர்த்துக் கொள்கிறோம்!



அவர் வீடு திரும்பும் சமயம்
மிகவும் களைப்புடன்
தோன்றும் தருணம்
ஒரு கப் A-1 தேநீர் மூலம்
உற்சாகப்படுவார் அவரும்
அதன் ருசி உங்களைக் கவரும்
பணத்தையும் மீதப்படுத்தும்




ப்ருக் பாண்ட் A-1 தேயிலைத்தூள்
அதிக கோப்பைகள் சிறந்த
தேநீர் தருவது






தயாரிப்பு:
வாண்டுமாமா

35

## விந்தையல்லவோ......!

பூனா நகரத்துக்கு அருகில் உள்ள 'புரந்தர்' என்ற கோட்டையைப் பற்றி உங்களுக்குத் தெரிந்திருக்கும். மராட்டிய வீரர் சத்ரபதி சிவாஜியின் வாழ்க்கையோடு தொடர்புடைய கோட்டையாயிற்றே அது. ஆனால் அது கட்டப்பட்ட விந்தை வரலாற்றைப் பற்றி அறிந்திருக்க மாட்டீர்கள்.

அந்தக் கோட்டை நுழை வாயில் கட்டித் தங்கத்தை அஸ்திவாரமாகக் கொண்டது. பேடாரிய மன்னரால் 1290ல் கட்டப்பட்டது இந்தக் கோட்டை. அங்கு கோட்டை கட்ட வேண்டும் என்ற எண்ணம் தோன்றியபோது வல்லுநர்கள் அது அதற்கு ஏற்ற இடமல்ல என்றார்கள். காரணம் அது சதுப்பு நிலம். அங்கு எழுப்பப்படும் எந்தக் கட்டிடமும் சரிந்துவிடும் என்றார்கள். ஆனால் மன்னருக்கோ அங்கு கோட்டை அமைக்க வேண்டும் என்ற ஆசை தீவிரமாக இருந்தது. அதே நினைவாக இருந்தவருக்கு ஒரு நாள் கனவில் 'தங்கத்தை நிரப்பி அஸ்திவாரமிட்டுக் கோட்டையை எழுப்பு' என்று ஒரு குரல் சொல்லிற்று. அதன்படி இரண்டு கடைகால் தோண்டப்பட்டன. 12 அடி ஆழம் கொண்ட 35 அடி சதுரம். அரசாங்கப் பொக்கிஷம் முழுவதும் காலியாக்கப்பட்டது. தங்கச் செங்கற்கள் உருவாக்கப்பட்டன. மொத்தம் 50,000 தங்கக் கற்கள். இதன் நிறை 37000 பவுண்டு. இந்தத் தங்கக் கற்களைக் கொண்டு அஸ்திவாரமிடப்பட்டது. அதன்மீதுதான் கோட்டை வாசல் அமைக்கப்பட்டது. இன்றும் அந்தக் கோட்டைக் கதவில் இந்த விவரம் பற்றிய மகாராஜாவின் அறிக்கை தாமிரத் தகட்டில் பொறிக்கப்பட்டுப் பதிக்கப்பட்டிருப்பதைக் காணலாம். சில வருஷங்களுக்கு முன்னால் பெருமளவில் புதைந்து கிடக்கும் இந்தத் தங்கத்தை வெளிக்கொண்டு வர அரசாங்கத்திடம் சிலர் அனுமதி கேட்டார்கள். அனுமதி வழங்கப்பட்டு உடனே வாபஸ் பெறப்பட்டது. காரணம் கோட்டைக்கு அருகே மகாதேவர் ஆலயம் உள்ளது. அதன் பக்தர்கள் எழுப்பிய ஆட்சேபத்துக்கு அரசாங்கம் கட்டுப்பட வேண்டியதாயிற்று.

தங்கத்தை அஸ்திவாரமாகக் கொண்டு எழுப்பப்பட்டுள்ள புரந்தர் கோட்டை ஒரு விந்தையல்லவா?



## இது என்ன?

பசுவின் தலை, குதிரையின் வால், பைசன் என்ற காட்டெருமையின் எலும்புக் கூடு, ஆட்டு ரோமம், எருதின் கொம்புகள், பன்றியின் குரல் இத்தனையும் கொண்டது 'யாக்' என்ற காட்டெருமை. இது திபெத்தில் வாழுகிறது.

## தப்பு... தப்பு... தப்பு...

'அமெரிக்காவைக் கண்டு பிடித்தது யார்? என்ற கேள்விக்கு அரை நொடி படிக்கும் குழந்தைகூட, 'கொலம்பஸ்' என்றுதான் கூறும். ஆனால் உண்மை வேறு. கிறிஸ்தபர் கொலம்பஸ் அமெரிக்கக் கண்டத்தின் பிரதான பகுதியில் கால் வைத்ததாகச் சாட்சியம் இல்லை. 1492 அக்டோபர் 12ல் பஹாமாவில் உள்ள வாட்லிங் தீவுகளான சான்சால்வடாரைக் கண்டு பிடித்தார் இவர். இதே ஆண்டு கியூபாவிலும் இறங்கினார். அமெரிக்காவை முதன் முதலில் கண்ட ஐரோப்பியர் கொலம்பஸ் அல்ல என்பதற்கான சான்றுகள் உள்ளன. லீப் எரிக்ஸன் என்ற நார்வேக்காரர் முப்பத்தைந்து பேர்களுடன் கிரீன்லாந்திலிருந்து கிளம்பித் 'திராட்சை நகரம்' என்றதொரு புதிய நாட்டைக் கண்டார். இவரால் 'வைன் லாண்ட்' என்று வர்ணிக்கப்பட்டது அமெரிக்கக் கண்டமாகத்தான் இருக்க வேண்டும். அமெரிக்க நாட்டின் பல பகுதிகளில் ரூனிக் கல்வெட்டுகள் கிடைத்திருக்கின்றன. ஆனால் ஆராய்ச்சியாளர்கள் அமெரிக்கக் கண்டத்தில் நார்வேக்காரர்கள் தான் முதலில் இறங்கினார்கள் என்பதை முடிவாக ஒப்புக் கொள்ளவில்லை. 1497ல் ஜான் கபாட் என்பவர் தென் அமெரிக்காவின் பிரதான பகுதிகளையும் நியூ பவுண்ட்லாண்ட், லாபரடார் ஆகியவைகளையும் கண்டுபிடித்தார். ❁

# வஞ்சம் தீர்த்த வாலாட்டி

நல்ல குளிர். சூரியன் கிளம்பிச் சூடேற்றிக் கொண்டிருந்தான். பனி கரைந்து கதகதப் பாகிக் கொண்டிருந்தது. வாலாட்டிக் குருவி யொன்று தன் குஞ்சுகளோடு ஒரு மரத்தில் உட்கார்ந்து மஞ்சள் வெயிலில் குளிர் காய்ந்து கொண்டிருந்தது. அப்போது அந்தப் பக்கம் ஒரு நரி வந்தது. குருவியையும் குஞ்சு களையும் கண்ட நரிக்கு நாக்கில் நீர் சுரந்தது. ''இந்த மரத்தை ஒரு உதை கொடுத்து வீழ்த்தி உன்னையும் உன் குடும்பத்தையும் காலை ஆகாரமாகக் கொள்ளப் போகிறேன், பார்'' என்றது நரி.

வாலாட்டிக் குருவி பயந்து விட்டது. ''நரியே, நரியே! எங்களைக் கொல்லாதே. உனக்கு நான் இறைச்சியும் ரொட்டியும் தரு கிறேன்'' என்றது. நரியும் சம்மதிக்க, 'என் னைத் தொடர்ந்து வா' என்று பறந்து சென் றது வாலாட்டி. கிராமத்துப் பாதையில் ஒரு தாயும் மகளும் நடந்து போய்க் கொண் டிருந்தார்கள். தாயாரின் கையில் ஒரு கூடை இருந்தது. அதில் இறைச்சியும் ரொட்டியும் இருந்தன. வாலாட்டி வீதியின் நடுவில் போய் உட்கார்ந்தது — தன் ஒரு இறகைத் தொங்கவிட்டபடி. நரி புதருக்குப் பின்னால் மறைந்து ஒளிந்து கொண்டது.

தத்தித் தத்தி நகரும் வாலாட்டிக் குருவி யைக் கண்ட சின்னப் பெண் ''ஐயோ பாவம், யாரோ அதன் இறகைப் பிய்த்திருக்கிறார்கள் அம்மா; நாம் அதைக் காப்பாற்றுவோம்'' என்றாள் தாயாரிடம். தாயாரும் கூடை யைச் சாலையோரமாக வைத்துவிட்டு வாலாட் டியைப் பிடிக்கப் போனாள். பெண்ணும் பின் தொடர்ந்தாள். வாலாட்டி அவர்களை மெள்ள மெள்ள ஏய்த்துக் காட்டுக்குள் அழைத்துப் போய்ப் பிறகு பறந்து ஓடி விட் டது. அதற்குள் நரியும் கூடையைக் காலி செய்து ஏப்பமிட்டபடி போயிற்று.



இன்னொரு நாளும் நரி அதே போல வாலாட்டியை வந்து பயமுறுத்தியது. வாலாட்டியும் ''உனக்கு நல்ல பாலாகத் தரு கிறேன். எங்களைக் கொல்லாதே'' என்று வேண்டிக் கொண்டு அதை அழைத்துக் கொண்டு போயிற்று. ஒரு பால்காரன் தன் வாடிக்கைக்காரர்களுக்குப் பால் அளந்து கொடுத்துக் கொண்டிருந்தான். வாலாட்டி அவன் தோள் மீது போய் உட்கார்ந்து கத்திற்று. எரிச்சலடைந்த பால்காரன் ஆத் திரத்துடன் கையை வீசினான். தவலைப் பால் எல்லாம் சரிந்து ஆறாக ஓடலாயிற்று. வாலாட் டியைத் துரத்திக் கொண்டு பால்காரன் ஓட நரி பாலைக் குடித்து மகிழ்ந்தது.

ருசி கண்ட நரி மூன்றாம் முறையும் வாலாட்டியிடம் வந்தது. இந்தத் தடவை அது தன்னைச் சிரிக்கும்படி செய்ய வேண்டும் என்றது. வாலாட்டியும் நரியைப் பக்கத்துக் கிராமத்துக்குக் கூட்டிப் போயிற்று. அங்கு ஒரு வயதான கிழவி தன் மாட்டிடம் பால் கறந்து கொண்டிருந்தாள். அருகே அவள் கணவன் நெல் அளந்து கொண்டிருந்தான். வாலாட்டி மூதாட்டியின் தலை மீது போய் உட்கார்ந்து வாலை ஆட்டியது. அவளால் பால் கறக்க முடியவில்லை. குருவியை ஓட் டும்படி கணவனிடம் சொன்னாள். அவன் அதைக் குறி பார்த்துக் கல்லை வீச, அது அவன் மனைவியைத் தாக்க, அவள் முக்காலியி லிருந்து கீழே விழ, கறந்த பால் கொட்ட, கணவனை அவள் திட்ட, பறந்துபோன குரு வியைப் பார்த்துக் கிழவன் பேந்தப் பேந்த விழிக்க, மறைந்திருந்த நரி விழுந்து விழுந்து சிரித்து மகிழ்ந்தது.

வசங் கண்ட நரி வாலாட்டியை அடிக்கடி பயமுறுத்திக் காரியம் சாதிக்கப் பார்த்தது. இந்தத் தடவை அது கேட்டது — ''நான் பயந்து நடுங்க வேண்டும். அப்படிச் செய்ய உன்னால் ஆகுமா? இல்லாவிட்டால் உன்...''

''வேண்டாம், வேண்டாம். என் பின்னோடு வா. கண்களை மூடிக்கொள்'' என்றது வாலாட்டி. நரியும் கண்களை மூடிக் கொண்டு வாலாட்டியைப் பின்தொடர்ந்தது. குருவி இந்தத் தடவை அதற்குச் சரியான பாடம் கற்பிக்கத் திட்டமிட்டது. வேட்டைக் காரர்கள் இருக்குமிடமாக அதை அழைத்துப் போயிற்று.

''எங்கே, இப்போது கண்களைத் திறந்து பார். நீ பயந்து நடுங்குவாய்'' என்றது வாலாட்டி.. நரி கண்களைத் திறந்தபோது வேட்டை நாய்கள் தன்னை நோக்கி ஓடி வருவதைக் கண்டது. அது பயந்து நடுங்கி இருக்குமா இருக்காதா, நீங்களே சொல் லுங்கள்? அடுத்த முறை வாலாட்டியைப் பயமுறுத்த நரி வரவேயில்லை. ஏன் சொல் லுங்கள், பார்க்கலாம்?

## அத்தியாயம் இருபத்துநான்கு

# விழுதுகள் விலகின!

அந்தப் பெண் வந்தனா ஒரு பெரிய ஆடிட்டரின் மகள் என்று முத்து சிவன் சொன்னதற்கு மாறாக, அவள் நாடக நடிகை என்று பிறர் வாயிலாகக் கேள்விப்பட்டு அதிர்ச்சியும் குழப்பமும் அடைந்த அன்னபூரணியம்மாள், பின்னர் அவ்விரு தகவல்களுமே சரியானவை என்பதைத் தெரிந்து கொண்டு மன வேதனையில் ஆழ்ந்தாள்.

அந்தஸ்து, கௌரவம், பொருளாதார வசதிகள் ஆகிய எல்லாவற்றிலுமே நிறைவுள்ளவராயிருக்கும் கனகசபையின் அருமைப் புத்திரி கருணாவை மணப்பதன் மூலம் தன் பிள்ளை இன்னும் உயர்ந்த மனிதனாவான் என்பதோடு, குடும்பத்திலும் வளம் பெருகித் தனது மற்ற பிள்ளைகளின் வாழ்வு மேலும் தழைக்கும்; அதனால் அவளை உற்றார் உறவினர் மட்டுமின்றி ஊராரும்கூட ஓர் இலட்சியக் குடும்பத் தலைவனாக — இப்போதைக் காட்டிலும் இன்னும் பல மடங்கு அதிக அளவில் — மதித்துப் போற்றிக் கௌரவிப்பார்கள்; அவை யெல்லாமாகச் சேர்ந்து தன் கணவர் காலத்திய குடும்பப் பெருமைகளையும் வளத்தையும் மீட்டுக் கொண்டு வந்துவிட, அவற்றைக் கண் குளிரப் பார்த்து மனம் பூரித்த நிலையிலே நிம்மதியாகக் கண்ணை மூடி விடலாம் என்றெல்லாம் இனிக்க இனிக்கக் கனவு கண்டு, மணக்க மணக்கக் கற்பனைப் பூக்களைத் தொடுத்தபடி இதுகாறும் எப்படியோ காலம் தள்ளி வந்த அவளுக்கு இவ்விஷயத்தைக் கேள்விப்பட்டதும் சித்தக் கலக்கமே ஆளுற்போல் ஆகி விட்டது.

உற்றாரும் உறவினரும் மற்றையோரும் தன் மகனின் இந்தப் பித்துக்குளித்தனமான காரியம் பற்றித் தன்னிடம் இனி கேட்கப் போகும் விஷமக் கேள்விகள், பண்ணவிருக்கும் கேலிக் கிண்டல்கள், செய்யவிருக்கும் அவமதிப்புகள், காட்டவிருக்கும் போலி அநுதாபங்கள் ஆகியவற்றையெல்லாம் அவள் இப்போதே நினைத்துப் பார்த்து உள்ளம் கூசி உடல் குன்றினாலும் இவற்றைவிடக் கனகசபையோ, அவருடைய மனைவி சொர்ணத்தம்மாளோ, அல்லது அந்தப் பெண் கருணாவோ தன்னிடம் வந்து இது சம்பந்தமாக ஏதேனும் கேட்டு விட்டால் என்ன பதில் சொல்வது — அச்சங்கடமான நிலைமையை எப்படிச் சமாளிப்பது — என்று நினைக்கும் போதுதான் அவளுக்கு ஒருவிதப் பயமே ஏற்பட்டுப் போயிற்று. அம்மாதிரி ஒரு நிகழ்ச்சியைக் கற்பனை பண்ணிப் பார்க்கும் போதே அவமானத்தால் இரத்தம் கண்டி உறைவது போன்ற வேதனையை அநுபவிக்கலானாள்.




ஐந்தாறு தினங்கள் வரை இதே மிரட்சியுடனும், குழப்பத்துடனும், வேதனையுடனும் நைந்து நலிந்து கிடந்த அவள் அப்புறம் வழக்கம்போல் தன்னை ஒருவாறு சமாளித்துக் கொண்டாள். தனது வாழ்நாளின் பெரும் பகுதியில் எத்தனை எத்தனையோ துன்பங்களையும், துயரங்களையும், ஏமாற்றங்களையும், இழப்புக்களையும், ஆசாபங்கங்களையும் விழுங்கி விழுங்கி நெஞ்சம் மரத்துப் போயிருந்த அவளால் இந்தப் பேரிடி போன்ற ஏமாற்றத்தையும் தாங்கிக் கொள்ள முடிந்தது.

'அந்தப் பெண் நடிகையாகத்தான் இருக்கட்டுமே ! நடிகை என்று ஆகி விட்டால் அவளை யாரும் கல்யாணம் பண்ணிக் கொள்ளக் கூடாதா என்ன? இந்தக் காலத்தில் பெண்கள் படித்து விட்டு உத்தியோகம் பார்க்கப் போக வில்லையா ? அதே போல் அவள் நடிப்பதற்குப் பயிற்சி பெற்று நடிப்பைத் தொழிலாக்கிக் கொண்டிருக்கிறாள் ! ஆபீஸ் படி ஏறுவதற்குப் பதிலாக நாடக மேடையில் ஏறுகிறாள். அவ்வளவுதானே ? கருணா பள்ளிக் கூடம் போய் முப்பது நாற்பது பிள்ளைகளுக்கு ஆறு மணி நேரம் பாடம் கற்பித்து விட்டு வருவது மாதிரி இந்த வந்தனாவும் நாடக மேடைக்குப் போய் ஐந்நூறு ஆயிரம் பேருக்கு நடிப்புக் கலை என்ற பெயரில் மூன்று மணி நேரம் போதனை பண்ணுகிறாள். இரண்டும் கிட்டத்தட்ட ஒரே தொழில்தான். இதிலென்ன கௌரவம், அகௌரவம் பார்க்க இருக்கிறது ? என் மகன் அந்தப் பெண்ணை விடுத்து இந்தப் பெண்ணை மணக்க முடிவு செய்திருக்கிறான் என்றால், அவளிடம் காணாத — அல்லது இல்லாத — ஏதோ ஒன்றை இவளிடம் கண்டிருக்கலாம் அல்லவா ? அவ்வாறு இல்லையானால் அவன் எதற்காகத் திடீரென்று இம்முடிவுக்கு வரப் போகிறான் ?'

இப்படிச் சில நியாயங்களைத் தேடிப் பிடித்துத் தன்னைத் தானே தேற்றிக் கொண்ட அன்னபூரணியம்மாளுக்கு இந்த நியாய வாதங்களைப் பிறரிடம் வாய் விட்டுச் சொல்ல மட்டும் ஏனோ துணிவு வரவில்லை. அதனால் யாராவது தன் பிள்ளையின் மணப் பெண் தேர்வு பற்றி ஏதாவது கேட்கவோ சொல்லவோ வந்தால், ''என்னமோ அவளை அவனுக்குப் பிடிச்சிருக்குது ! யார் யாருக்கு எதையெதை எங்கெங்கே கொடுத்து வைச்சிருக்குதோ அதைத் தானே அங்கிருந்து எடுத்துக்க முடியும் ? எழுதறவன் எழுதி வைச்சபடி தான் எதுவும் நடக்கும். இது நல்ல எழுத்து. குறைப்பட்டுக் கொள்கிறாப் போல ஒண்ணுமில்லே '' என்று பதிலிறுத்துப் பேச்சை அதோடு கத்தரித்து விடுவாள். ஆனாலும் அவள் இப்போதெல்லாம் வெளியில் அதிகம் போவதில்லை. கோவிலுக்குப் போவதானால் விளக்கு வைத்தபின் புறப்பட்டுப் போய்ச் சீக்கிரமே திரும்பி வந்து விடுவாள். தப்பித் தவறி வழியில் யாராவது தெரிந்தவர்களையோ, குடும்பப் பரிச்சயமானவர்களையோ, தூரத்து உறவினர்களையோ பார்க்க நேர்ந்து விட்டால் ஏதோ குற்றம் செய்தவள்போல் பயப் பிராந்தியுடன் இரண்டொரு வார்த்தைகள் பேசுவதோடு நகர்ந்து விடுவாள்; சில சமயம் பார்க்காத மாதிரி தலை குனிந்து கொண்டும் போய் விடுவாள்.

முத்துசிவனுக்கு வந்தனாவின் பெற்றோர்களுடைய சம்மதம் கிடைத்து விட்டது. அதை முதலில் அவள்தான் அவனிடம் வந்து தெரிவித்தாள். பிறகு அவனே அவர்களைப் பார்த்துப் பேசினான்.

வந்தனா முன்பே சொன்னது போல் அவளின் அப்பா இந்தத் திருமணத்துக்குத் தம் பூரண சம்மதத்தைத் தெரிவித்ததோடு அதற்கான காரியங்களில் அவர் உற்சாகத்துடன் ஈடுபடவும் இறங்கினார். ஆனால் கோகிலாம்பாள் அவ்வளவு பிடிமானமாக எதையும் சொல்லவில்லை. தனக்குச் சம்பந்தமில்லாத ஒரு காரியத்தைக் கேள்விப்பட்டு, 'நடக்கிறபடி நடக்கட்டும்' என்கிற தோரணையில் இலேசாகத் தலையாட்டி வைத்தாள். அவளின் நிலை இவ்விஷயத்தில் இப்படித்தான் இருக்கும் என்று ஏற்கனவே எதிர்பார்த்திருந்ததால் அது குறித்து அவன் அவ்வளவாகக் கவலைப்பட்டுக் கொள்ளவில்லை; இந்த அளவுக்காவது அவளை அவளின் கணவர் பணிய வைத்து விட்டாரே என்பதை நினைத்து ஆச்சரியமே அடைந்தான். அந்த அப்பாவி மனிதர் தம் மனைவியுடன் கண்ட முதல் வெற்றி இதுவாகத்தான் இருக்கும் என்று எண்ணிச் சிரித்தும் கொண்ட அவன் கல்யாணத்துக்கான முன்னேற்பாடுகள் செய்வதில் வெகு மும்முரமாக முனைந்தான்.

இன்னமும் அவனுக்குச் சில கடன்கள் அடைபடாமல் இருந்தன. எல்லாம் மைதிலியின் கல்யாணத்துக்கு வாங்கினவை. முன் போல் அவன் — அதாவது, அவனுடைய இலட்சிய சபதம் நிறைவு பெறாததற்கு முன் இருந்த மாதிரி — இருந்திருந்தால் இதுகாறும் அந்தக் கடன்களெல்லாம் அடைந்து கையிருப்பும் கணிசமாகச் சேர்ந்திருக்

கும். ஆனால் அவனைத்தான் அவனுடைய இலட்சிய வெற்றி அடியோடு மாற்றி விட்டதே!...

பணத்துக்காக அவன் கவலைப்படவில்லை. வீட்டை அடமானம் வைத்துத் தேவையான பணம் வாங்கிக் கொள்ளலாம் எனத் திட்டமிட்டுக் கொண்டான். அதற்கு அவனுடைய தம்பி, தங்கைகள் எவ்வித ஆட்சேபனை

கல்யாணத்துக்கு நாள், நட்சத்திரம், கிழமை எல்லாம் அவனே பார்த்து முடிவு பண்ணி — இடையில் இரண்டு மாத காலத்தை வைத்துக் கொண்டு — அந்தத் தகவலைத் தன் பெரிய தம்பி நில்லைநாதனுக்கும், தங்கைகள் மைதிலி, ஜானகி ஆகியோருக்கும், அவர்களின் குடும்பத் தலைவர்களுக்கும், மற்றுமுள்ள முக்கியமான



யும் செய்ய மாட்டார்கள் என்பது அவனுக்குத் தெரியும். ஆனாலும் முன் தேவைக்காக ஓரிடத்தில் அதிக வட்டிக்கு ஐயாயிரம் ரூபாய் கடன் வாங்கிக் கொண்டான்.

உறவினர்களுக்கும் தனித்தனியாகக் கடிதம் எழுதித் தெரிவித்து, 'எல்லாரும் ஓரிரு வாரங்களுக்கு முன்னதாகவே வந்திருந்து காரியத்தை நடத்தி உதவ வேண்டும்' என்று கேட்டுக் கொண்டான்.

ஆனால் கடிதங்கள் போய்ச் சேர்ந்து ஒரு மாதமாகியும், அவ்விஷயமாக எவரிடமிருந்தும் யாதொரு விதமான

பதில் கடிதமும் வரவில்லை. எல்லாரும் ஒருவர்க்கொருவர் சொல்லி வைத்துக் கொண்ட மாதிரி 'கப் சிப்' என்று இருந்தனர்.

இப்படி ஓர் இறுக்கப் புழுக்கமான நிலைமை உருவாகலாம் என்று அன்ன பூரணியம்மாள் மட்டும் முன்பே எதிர் பார்த்திருந்தாள்.

ஆமாம்; முத்துசிவனின் சமீப காலத்திய நெறிமுறை. வழக்கலான நடத்தைகள் உள்ளூரிலே இருந்தவர் களுக்கு மட்டுமின்றி வெளியூர்களில் இருந்த மைதிலி, ஜானகி ஆகியோரின் குடும்பத்தினருக்கும் எப்படியோ எட்டி விட்டிருந்தன.

ஜானகியின் மாமனார் சென்னைக்கு வியாபார விஷயமாய் அடிக்கடி வரு கிறவர். அப்படி வரும்போதெல்லாம் முத்துசிவனின் வீட்டில்தான் தங்குவார். ஆனால் கடந்த ஆறு மாதங்களாக அவர் ஹோட்டலில் தங்க ஆரம்பித்தார். திரும்பிப் போகும்' போது மட்டும் சும்மா ஓர் ஒப்புக்கு வந்து தலை காட்டி விட்டுப் போவார். மைதிலியின் மூத் தார் ஒருவரும் இங்கு மாதம் இருமுறை தவறாமல் வருகிறவர்தான். பழரச உற்பத்திக் கம்பெனி ஒன்றின் வர்த்த சப் பிரதிநிதி அவர். முத்துசிவனிடம் மிகுந்த அன்பும் மரியாதையும் கொண்ட வர்.,ஒவ்வொரு தடவை வரும் போதும் அவர் வீட்டிலோ ஆபீஸிலோ பார்க்கா மல் போக மாட்டார். அப்படிப்பட்ட வரே சமீப காலமாக அதிகம் வருவ தில்லை. வந்தாலும் ஓர் ஐந்து நிமிஷங் களுக்கு மேல் தங்குவதில்லை. காப்பி பலகாரம் கொடுத்தாலும் சாப்பிடுவ தில்லை. இப்படி இன்னும் சிலரும் இந்த விதமாகவே நடந்து கொண்டனர்.

முத்துசிவனுக்கு ஒரே ஆத்திரம். தான் எழுதிய கடிதங்களுக்கு யாரும் பதில் போடாததை எண்ணி எண்ணி உள்ளூறப் பொங்கிக் குமுறினான். சில சமயம் தனக்குத் தானே பேசிக் கொள்கிறவன் போல் தன் தாயாரின் காதுபட, ''இந்த உலகமே இப்படித் தான்! நன்றிகெட்ட உலகம் இது! காரியம் ஆகிற வரையில் காலைப் பிடிக் கும்; அப்புறம் எட்டிச் சிண்டைப் பிடித்து உலுக்கும்! உடன் பிறப்பு, ஒட்டுறவு, ரத்த பாசம், அன்பு, அது இது என்கிறதெல்லாம் வெறும் ஏமாற் றுப் பேச்சு! ஏமாந்தவன் தலையில் மிள காய் அரைக்கிறதற்குப் போடுகிற பகல் வேஷம்!'' என்று இரைந்து பேசுவான். ''என் கல்யாணத்துக்கு வந்தால் தங்கள் கையிலிருந்து நாலு காசு கரைஞ்சுடுமே என்பதற்காகக் கப்சிப்புன்னு இருக் கிறாங்க போலிருக்குது! பெருந்தன்மை

## புட்டியில் கிடைக்கும் புளிச்சாறு!

எதிர்காலத்தில் இல்லத்தரசிகள் புளியைக் கரைத்துக்கொண்டு உட்கார்ந்திருக்க வேண்டாம். பாட்டிலிலிருந்து ஒரு ஸ்பூனோ இரண்டு ஸ்பூனோ தேவைக் கேற்றபடி சாம்பாரிலும் ரசத்திலும் போட்டுக் கலக்கிக் கரைத்து விடலாம்!

பங்களூரிலுள்ள ''புட் கான்ஸென் டிரேட்ஸ்'' என்ற ஸ்தாபனம் புளிச் சாற்றினைப் புட்டியில் அடைத்து விற்க ஏற்பாடு செய்து வருகிறது. புளி சமையலறையில் இனி இடத்தை அடைத்துக் கொள்ளாது. புளியங் கொட்டை, நார், சக்கை இவைபற்றிய தொல்லை இல்லை. இயந்திரங்கள் மூலம் புளிச்சாற்றை ஒட்டப் பிழிந்து எடுத்து விடுவதால் இப்புளிச்சாறு ஓரளவு மலிவாகவும் இருக்கும்.




முதலில் இந்த ஆராய்ச்சியில் ஈடுபட்டு வெற்றி கண்ட ஸ்தாபனம் மைசூரிலுள்ள மத்திய உணவு ஆராய்ச்சிக் கழகம்.

புளியைச் சேமித்து வைக்கும்போது அதில் பூச்சி புழுக்கள் வந்து சேர்ந்துவிடலாம். அறுவடைக் காலத்தில் விலை குறைவதும் மற்ற சமயங்களில் விலை ஏறுவதும் சகஜம். பாட்டில் புளியில் இதையெல்லாம் தவிர்க்க முடியும் என்பதோடு ஏற்றுமதி செய்து அந்நியச் செலாவணியும் சம்பாதிக்கலாம்.

---

இல்லாத அல்பங்கள்!' எவன் வந்தா லென்ன, எவன் வராமல் போனால் என்ன? காரியம் நடக்காமலா போய் விடும்? நானே நடத்திக் கொள்ள எனக் குத் தெரியாதா? இதோடு எல்லாரை யும் தலை முழுகி விட்டுட்டு என் வழியே போய்க் காட்டுகிறேன்!'' என்றெல்லாம் வெறுப்புடன் கறுவிக் கொண்டான்.

அன்னபூரணியம்மாள் அவன் எதிரில் வரவே அஞ்சினாள். வாய் திறந்து ஒரு வார்த்தையும் பேசுவதில்லை. சமைய லறையை விட்டால் பூஜை அறை, பூஜை அறையை விட்டால் சமைய லறை என்று அவ்விரு அறைகளுக்குள் ளேயே ஒடுங்கிக் கிடந்தாள். பிள்ளை யாண்டான் தன் தம்பி தங்கைகளைக் காய்ந்து பேசும்போதெல்லாம் தன்னை யும் சேர்த்து வைவதாகவே அவ ளுக்குத் தோன்றும். நெஞ்சம் பதறித் துடிக்கும். ஆனாலும் அதற்காக அவன் மீது அவள் கொஞ்சமும் கோபமோ தாபமோ கொள்ள மாட்டாள். அவ னுக்கு ஏற்பட்டிருக்கும் ஆத்திரம், வெறுப்பு, சலிப்பு, எரிச்சல் அவ்வள வும் நியாயமாய் எழக்கூடியவையே என்று எண்ணினாள். மைதிலி, ஜானகி, தில்லைநாதன் ஆகியோர் தம் அண்ண னின் கல்யாண காரியத்தில் அக்கறை காட்டாமலும் அவன் எழுதிய கடிதங் களுக்குப் பதில் போடாமலும் அலட் சியப்படுத்தி விட்டிருப்பது தவறுதான்

என்றும், அவர்கள் அப்படி நன்றி விசுவாசம் பந்தபாசம் இல்லாமல் நடந்து கொள்வது மன்னிக்க முடியாத குற்றம்தான் என்றும் நினைத்து அவர்களைத் தன் மனத்துள் சபித்தாள். 'எல்லாரும் சேர்ந்து கொண்டு என் மகனைத் தனியாக்கிவிட்டார்களே! அவனை அவமதித்து மனம் நோக வைக்கிறார்களே!' என்று புலம்பிப் பிரலாபிக்கவும் செய்தாள்.

இத்தகைய நெஞ்சத் தவிப்போடு இன்னொரு கவலையும் அவளை வாட்டி வதைத்துக் கொண்டிருந்தது. கடந்த ஒரு வாரமாக வலம்புரிக்கு உடம்பு சரியில்லையாம். வேலைக்குப் போகாமல் வீட்டிலே படுத்துக் கிடக்கிறானாம். அவனுடைய மனைவி சுந்தரி வந்து இந்தத் தகவலைச் சொல்லவில்லை; வேறு யாரோ சொல்லி விட்டுப் போனார்கள். இப்போதெல்லாம் அவள் இங்கே அதிகம் வருவதில்லை. அவளுக்கு என்ன மனத் தாங்கலோ, சலிப்போ!

அன்றொரு நாள் கருணா இவ்வீட்டுக்கு வந்த போது அன்னபூரணியம்மாள் வெளியே போயிருந்தாள் அல்லவா? வலம்புரியைப் பார்க்கத்தான் அவள் போயிருந்தாள். அப்போதே அவனுக்கு உடம்பு சுகமில்லை. அந்தக் கவலையில் ஆழ்ந்து வீடு வந்து சேர்ந்தவள் பிறகு அவனைப் பார்க்கப் போகவில்லை. காரணம், அதற்கடுத்த நாள்தான் முத்துசிவன் தனது 'புரட்சிகரமான திருமண முடிவை'த் தெரிவித்து அவளைக் கலக்கிக் குழப்பி விட்டான்!....

திருமண நாள் நெருங்கிக் கொண்டிருந்தது. இன்னும் இரண்டொரு தினங்களில் வீட்டை அடமானம் வைத்துப் பணம் வாங்குவதற்குத் தயாரானான் முத்துசிவன். அந்தப் பணத்தில்தான் இனி நகைநட்டுகள், துணிமணிகள் முதலானவை வாங்க வேண்டும். அவற்றுக்கெல்லாம் உத்தேசச் செலவு மதிப்பீட்டுக் குறிப்பு ஒன்று தயாரிக்கும் நோக்கத்துடன் அன்று மாலை ஆபீஸிலிருந்து வந்ததும் காப்பி சாப்பிட்டு விட்டுக் காகிதமும் பென்சிலுமாகக் கூடத்து அறையில் உட்கார்ந்தான்.

வாசலில் ஒரு டாக்ஸி வந்து நின்றது. ஜன்னல் வழியாக எட்டிப் பார்த்தான். அவனுக்கு ஒரே ஆச்சரியம்!

தில்லைநாதன் அந்த டாக்ஸியிலிருந்து இறங்கினான். ஓர் ஐந்து நிமிடம் காத்திருக்கும்படி டாக்சி டிரைவரிடம் சொல்லி விட்டு வெகு அமர்த்தலாக வீட்டை நோக்கி வந்தான் அவன்.

அவனுடைய கையில் பெட்டி படுக்கை ஏதும் இல்லை. அவனைப் பார்த்தால் பம்பாயிலிருந்து நேரே ரயிலை விட்டு இறங்கி வருபவனாகவும் தெரியவில்லை. நேற்றோ, இன்று காலையோ இவ்வூருக்கு வந்து வேறு எங்கோ தங்கிச் சிரம பரிகாரம் பண்ணிக் கொண்டு சாவதானமாகப் புறப்பட்டு வந்திருக்கிறான் என்றே தோன்றியது. ஓர் அன்னியனின் வீட்டில் நுழைபவன் போல் வராந்தாவில் சிறுபொழுது தயங்கி நின்ற அவன் பிறகு சரேலெனக் கூடத்து அறைக்குள் பிரவேசித்தான்.

புறக்கடைக் குழாயடியில் வேலையாயிருந்த அன்னபூரணியம்மாள் தன் இரண்டாவது மகன் வந்திருப்பதை அங்கிருந்தபடியே பார்த்து விட்டு மகிழ்ச்சிப் பரபரப்புடன் விரைந்து வந்தவள் ஏதோ ஓர் உள்ளுணர்ச்சியின் தட்டுத் தடங்கலால் சட்டென்று கதவோரம் போய் ஒதுங்கி நின்று கொண்டாள்.

தில்லைநாதன் தன் தாயாரையோ, தமையனையோ ஏறெடுத்தும் பார்க்கவில்லை; உட்காரவும் இல்லை. பின்னால் கைகளைக் கோத்தபடி சன்னலருகில் நகர்ந்து விறைப்புடன் தலை குனிந்து நின்றான்.

இவ்வளவு நேரம் அவனையே கண் கொட்டாமல் பார்த்துக் கொண்டிருந்த முத்துசிவனின் மனத்தில் மகிழ்ச்சி, வியப்பு, கோபம், பாசம், பயம் ஆகிய பல்வேறு முரண்பட்ட உணர்ச்சிகள் கிளர்ந்தெழுந்து ஒன்றோடொன்று முட்டி மோதிக் குமுறின. அவ்வுணர்ச்சிகளையெல்லாம் ஒருவாறு அடக்கி அமுக்கிக் கொண்டு சோபாவில் ஒருக்களித்துச் சாய்ந்த அவன், ''என்னடா, சௌக்கியமா யிருக்கிறயா?'' என்று இளநகையுடன் அமைதியான குரலில் கேட்டான்.

தில்லைநாதனும் தலை நிமிராமல் அதே அமைதியான தொனியில், ''இருக்கிறேன்'' என்றான்.

''லதா எப்படி இருக்கிறாள்?''

''சௌக்கியம்.''

''மெட்றாசுக்கு எப்போ வந்தாய்?''

''இன்று காலம்பறத்தான்.''

''காலம்பறவே வந்துட்டியா?.. எங்கே தங்கி இருக்கிறே?''

''ஹோட்டலில்!''

''ஏதாவது ஆபீஸ் காரியமாக வந்தாயா?''

''அதெல்லாம் இல்லை; உங்களைப் பார்த்து விட்டுப் போகலாம்னுதான் வந்தேன்.''

''ஓகோ!'' என்று புருவங்களை நெரித்துத் தலையாட்டிக் கொண்ட முத்துசிவன் சற்று நேரம் மௌனமாயிருந்து விட்டுப் பின் சட்டென்று நிமிர்ந்து, ''என்னைப் பார்க்க வேண்டிய அவசியம் உனக்கு

# ஸ்ரீ சுப்பிரமணியசுவாமி தேவஸ்தானம், திருத்தணிகை

# அஷ்டபந்தன மகா கும்பாபிஷேகம்



## நாள் 25-6-69

கலியுக வரதனும் கண்கண்ட தெய்வம் இனிமையாம் தமிழின் இறை முருகப் பெருமானுக்கு உரிய ஆறுபடை வீடுகளில் ஐந்தாம் படை வீடாம் குன்றுதோராடலில் முதலாக வைத்து எண்ணப்படும் தலையாய திருத்தலம் இத்திருத்தணிகையே. அமலனுக்கு அகப்பொருள் உணர்த்திய ஞானச் சுடராம் கந்தப்பெருவேள் இச்சா சக்தியெனும் அன்பின் பெருமகளாம் வள்ளியை மணம் புரிந்து பக்தர்களுக்கும் அடியார்களுக்கும் அருள்பாலித்து வரும் பெரும்பதியாம் இத்திருத்தலம்.

இத்தலத்தை பண்டைய கலைச்சிறப்பை உணர்த்தவும் இறைபணியாளர் இருக்கூட்ட விருப்பினை நிறைவேற்றவும் திருப்பணிகள் பல செவ்வனே இனிது நடைபெற்று வருகின்றன. ஜீரணோத்தாரண அஷ்டபந்தன மகா கும்பாபிஷேகம் (குடமுழுக்கு நீராட்டுவிழா) வருகிற ஜூன் மாதம் 25ஆம் நாள் நிகழ இருக்கிறது.

திருமலைப்பாதை அண்மையில் முடிக்கப்பட்டு பேரறிஞர் அண்ணா அவர்களால் துவக்கி வைக்கப்பட்டது. தேர்வீதிக்கு சிமெண்ட் காங்க்ரீட் போடுதல், திருக்குளத்தைச் செப்பனிடுதல், பக்தர்களின் வசதிக்காக அறைகளும் இல்லங்களும் அமைத்தல், குடிநீர்த் திட்டம் படிதோறும் அமைந்துள்ள மண்டபங்கள், மலைக்கோயில் விமான கோபுரங்கள் பழுது பார்த்து வண்ணம் வைத்தல், குளிர் காற்று வசதி, சலவைக்கல் பதித்தல், நிலைக்கால் கதவுகளுக்குத் தகடு வேய்தல், திருப்புகழ் மணிமண்டபம், வசந்த மண்டபம் ஆகிய திருப்பணிகள் நடந்தும் நடைபெற்றும் வருகின்றன.

இதையொட்டி மலையில் மேற்குப் பக்கத்தில் திருப்படிகள் சுமார் 365 அமைக்கவும் படி ஒன்றுக்கு ரூ. 101/– வசூல் செய்து நன்கொடையாளரின் திருப்பெயரைப் பொறிக்க உத்தேசித்திருக்கும் எங்களுக்குப் பொருளுதவி செய்து இத்திருப்பணிக்கு உதவ வேண்டுகிறோம்.

மேலே கண்ட திருப்பணிகள் அனைத்தையும் சிறப்புற முடித்து ஜீரணோத்தாரண அஷ்டபந்தன மகா கும்பாபிஷேகம் வருகிற ஜூன் 25-ஆம் நாள் நடைபெற யிருக்கிறது. திருப்பணிகளுக்கும் மகா கும்பாபிஷேகத்துக்கும் பேரன்பர்கள் வேண்டிய ஆதரவும் பொருளுதவியும் தந்து மேற்கண்ட விழாவினைச் சிறப்புற நடத்திக் கொடுக்க வேண்டுகிறோம்.

திருப்பணிகளுக்காகக் கொடுக்கப்பெறும் நன்கொடைகளுக்கு வருமானவரி விலக்கு உண்டு.

**திரு ஜி. எஸ். துரைசாமி முதலியார்**
தலைவர், திருப்பணிக்குழு

**திரு வி. கே. வேலுசாமி, பி.ஏ.**
நிர்வாக அதிகாரி, செயலாளர்
திருப்பணிக்குழு

# "விருப்பம் பலனளிக்காது, ஆனால் சேமிப்பு நல்ல பலன் தரும்"

## ........உங்கள் விருப்பம் பூர்த்தியடையச் செய்யுங்கள்

**30** மாதங்களுக்கு முன்பு அவள் "சென்ட்ரல்" பாங்கில் ஒரு ரெக்கரிங் டெபாஸிட் கணக்கை ஆரம்பித்து, மாதா மாதம் ரூ. 500/- வீதம் போட்டு வந்தாள். இன்று அவளுடைய சேமிப்புத் தொகை ரூ. 16,150/- ஆக உயர்ந்ததோடு மட்டுமல்லாது, ஒரு புது கார் வாங்க வேண்டுமென்ற அவளது விருப்பத்தையும் நிறைவேற்ற உதவியது.



"சென்ட்ரல்" பாங்கிக்கு எமது மனமார்ந்த நன்றி.



**தி சென்ட்ரல் பாங்க்**
**ஆப் இந்தியா லிமிடெட்**

ரிஜிஸ்டர்டு ஆபீஸ்: மகாத்மா காந்தி ரோடு, பம்பாய்-1 ■ V. C. படேல், சேர்மன்

பாங்குச் சேவையைக் கோரும் மக்களைத் தேடி அவர்கள் இருப்பிடம் செல்லும் பாங்க்

அப்படி என்ன வந்ததாம்?'' என்று கரகரத்த குரலில் வினவினுன்.

''உங்கள் கடிதம் வந்தது!'' என்று தில்லைநாதனும் அடித்தொண்டையில் நிதானமாகப் பதிலிறுத்தான்.

''ஆமாம்; அதற்கென்ன ?''

''அதில் என்ன எழுதியிருந்தீங்க?''

''நீதான் சொல்லேன்?''

''கல்யாணம் பண்ணிக் கொள்ளப் போறதாக எழுதியிருந்தீங்க.''

''நான் கல்யாணம் பண்ணிக் கொள்ளக் கூடாதோ?'' என்று கேட்டுக் குறும்பாகச் சிரித்தான் முத்துசிவன்.

''தாராளமாக!'' என்று அலட்சியத்துடன் நகைத்தான் தில்லைநாதன்.

''அப்புறம் என்ன கேள்வி?''

''கேள்வி இருக்கிறது அதிலே!''

''கேளேன், பார்ப்போம்!''

முகத்தைக் கடுமையாக வைத்துக் கொண்டு சில விநாடிகள் மௌனமாயிருந்த தில்லைநாதன் திடுமென்று நிமிர்ந்து, ''நீங்க கல்யாணம் பண்ணிக் கொள்ளப் போறதை அறிந்து நான் ரொம்ப சந்தோஷப் பட்டேன்; ஆண்டவனுக்கு நன்றியும் செலுத்தினேன்...'' என்று சொல்லிக் கொண்டிருக்கும்போதே முத்துசிவன் குறுக்கிட்டு, ''அப்புறம் என் தலையில் அட்சதை தெளித்து ஆசிர்வதிக்க இங்கே புறப்பட்டு வந்திருக்கிறுய், அப்படித் தானே?'' என்றுன் கோபம் செறிந்த கேலிச் சிரிப்புடன்.

இயற்கையிலேயே முரடனுன தில்லைநாதனின் கண்கள் இப்போது சிவந்து பழுத்தன. ''இல்லை அண்ணு! அதற்காக நான் வரலே. ஊரார் காறித் துப்பறதுக்கு முன் நானே அந்தக் காரியத்தைச் செய்துவிடத்தான் இங்கே வந்தேன்'' என்றுன் ஆத்திரம் வெடித்த குரலில்.

இதைக் கேட்டு அடிபட்ட வேங்கை போல் துள்ளி யெழுந்த முத்துசிவன், ''என்னடா சொன்னே?'' என்று உருமியவாறு ஓரடி முன்னுல் சென்றுன்.

''ஆமாண்ணு! உங்களுக்குக் கல்யாணம் பண்ணிக் கொள்ள வேறு பெண்ணே கிடைக்கவில்லையா?''

''ஏன், இந்தப் பெண்ணுக்கு என்ன குறைச்சலாம்?''

''நீங்களே இதற்குப் பதில் சொல்லுங்க!''

''நீதான் சொல்லேன்?''

''போயும் போயும் அந்த ஊசிப் போன பண்டம்தானு உங்களுக்குக் கிடைச்சுது?''

''எனக்கு அது புத்தம் புதிசான தேவாமிர்தம்! நீ யாரடா அதைக் கேட்க?''

''நானு கேட்கிறேன்? ஊரார் கேட்கிறுங்க; கேட்டுவிட்டுச் சிரிக்கிறுங்க!''

சுதந்திரக் கட்சியின் ஸ்தாபகர்களில் ஒருவரும், தொழிலதிபரும், ராஜதந்திரியுமான திரு ஹோமி மோடி வாழ்க்கையின் மிக நெருக்கடியான கட்டங்களில்கூடத் தம் நகைச்சுவை புணர்ச்சியைக் கைவிட்டதில்லை. வாழ்க்கையின் வழிகாட்டியாக அவர் கருதிய பாரசீகக் கவிதை இது :



''மகனே, நீ பிறக்கும்போது 'ஓ'வென அழ, உன்னைச் சுற்றியுள்ளவர்கள் சிரித்தார்கள். எனவே இறக்கும் போது நீ சிரிக்க உன்னைச் சுற்றியுள்ளவர்கள் அழும்படி வாழ்வாயாக.''

'நான் மறுபடியும் பிறந்தால்' என்ற தலைப்பில் ஒருமுறை அவர் வானொலியில் பேசுகையில் பின்வருமாறு குறிப்பிட்டார்: ''நான் மறுபடியும் பிறந்தால் எவ்வளவோ விஷயங்களை மாற்ற விரும்புவேன். ஆனால் ஒருக்காலும் என் மனைவியை மட்டும் மாற்ற விரும்பவே மாட்டேன்.'' இதைத் தொடர்ந்து, ''இப்போது என் குடும்பத்தில் எல்லாம் சுமுகமாக நடக்க வேண்டும் என்பதற்காக இப்படி நான் கூறியாகவேண்டி யிருக்கிறது'' என்று சொல்லி முடித்தார்.

பால்ய விவாகத் தடைச் சட்டத்தைக் குறித்துப் பார்லிமென்டில் கடுமையான விவாதம் நடந்த நேரம். அதைக் கடுமையாக எதிர்த்துப் பேசிய பைஜ்நாத் பஜோரியா என்னும் உறுப்பினர் தம் பேச்சுத் திறமையால் பார்லிமென்டின் எல்லா உறுப்பினர்களையும் கவர்ந்திழுத்திருந்தார்.

நடுவில் குறுக்கிட்டார் மோடி. ''கனம் உறுப்பினர் அவர்கள் தாம் விரும்பும் 18 வயதுப் பெண்ணுக்குப் பதிலாக ஒன்பது வயதுடைய இரண்டு பெண்களைத் திருமணம் செய்துகொள்ள முன்வருவாரா?'' என்று போட்டார் ஒரு குண்டை.

- வி. ந. ஸ்ரீதரன்

---

''நீமட்டும் என்ன யோக்கியமானவன்? பெற்றவள், வளர்த்தவன், கூடப் பிறந்தவங்க, உறவுக்காரங்க, — ஊரார் எல்லாரும் சம்பிரதாயமாகத் தேடிப் பார்த்துக் கொடுக்த பெண்ணைத்தான் கல்யாணம் பண்ணிக்கிட்டயோ? ஜாதி, குலம், கோத்திரம் எதையும் பார்க்காமல், நீயே தேடிப் பிடிச்சுத் திமிர்த்தாலி கட்டிக் கொண்டவன்தானே? அதுமட்டும் ஊசிப் போகாத பண்டம்னு யாருக்குத் தெரியும்? நீ சொல்லுவே, நாங்க அதை நம்பணுமா?''

''என்ன, என் பெண்டாட்டியை எவளோ ஒரு நாடகக்காரியோடு ஒப்பிட்டா பேசறே, கபோதி!'' என்று கர்ஜித்துக் கொண்டே முஷ்டிகளை மடக்கி ஓங்கியவாறு முன்னுல் பாய்ந்தான் தில்லைநாதன்.

அளவு கடந்த சின வெறியால் கொதித்து நின்ற முத்துசிவனும் தன் சட்டைக் கைகளைச் சுருக்கி மேலே தள்ளிவிட்டுக் கொண்டு ஓரடி பின்னுல் நகர்ந்தான்.

இவ்வளவு நேரம் பக்கத்து அறையின் கதவோரம் பதுங்கி நின்று

கொண்டிருந்த அன்னபூரணியம்மாள் சரேலெனக் கூடத்து அறைக்கு ஓடி வந்து அங்கே கிடந்த ஒரு ஸ்டூலை இழுத்துப் போட்டு அதன் மேல் ஏறி, சுவரில் மாட்டியிருந்த தன் கணவரின் பெரிய போட்டோ படத்தை இரு கைகளாலும் அணைத்து முகத்தை அதில் புதைத்தபடி கதறி அழ ஆரம்பித்து விட்டாள்.

இந்தக் காட்சியைக் கண்ட முத்துசிவனும் தில்லைநாதனும் வெலவெலத்துப் போய் ஒரே சமயத்தில் நிமிர்ந்து தங்கள் தந்தையாரின் படத்தைப் பார்த்தனர்.

மறு கணம் தலையைத் தாங்கிப் பிடித்துக்கொண்டே சோபாவில் தொப்பென்று உட்கார்ந்தான் முத்துசிவன்.

தில்லைநாதனின் உடல் கிடுகிடுவென்று நடுங்கியது. கண்கள் கலங்கி நீர் சொரிந்தன. சடாரெனத் திரும்பிய அவன் விரைந்து வெளியே போய் டாக்சியில் ஏறி அமர்ந்தான். உடனே டாக்சி புறப்பட்டுச் சென்று விட்டது.

இரண்டு மூன்று தினங்களாகியும் தன் தம்பி தில்லைநாதனின் மீது ஏற்பட்ட ஆத்திரம் முத்துசிவனுக்கு அடங்கவே இல்லை. நினைக்கும்போதெல்லாம் குமுறிக் குமுறி வசை பாடிக் கொண்டிருந்தான். தில்லைநாதனோடு மற்ற தம்பி தங்கைகளையும் சேர்த்து, ''துரோகிகள்! நன்றி கெட்டவர்கள்! நயவஞ்சகர்கள்! காலமெல்லாம் ஓடி ஓடிப் பாடுபட்டு ஒவ்வொருவரையும் வளர்த்துப் படிக்க வைத்து ஆளாக்கிச் சுக வாழ்வு தேடி வைத்தேன். எல்லாம் விழலுக்கு இறைத்த நீராகி விட்டது. எவனுமே, எவளுமே என்னை இப்போது திரும்பிப் பார்க்கவில்லை. எல்லாரும் எல்லாவற்றையும் மறந்து விட்டார்கள். மறந்து விட்டதோடு என்னை அவமதிக்கவும் துணிந்துவிட்டார்கள்'' என்றெல்லாம் பொங்கிப் பொங்கி வைது தீர்த்தான்.

இத்தகைய கோபக் குமுறலால் உந்தப்பட்ட அவன் தன் கல்யாண காரியங்களைக் கவனிப்பதில் முன்னைக் காட்டிலும் அவசரம் காட்டினான். ஒரு முரட்டுத்தனமான வீம்புடனும் விறுவிறுப்புடனும் செயல் பட்டான்.

ஏழெட்டு தினங்களுக்குப் பின் ஒரு நாள், திருமண அழைப்பிதழ் அச்சடிக்கக் கொடுத்துவிட்டு இரவு எட்டு மணி வாக்கில் வீட்டுக்கு வந்தான்.

அப்போது வலம்புரி வராந்தாவில் பிரம்பு நாற்காலியிலே குத்துக்காலிட்டு உட்கார்ந்து எங்கோ வெறித்துப் பார்த்துக்கொண்டு யோசனையில் ஆழ்ந்திருந்தான். நோஞ்சானென அவன் பாதியாக மெலிந்து போய்க் காணப்பட்டான்.

தான் வருவதைக் கூடக் கவனிக்காமல் உட்கார்ந்திருந்த அவனை உறுத்துப் பார்த்த முத்துசிவன் சரேலென உள்ளே போய் ஆடைகளைக் களைந்து வேறு பனியனும் வேட்டியும் அணிந்து கொண்டு தன் அறையிலேயே சற்று உலாவினான். பிறகு ஏதோ முடிவுக்கு வந்தவனாய் வராந்தாவை நோக்கி நடந்தான்.

நோய்ப் படுக்கையிலிருந்து எழுந்து வந்திருக்கும் வலம்புரியை அவன் ஏதாவது கடுமையாகப் பேசி விரட்டி விடுவானோ என்று பயந்துவிட்ட அன்னபூரணியம்மாள், 'அப்படி ஒன்றும் செய்துவிட வேண்டாம்' என்று கெஞ்சிக் கேட்டுக் கொள்ள வாயெடுத்தாள். பின்னர், 'நான் ஏன் அதைச் சொல்ல வேண்டும்? அவனைத் தோளிலும் மார்பிலும் தூக்கி அணைத்துச் சீராட்டிச் சோறூட்டி வளர்த்தவன் இவன் தானே? அதனால் அவனை இவன் எதுவும் பேசலாம், எப்படியும் நடத்தலாம்! நடத்தட்டும்!' என்று எண்ணி மௌனமாயிருந்து விட்டாள்.

கூடத்து அறையைக் கடக்கும்போதே முத்துசிவனின் பார்வை, சன்னலோரம் விழுந்து கிடந்த அன்றைய தினப் பத்திரிகையின் மேல் சென்றது. அதை எடுத்து வேகமாகப் பக்கங்களைப் பிரித்தான். என்ன நினைத்துப் பிரித்தானோ அது சரியாகி விட்டது. ஆமாம்; வழக்கம்போல் ஒரு பக்கத்தின் மேல் மூலைப் பகுதி கத்தரிக்கப்பட்டு விட்டிருந்தது!

அன்றொரு நாள் அவன் கருணாவிடம் காட்டிய 'இடை மெலிவுக்கான பட்டி' விளம்பரம் இன்றைய இப்பத்திரிகையின் வேறு பக்கங்களில் இல்லை. எனவே அவ்விளம்பரம்தான் இந்தப் பக்கத்திலிருந்து கத்தரித்து எடுக்கப்பட்டிருக்கிறதென்பது உறுதியாயிற்று.

அத்துடன் அன்று கருணா, 'இந்த விளம்பரம் எனக்கு உபயோகப்படாது; ஆனால் உங்களுக்கும் உங்கள் தம்பி வலம்புரிக்கும் நிச்சயம் உபயோகமாகலாம்' என்று சொன்னதையும் இப்போது நினைவுபடுத்திக் கொண்டான்.

'பத்திரிகைகளில் வரும் இம்மாதிரியான ஆபாசப் படங்களை வலம்புரி கத்தரித்து எடுக்கும் பழக்கமுள்ளவன் என்பதை அவள் எப்படியோ, யார் மூலமாகவோ கேள்விப்பட்டுத்தெரிந்துகொண்டு தான் அன்று அப்படிக் குத்தலாகச் சொன்னாள் போலும்' என்று எண்ணும் போதே அவமானத்தால் அவன் நெஞ்சு எரிந்தது. ஏற்கனவே கிளர்ந்திருந்த வெறுப்புடன் இந்த எரிச்சலும் சேர்ந்து கொள்ளவே வெகு கோபமாக வராந்தாவுக்கு வந்து நின்றான் அவன். **(தொடரும்)**

# ஐடெக்ஸ்

அழகு சாதனங்கள்

ஐடெக்ஸ் கண்மை
ஐடெக்ஸ் பிந்தி
குங்கும் சாந்து
ஐடெக்ஸ் குங்கும் பேஸ்ட்








**ARAVIND LABORATORIES**

P. B. 1415., MADRAS-17



---

உயர்ந்த பானங்கள், தின்பண்டங்களுக்கு

# வின்ஸென்ட்

- நாகரீக பார்ட்டிகளுக்கேற்றது
பெப்பியோ & ஜூலா-கோலா
- உற்சாகத்துடன் சுவைக்க
மாங்கோஸிப், விடோலா,
வின்கோலா
- ஆரோக்கியமும், சந்துஷ்டியும்
அளிக்க நான்கு வகை பழரச
பானங்கள் ஆரஞ்சுவின்,
மாங்கோவின், பைனேவின்,
கிரேப்வின்
- மேலும் சுவைமிகுந்த ஜிஞ்சர்,
ஆரஞ்சு, லெமன் எல்லாம் உண்டு.




# வின்ஸென்ட்

சத்துள்ள ரொட்டி, கேக், பிஸ்கட்
வகைகள் ஒவ்வொருவரையும் மகிழ்விக்கிறது

VC: 108



கர்ப்பம் ஏற்பட்டு விடுமே என்று
அச்சமின்றி இல்லற வாழ்க்கையை
இன்பமாக அனுபவியுங்கள்.
குடும்பக் கட்டுப்பாட்டிற்கு மிகவும்
பத்திரமான முறை ஆண்களுக்கு
இப்பொழுது உண்டு.
அதுதான் "நிரோத்."

குடும்பக் கட்டுப்பாடடிற்கு

# "நிரோத்"



மூன்றின் விலை 15 பைசா
ஒன்றின் விலை 5 பைசா
(அரசாங்க ஆஸ்பத்திரிகளில் கிடைக்கிறது)
தற்போது சில மாவட்டங்களில் மட்டும் கிடைக்கின்றன

கர்ப்பத்தை தடுக்க உங்க
ளால் முடியும். "நிரோத்"
உபயோகியுங்கள்

# இலக்கியத் துறையில் இளைஞர்கள்!

[கல்கி புத்தாண்டு மலரில் பெர்க்லி – கல்கி இலக்கியப் பரிசுத் திட்டத்தின் கீழ் 1000 ரூபாய் முதல் பரிசு பெறும் சமூகச் சிறுகதை இடம் பெறும் இச்சமயத்தில் இளம் எழுத்தாளர்களுக்குச் சிறுகதைத் துறையில் நீண்ட நாள் அநுபவம் உள்ள திரு பி. எஸ். ராமையா அளிக்கும் அறிவுரைகளைப் பார்க்கலாம் :]

இதமான மாலை நேரம். இலக்கிய அன்பர்கள் பத்து இருபது பேர் கூடியிருக்கிறார்கள். மேஜை, நாற்காலி, மைக் போன்ற சம்பிரதாய உபகரணங்கள் எதுவுமில்லை. சொற்பொழிவாளர் உள்பட எல்லோரும் வெறுந் தரையில் அமர்ந்திருக்கிறார்கள். கேட்க வந்தவர்கள் முகத்திலே ஆவல் தெரிகிறது.

'பவர்' (Power) என்ற இலக்கிய அமைப்பின் முதல் கூட்டம் 9–3–69 அன்று மாலை ஆறு மணியளவில் 'தீபம்' அலுவலக மாடியில் தொடங்கியது. எழுத்துத் துறையில் ஆர்வம் உள்ளவர்களுக்குத் தங்கள் திறமையை வளர்த்துக் கொள்ள உதவுவது இந்த அமைப்பின் நோக்கம். கூட்டத்துக்குத் திரு சி. சு. செல்லப்பா அவர்கள் தலைமை வகித்து, சிறுகதை இலக்கியத்தைப் பற்றிப் பேச வந்திருந்த திரு பி. எஸ். ராமையா அவர்களை அறிமுகப்படுத்தி வைத்தார்.

திரு ராமையா பேசினார் :

"இலக்கியம் என்ற பெரிய ஆலமரத்தின் ஒரு சின்னக் கிளையாகச் சிறுகதையைச் சொல்லலாம். இன்றைய விமரிசகர்கள் சொல்லும் உருவம், உள்ளடக்கம், உத்தி போன்றவை என் கதைகளில் உள்ளனவா என்று தேடிப் பார்த்து மகிழ்வது அல்லது ஏமாறுவது உங்கள் பொறுப்பு. அதில் எனக்குச் சம்பந்தமில்லை. ஏனென்றால், நான் எழுதும்போது இதையெல்லாம் மனத்தில் கொண்டு எழுதவில்லை. சிறுகதை என்பதே இப்பொழுது சொல்லப்படுகிற பெயர்தான். மணிக்கொடி காலத்தில் கதைகள் என்றுதான் சொல்லுவோம் — எழுதுவோம். மணிக்கொடி எழுத்தாளர்களுக்கெல்லாம் நல்ல லட்சியமும், உத்வேகமும் இருந்தன. எனவே தரமான சிறுகதைகள் மலர்ந்தன. இன்றைக்கும் நல்ல சிறுகதைகள் எழுதுகிறார்கள். ஆனால் பெரும்பாலான முயற்சிகள் புன்மையையும், புலமையையும் பொலிவுபடுத்திக் காட்டுவனவாக உள்ளன. இதை நான் ஏற்றுக் கொள்வதற்கில்லை. மற்ற இலக்கியங்களைப்போல் சிறுகதை இலக்கியத்துக்கும் பயன் இருக்க வேண்டும். ஒரு கதையைப் படித்து முடித்ததும் 'ஆஹா...எவ்வளவு அற்புதமான கதை!' என்று பாராட்டுவதோடு முடிந்து விட்டால் அந்தக் கதை நல்ல பயனை விளைவித்ததாகச் சொல்ல முடியாது. மாறாகக் கதையில் வருகிற ஒரு கதாபாத்திரத்தின் பெருமையோ அல்லது சிறுமையோ தனக்கு இருக்கிறதா என்று ஒரு வாசகனைச் சிந்திக்க வைக்கும் கதையே நல்ல பயன் விளைக்கும் கதை. உள்ளதை உள்ளபடி சொல்லும் முறை ஒன்று உண்டு. அதை நான் ஆதரிக்கவில்லை. இருப்பதை — இப்படி இருந்தால் எப்படி இருக்கும் என்று கற்பனை செய்வதையே நான் விரும்புகிறேன்.

"கதைக் கருவுக்காக எங்கேயும் தேடி அலைய வேண்டாம். அன்றாட வாழ்க்கை நிகழ்ச்சிகள், பார்க்கும் மனிதர்கள், கிடைக்கும் அநுபவங்கள் எல்லாமே கதைக்கான கருதான். அதை உருவாகப் பயன்படுத்துவது அவரவர் திறமை. என்னைப் பொறுத்தவரையில் வாழ்க்கைத் துயரங்களையும் கூட எப்படிக் காசாக்குவது என்றுதான் பார்ப்பேன். ஒரு முறை என் மனைவி பிரசவத்துக்காகத் தனியார் மருத்துவமனை ஒன்றில் சேர்க்கப்பட்டிருந்தாள். நர்ஸிங்ஹோமுக்குக் கட்ட வேண்டிய நூற்றி ஐம்பது ரூபாயில் நூறு ரூபாய் கட்டியிருந்தேன். பிரசவம் ஆகி மனைவியையும் குழந்தையையும் வீட்டுக்கு அழைத்து வர வேண்டிய நிலை. 'மீதம் உள்ள ஐம்பது ரூபாயைக் கட்டிவிட்டு அழைத்துப் போங்கள்' என்று நர்ஸிங் ஹோமில் சொல்லி விட்டார்கள். என் கையில் பணமில்லை. நெருக்கடியான நிலை. இதையே வைத்துக் கதை எழுதி நிலைமையைச் சமாளித்தால் என்ன என்று தோன்றியது. உடனே எழுதினேன். விகடனில் கதையைக் கொடுத்துப் பணம் பெற்றுக் கொண்டேன். மனைவியையும் குழந்தையையும் வீட்டுக்கு அழைத்து வந்தேன். ஒரு நெருக்கடி நிலையும் கதைக் கருவாக அமைந்து என் தேவைக்கு உதவியது. இப்படி எனக்கு எத்தனையோ அநுபவங்கள்.



"சிறுகதை எழுதுகிறவர்கள்–எழுதப் போகிறவர்கள் — முக்கியமாகச் சிந்திக்க வேண்டிய விஷயங்கள் உண்டு. குற்றம் செய்து மரத்துப்

போகிற மாதிரி மனிதர்களின் புன்மைகளைப் பொலிவுபடுத்திக் காட்டாதீர்கள். முன்னாள் ஜனாதிபதி ராதாகிருஷ்ணன் அவர்கள் சொன்ன ஒரு விஷயம் என் நினைவுக்கு வருகிறது.

''ஒருவன் தண்ணீரில் குதித்துக் கையையும் காலையும் உதைத்து, தண்ணீரை விலக்கி, சகல ஆர்ப்பாட்டங்களோடும் நீந்துகிறான். மற்றொருவன் சத்தமில்லாமல் நீரில் மூழ்கி முத்தெடுத்துக் கொண்டு வருகிறான். இருவரில் யார் சிறந்தவன்? இதில் நீங்கள் எந்த ரகத்தை விரும்புகிறீர்கள்? எல்லா வேடிக்கைகளையும் செய்து காட்டுங்கள். ஆனால் கூடவே ஆயிரம் இலைகளுக்கு நடுவே ஒரு மலர் போல் மூழ்கி முத்தெடுத்து வாருங்கள். அந்தக் காரியமும் தொடர்ந்து நடக்கட்டும்.

''சத்தியத்தின் துணையில்லாத கதைகள் செத்துப் போகின்றன. சத்திய ஒளி வீசும் கதைகள் நீண்டு நின்று எழுதியவனுக்குப் பெருமை சேர்க்கின்றன. இன்றைய எழுத்தாளன் வயிற்றுப் பிழைப்புக்காக எழுத வேண்டியிருக்கிறது. அதில் கேவலமில்லை. ரேஷன் அரிசிக்காக ஆனந்த விகடனில் நான் வாரம் ஒரு கதை எழுதியிருக்கிறேன். அது எனக்குத் தொழில். அதில் தாழ்வு ஒன்றுமில்லை. இன்றைய வாழ்க்கைப் பிரச்னைகளை வைத்துக் கொண்டு சிந்தனையைத் தூண்டும் கதைகள் எழுதலாம்.

''விமரிசகர்களைப் பற்றிச் சொல்ல வேண்டும். ஒன்றுமே யில்லை, ஒன்றுமே யில்லை என்று சொல்லிக் கொண்டிருப்பதைவிட 'இருக்கிறது' இன்னும் வேண்டும் என்பது தான் சிறந்த விமரிசனம். நல்லொழுக்கங்களைச் சொல்ல வந்தவர்கள்கூட இதுவரை செய்தது சரி. இனி இப்படிச் செய்யலாம் என்றுதான் சொன்னார்கள். அதுதான் (Positive approach). ஒரு நிகழ்ச்சியைச் சொல்லுகிறேன்:

இங்கிலாந்து நாட்டிலே டர்னர் என்று ஓர் ஓவியன். அவன் கிராமப் பகுதியில் குடிசை ஒன்றில் இருந்து கொண்டு பெரிய திரைச்சீலை கட்டி அந்தி வானத்தின் வர்ண ஜாலங்களை ஓவியமாக வரைந்து கொண்டிருந்தான். ஒரு கிழவி அவனுக்குப் பணிவிடை செய்து கொண்டிருந்தாள். டர்னர் நாள் கணக்காக அந்திவானக் காட்சிகளை எழுதிக் கொண்டிருந்தான். ஒரு நாள் கிழவி டர்னரிடம் கேட்டாள்: ''மிஸ்டர் டர்னர்! நீங்கள் எழுதியது போல ஒரு நாளும் அந்திவானம் இருந்ததில்லையே!'' அதற்கு டர்னர் சொன்ன பதில்: ''நான் எழுதியிருப்பது போல அந்தி வானம் இருந்தால் எப்படி இருக்கும் என்று கற்பனை செய்து பாரேன்.'' எனவே விமரிசகர்களைக் கண்டு அஞ்சாமல் தைரியமாக எழுதுங்கள்.''

—ராமையா அவர்கள் பேச்சிலிருந்து சில பகுதிகளை எழுதி அனுப்பியவர்: சுந்தர ராமச்சந்திரன்.

◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆



## உனக்குத் தேவலாம்!

''நோட்டு ரெட்டிப்பு பண்ணித் தரேன்னு வெறும் தாளை உன்னே வெச்சு ஏமாத்திப்புட்டான் ஒரு பாவிப் பய!''

''அந்த வெறும் தாளாவது உங்களுக்கு எண்ணிக்கை சரியாக இருந்திருக்கு! எனக்கு அதிலேயும் ரெண்டு தாளைக் குறைச்சு வெச்சு ஏமாத்திப்புட்டானே!''

## தொழில் வேகம்!

''இவர் எப்போதும் வேகப்படுவாருங்க. அதோ அவர் எப்போதும் ரொம்ப நிதானம்! அவர் ரோட் ரோலர் என்ஜின் டிரைவர்! இவர் ரயில்வே இன்ஜின் டிரைவர்!''





## நீயும் தான்!

''என்னைக் கள்ள நோட்டுப் பேர்வழி என்கிறியே. ஒத்துக்கறேன். ஒத்தை ரூபா கள்ள நோட்டு அடிச்சவன்தான்! உன் சங்கதி என்ன? நீயும் கள்ள நோட்டு அச்சடிப்பவன்தான்! எண்பது பக்கம் நோட்டை நூறு பக்கம்னு அட்டைமேலே அச்சடிக்கிறியே! அதுவும் கள்ள நோட்டுத்தானே!''

# டிவிஎஸ் வினியோகிக்கும் உறுப்புகள் நம்பகமானவை

உழைப்பிற்கு ஆராய்ச்சி செய்யப்பெற்ற உறுப்புகளை உபயோகித்து செலவைக் குறையுங்கள்

| | | | |
|---|---|---|---|
| Commercial Wheels | Standard Battery | Springs and Leaves | FERODO Brake Linings and Clutch Facings |
| Automobile Electrical Equipment | MICO Fuel Injection Parts | BANCO-ROYAL Gaskets and Radiators | Ap Lubrication Fittings |
| Hydraulic Brake System | KAP | | BORG & BECK Clutch Spares |
| Compressors and Servos | ROLON Timing Chains | allite Bolts | |
| Engine Washings and Bushing Kits | Tie Rod Ends | Fenner Fan Belts | FRITZ Filter Element |
| Clutch Housings, Brake Drums and King pins | Horns | Ball Bearings | Roller Bearings |
| Hydraulic Brake Parts | | | TEX Wiper arms and Blades |



டிவிஎஸ் வினியோகிக்கும் உறுப்புகளை உற்பத்தி செய்வோரில் பெரும்பாலோர் தங்கள் தங்கள் துறைகளில் தலைசிறந்தவர். அவை நீண்ட நாள் உழைக்கும் என்பதில் ஐயமில்லை.

உங்கள் நம்பிக்கைக்கு உரியது டிவிஎஸ்

டி வி சுந்தரம் அய்யங்கார் & சன்ஸ் பிரைவேட் லிமிடெட்
மதுரை-திருச்சி-திருநெல்வேலி-புதுக்கோட்டை-சேலம்-கோயமுத்தூர்-திருவனந்தபுரம்



சுந்தரம் மோட்டார்ஸ் பிரைவேட் லிமிடெட்,
மதராஸ்-பெங்களூர்; செகந்திராபாத் விசாகபட்டினம்

மதராஸ் ஆட்டோ சர்வீஸ் பிரைவேட் லிமிடெட்
மதராஸ்-பெங்களூர்-விஜயவாடா

காந்திஜீ விரும்பிய சித்ரம்

# நிலைத்து நிற்கும் தாரகை!

ரா. கணபதி



மன்னன் உத்தானபாதனின் இரு மனைவிகள் சுநீதியும் சுருசியும்.

நீதி வேறு; ருசி வேறு. நமக்கு எது ருசிக்கிறதோ அதை நாடிச் சென்றால் நீதியை மறப்போம்.

சுருசியிடம் அதிகப் பற்றுதல் கொண்டிருந்த உத்தானபாதன் சுநீதியை மறந்தான். பட்டமகிஷியாக இருக்க வேண்டியவள் மட்டம் தட்டப்பட்டு, பணியாளின் நிலைக்கும் கீழே இருந்தாள். ஆயினும், அந்தப் பதிவிரதை இதை ஒரு பொருட்டாகக் கருதாமல், கற்பு நெறியில் கொழுந்தாகப் பிரகாசித்து வந்தாள்.

சிம்மாதனத்தில் சக்கரவர்த்தியின் பக்கத்தில் அமரும் பாக்கியம் பெற்ற சுருசி இருமாப்பின் சிகரத்தில் இருந்தாள்.

ஒரு சமயம் மன்னன் பக்கலில் சுருசியும், மடியில் அவளது மகன் உத்தமனுமாக மகிழ்ச்சியுடன் இருந்தான்.

சுநீதியின் மகன் துருவனும் தந்தையிடம் உறவு கொண்டாட ஆசைப்பட்டு மன்னனின் மடியில் ஏற முயன்றான்.

குழந்தையால் மஞ்சத்தில் அமர்ந்திருந்த தந்தையின் மடியில் ஏறி அமர முடியவில்லை.

சுருசியிடம் பற்றுதலால் அறிவிழந்திருந்த உத்தானபாதன் அந்தக் குழந்தையைத் தூக்கி எடுத்து மடியில் அமர்த்திக் கொள்ளவில்லை.

விஷயத்தை முற்றிலும் இனம் புரிந்து கொள்ளவில்லை துருவன். இருப்பினும்

பிஞ்சு உள்ளத்தினுள் ஏதோ ஒரு சிறுமை வதைத்தது.

குழந்தையாதலால், அந்தச் சிறுமையின் காரணத்தை முழுவதும் கண்டுகொள்ள வில்லை.

சுருசியின் முகத்தைப் பரிதாபமாகப் பார்த்தான். 'மாற்றுத் தாயே! என்னைத் தூக்கித் தந்தையின் மடியில் அமர வைப் பாய்' என்ற வேண்டுகோள் குழந்தையின் கண்களில் தேங்கி நின்றது.

செருக்கின் சிகரத்திலிருந்த சுருசி ஏளன மாக நகைத்தாள். ''அப்பாவித் துருவா! என் வயிற்றில் பிறந்தால்தான் அப்பாவின் மடியில் உட்கார முடியும்'' என்றாள்.

''நான் உன் வயிற்றில் பிறக்கிறேனே!'' என்றது சூது தெரியாத பிள்ளை.

நஞ்சினும் கொடிய வார்த்தையைப் பஞ்சினும் மெல்லிய பாலனிடம் நகைத் துக் கொண்டே சொன்னாள் சுருசி: ''உனக்கு இந்த உடம்பு போனால்தான் மறு படியும் என்னிடம் பிறக்க முடியும். உன் அம்மா ஓயாமல் நாராயணனைப் பூஜை செய்கிறாளல்லவா? அவளிடம் பூஜைக்கு வழி தெரிந்து கொண்டு நாராயணனைப் பிரார்த்தித்துக் கொள். இந்த உடம்பு போகும். பிறகு என் வயிற்றில் நீ பிறக்க லாம்!'' என்றாள்.

உடம்பு போவதா? சிற்றன்னை தன்னைச் செத்துப் போகச் சொல்கிறாள்! அதற்கு அம்மாவை வழி கேட்டு சுவாமியிடம் வேண்டிக் கொள்ள வேண்டுமாம்!

புத்திசாலிக் குழந்தைக்கு ஏளனம் புரிந்து விட்டது.

தடியால் அடியுண்ட பாம்பு போல் திணறித் திணறி மூச்சு விட்டுக் கொண்டு அங்கிருந்து ஓடினான் துருவன்.

அப்போதும் தந்தை தன்னை அழைத்து ஆறுதல் தராதது, சிற்றன்னை செய்த புண்ணில் தகிக்கும் வேலாக நுழைந்தது.

சுநீதியிடம் வந்து கோவென்று அழுதான் கோமகன்.

அன்னை காரணம் கேட்டும் அவன் சொல்லவில்லை. அம்மாவிடம் சொல்லக்கூட அவமானம்!

கீழுதடு துடிக்கப் பெருமூச்சுடன் பிள்ளை நிற்பது கண்டு கலங்கினாள் சுநீதி.

அந்தப்புரத்துப் பணியாட்கள் அரச சமூகத்தில் நடந்த அக்கிரமத்தை அவ ளுக்குச் சொன்னார்கள்.

பரம விவேகியான சுநீதி எண்ணினாள்: 'சுருசி சொன்னது உண்மைதான்! சிறுமை களைப் பெண்ணான நான் எப்படியோ பொறுத் துக் கொண்டேன். ராஜ ரத்தம் பொங்கும் குமாரன் பொறுப்பானா? அவன் சுருசி சொன்னாற்போலவே நாராயணனை வேண்டி அவளது வயிற்றில் மறுபிறவி பெறட்டுமே!'

தன் பிள்ளையின் ஆசைக்காக அப்பிள்ளை யையே பலி கொடுக்கவும் ஒரு தாயாரின் உள் ளம் தயாராகியது!

''அப்பனே! சிற்றன்னையிடம் சீற்றம் கொள்ளாதே! பிறருக்கு நினைக்கின்ற அமங்கலம் இறுதியில் நம்மிடமேதான் திரும்பி வரும். அவன் சொன்னது முற்றி லும் உண்மையே! மன்னரால் மனைவியா ளாகக்கூட மதிக்கப்படாத துர்ப்பாக்கியவதி யான என் வயிற்றில் பிறந்த நீ எப்படி அரசரது மடியில் ஏற முடியும்? சிற்றன்னை சொன்னதைக் கபடமும், பொறாமையும் இல்லாமல் ஏற்று, நாராயணனைத் தவமிருந்து ஆராதிப்பாய்'' என்றாள்.

அக்கணமே அன்னையை விட்டு, அரண் மனையை விட்டுப் புறப்பட்டான் பாலன்.

பிள்ளையைப் பிரிந்த போது வியாச பகவானே தவித்தார். சுநீதியோ மனத்தை வைராக்கியமாக்கிக் கொண்டு, தானே பச்சிளம் பாலனை அனுப்பி வைத்தாள்.

குழந்தையின் வழியில் வந்தார் தேவரிஷி நாரதர். அந்த ஸுகுமாரனுக்குத் தவம் இய லாது என்று தடுத்தார்.

ஆனால் அவன் சங்கற்பத்தில் இம்மியும் தளரவில்லை.

அது கண்டு மகிழ்ந்தார் நாரதர். ''அப் பனே! புனித யமுனைக் கரையில் புண்ணிய மான மதுவனம் இருக்கிறது. அங்கு பகவான் ஹரியின் சாந்நித்தியம் நித்தியமாக உள் ளது. அங்கு சென்று பகவானை விடாமல் தியானம் செய்வாய். எப்போதும் அருள் புரியக் காத்திருக்கும் நாராயணன், உன் தியானத்தால் மகிழ்ச்சி பொங்கும் முகமும் பார்வையுமாகத் தோன்றி வரம் தரு வான்'' என்றார்.

குழந்தை எந்த வடிவைத் தியானம் புரிய வேண்டும் என்பதற்காக பகவானின் திவ்விய ரூபத்தையும் வருணித்தார்:

''மேக சியாமள வண்ணம்; சங்கும் சக்கரமும் கதையும் பதுமமும் தாங்கும் நான்கு திருக் கரங்கள்; தோளில் வன மாலை; மார்பில் ஸ்ரீ வத்ஸ மறுவும் கௌஸ்துப மணியும்; கிரீடம், குண்டலம், கேயூரம், கங்கணம், கடிசூத்திரம், பாத ஸரம் ஆகியன அணிந்த கண்கொள்ளா அழகு; இளமையும் எழிலும் இசைந்த அங்கங்கள்; அந்தச் செவ்வரிக் கண்களையும், புருவத் தையும், செழுமையான கன்னங்களையும், திவ்விய நாசியையும் எப்படிச் சொல்வேன்? கண்ணைப் போலவே மனத்துக்கும் இனிய வன் அவன். வணங்குவோருக்கெல்லாம் புகலிடம். இன்ப நிலையம். கருணைக் கடல். சாந்த ஸ்வரூபன். நீலப் பாத நுனியில் ஜொலிக்கும் அந்த நக வரிசை போதுமே! அந்தப் பதும பாதத்தைப் பெயர்த்து வந்து பக்தர்களின் இதய பதும மத்தியில் குடி கொள்வான்.''

இவ்வாறு சொல்லி வாசுதேவனுக்கு உகந்த துவாதசாக்ஷரி மந்திரத்தையும் துருவ னுக்கு உபதேசித்தார்.

நாரதப் பிரம்மம் கூறியவாறே அருந் தவம் இயற்றலானான் துருவன்.

வாழ்க்கையில் அடிபட்டு வெறுப்புற்ற வயோதிகர்களாலும் செய்ய முடியாத காரி யத்தைக் குழந்தை செய்யலானான்.

யமுனையில் நீராடி, மதுவனத்தில், மதுர மிக்க ஹரியைக் குறித்துத் தவம் தொடங் கியது ஆறு வயதுப் பிள்ளை. விளையாட்டில் உள்ளம் திரும்புகிற வயதில், குறிக்கோளை யன்றி எவ்வித சலனமுமில்லாமல் வைராக்யப் போக்கிலேயாகத் தவம் செய்தான் துருவன்

சித்ரா-கிருஷ்ணவேணி-மகாராணி
சயானி மற்றும் தென்னாடெங்கும்.

ரீஜ பிலிம்ஸ்




டைரக்ஷன்
C.V.ராஜேந்திரன்
திரைக்கதை.வசனம் கோபு



M.S.விஸ்வநாதன் இசை

ELEGANT

முதலில் ஒரு வேளை மட்டும் புசித்து, தவம் இருந்தான். பிறகு மூன்று நாட்களுக்கொரு முறை விளாம்பழமும், இலந்தைப் பழமும் மாத்திரமே உண்டு தியானத்தில் இருந்தான்.

அதன்பின் நாலு நாட்களுக்கொரு முறை உதிர்ந்த இலைகளையும் புற்களையும் உண்டு ஹரித் தியானம் செய்தான்.

அதற்கும் அப்பால் ஒன்பது தினங்களுக்கு ஒரு முறை நீர் மட்டுமே அருந்தி பகவத் சமாதியில் நின்றான்.

அந்த உணவிலும் பற்று ஒழிந்தவனாக, பன்னிரண்டு தினங்களுக்கொரு முறை காற்றை மட்டும் உணவாகக் கொண்டு ஒரு மாதம் நிஷ்டை புரிந்தான்.

இப்படிப் பலவிதங்களில் தவமிருந்து, நாராயணனின் நினைப்பு மாறாமலே குழந்தை நான்கு மாதங்களைக் கழித்தது.

ஐந்தாம் மாதத்தில் அந்த அற்புதக் குழந்தையின் வாய்க்கும் வயிற்றுக்கும் எந்த விதப் பசியும் இல்லை. எந்த இந்திரியத்துக்குமே பசி இல்லை. மூச்சுவிட வேண்டும் என்ற பசிகூட சுவாசகோசத்துக்கு இல்லை. அமிருத ஸ்வரூபம் அப்படியே மனத்தில் பதிந்து விட்ட பின் பசி ஏது? இந்திரியங்களின் சிறிய ஆனந்தங்களுக்கெல்லாம் ஊற்றான பேரானந்தத்தில் முழுகியபின் புலன்களுக்கு ஏது செயல்?

இருதய கமலத்தில் மின்னல் போல் பிரகாசிக்கும் ஆத்ம ஸ்வரூபத்தைக் கண்டு கொண்டு விட்டான் துருவன் — ஆம், நாரதர் நீள நெடுக வருணித்த நாராயண ஸ்வரூபம்கூட மறைந்துவிட்ட நிலை அது!

ஆனால் அந்தத் திரு உருவம் மறைந்து அருவப் பரம்பொருளில் துருவன் ஆழ்ந்துவிட பகவான் அனுமதிக்கவில்லை. அவன் மூலம் பக்தியின் பெருமை பாரெங்கும் பரவ வேண்டும் என்பது பரமனின் சித்தமாக இருந்தது.

எனவே, துருவனின் அகத்தில் நீவாரத் தானியத்தின் ஊசி முனையிலும் நுண்ணிய மின்னல் கொழுந்திடைப் புலனான பரமாத்ம ஸ்வரூபத்தை மறைத்து விட்டான்!

ஆத்ம வஸ்துவை அடைந்தவர்களுக்குத் தான் அதை இழப்பது எவ்வளவு பெரிய நஷ்டம் என்பது தெரியும்.

ராஜகுமாரன் என்கிற பதவியும் கௌரவமும் வேண்டும் என்பதற்காகத் தவம் தொடங்கிய துருவன், பதவிகளுக்கெல்லாம் மேலான ஆத்ம சாட்சாத்காரத்தை எய்தினான். அந்த ஆனந்தக் களிப்பு மறைந்தவுடன், அலமந்து அவன் கண் விழித்தான் —

கண் எதிரே,

அவன் உள்ளே கண்டு கொண்ட ஜோதியே நீல வெள்ளமாக நின்றது.

நாரதப் பிரம்மம் கூறிய வருணனைக்கு இம்மியும் மாறுபடாமல் எதிரே நின்று தரிசனம் சாதிக்கிறான் ஸ்ரீமந் நாராயணன்!

புலன்களை அழித்து ஆத்மானந்தம் கண்ட துருவன், இப்போது அப்புலன்களையே புனிதப்படுத்தும் முறையில் பக்தியின் ஆனந்தத்தைக் கண்டான்.

திருமாலைப் பார்ப்பதே அவன் கண்களின் பசி தீர்க்கும் பானமாக, வதனத்தின் வாதை தீர்க்கும் முத்தமாக, தோள்களின் தினவு தீர்க்கும் தழுவலாக இருந்தது.

தண்டனிட்டு எழுந்தான்.

துதிக்கத் துடித்தது உதடு. ஆயினும் வாக்கு உதயமாகவில்லை. ஜகத்தைப் பவித்திரமாக்கும் துதி அந்தப் பாலனின் பால் மணம் மாறா வாக்கிலிருந்து பெருக வேண்டுமென பகவான் திரு உளம் கொண்டான்.

வேத மயமானதும், சகல சாஸ்திர ஞானத்தையும் புகட்டும் பாலாடை போன்றதும், பிரணவ நாதத்தைத் தனக்குள்ளே ரகசியமாகப் பொதிந்து கொண்டிருப்பதுமான பாஞ்சஜன்ய சங்கத்தினால், குழந்தையின் அழகிய கன்னத்தைத் தொட்டான் பிரபு.

உடனே துருவனின் திருவாய் அமிருதமாகத் துதி செய்யலாயிற்று.

''எனக்குள்ளே உறங்கிக் கிடந்த வாக்கை என்னுள் புகுந்து எழுப்பி வெளிக் கொண்டு வந்த ஐயா, உனக்கு வந்தனம்! வாக்கு மட்டுமின்றி சகல இந்திரிய வியாபாரங்களை

யும் இயக்கிக் கொண்டிருப்பவன் நீயே! பிதாவின் மடி கேட்ட எனக்கு உன்னையே தந்து கொண்டாய்! உன்னை வழிபட்ட எனக்கு மோட்ச நலன் தவிர வேறென்ன வேண்டும்? என் தாயின் அருளால், கன்றுக்கு இரங்கும் பசு போன்ற உன்னையே பெற்றேன். இனி தாயும் தந்தையும், பெரும் புகழும், பவிசும் பதவியும் வேண்டேன்'' என்றான் துருவன்.

ஜகன்மோகன மாய விலாசனாகிய மகா விஷ்ணு குறுநகை புரிந்து, ''குழந்தாய்! அதெல்லாம் முடியாது! நீ எதை உத்தேசித்துத் தவம் தொடங்கினாயோ அதை அடையா விட்டால் உலகம் என்ன சொல்லும்? சுருசி என்ன எண்ணுவாள்? அந்த அபக்கியாதிக்கு நான் தயாராக இல்லை. எனவே, நாட்டுக்குத் திரும்பிச் செல். உன் தந்தையின் மனமும், சுருசியின் மனமும் மாறி இருக்கும். உன்னைத் தம் மகனாகவே அவர்கள் சீராட்டுவார்கள். அப்புறம் நீ அரசாளி உலகுக்குத் தர்மங்களைச் செய்து காட்டு. கடைசியில் இருக்கவே இருக்கிறது மோட்ச நிலை'' என்றான்.

பகவான் சொன்னபடியே நாடு திரும்பினான் பாலன்.

பகவான் சொன்னபடியே அவனைச் சீராட்டினர் உத்தானபாதனும் சுருசியும்.

தன் தாளில் வணங்கிய குழந்தையை சுருசி வாரி எடுத்து அணைத்தாள். 'இந்த உடம்பைப் போக்கிக் கொண்டு என் பிள்ளையாகப் பிற' என்று சொன்ன அதே வாயால் 'சிரஞ்சீவியாக இரு' என்று ஆனந்தபாஷ்பத்துடன் வாழ்த்தினாள். இதைக் கூறும் சுகப்பிரம்மம், 'அன்பு முதலிய குணங்களால் பகவான் ஹரியைப் பிரீதி செய்தவர்களிடத்தில் சகலப் பிராணிகளின் மரியாதையும் பள்ளத்தில் வெள்ளம் பாய்வது போல் இயல்பாகப் பெருகும்தானே?' என்கிறார்.

துருவனுக்கு உதரத்தில் இடம் தந்த சுநீதியின் மகிழ்ச்சியை யாரே சொல்ல இயலும்?

காலக்கிரமத்தில் துருவனுக்குப் பட்டம் சூட்டி விட்டு வனம் புகுந்தான் மன்னன்.

ஆதியில் தந்தையின் அன்பை ஏகபோக்கியமாக அநுபவித்த சுருசியின் மகன் உத்தமன் தனக்குப் பட்டம் மறுக்கப்பட்டதற்காக மன வருத்தம் கொள்ளவில்லை.

ஆசையற்ற அவன் பிரம்மசாரியாகவே தாயுடன் இமயமலைச் சாரலை அடைந்தான்.

அங்கு இருவரும் யட்சர்களால் கொல்லப்பட்டனர்.

''ஆதியில் செய்த வினை அவர்களைத் தாக்கிற்று'' என்று ஊரெல்லாம் பேசியது.

துருவன் உள்ளம் புழுங்கினான்.

யட்சர்களை எதிர்த்துப் போரிட்டு வென்று, மாற்றாந் தாய்க்கும் உடன்பிறந்தவனுக்கும் வீர யக்ஞம் செய்து திருப்தி தந்தான்.

மன்னனுக்குரிய எல்லா வேள்விகளும் புரிந்து, மக்களுக்கு ஒரு தந்தையாக விளங்கினான் துருவன். ''சேமித்த புண்ணியத்தைச் சுக போகங்களால் செலவிட்டு, விரத அநுஷ்டானங்களால் பாபத்தை விலக்கி பூமண்டலத்தை ஆண்டான்'' என்று பொருள் ததும்பக் கூறுகிறார் சுகப்பிரம்மம்.

கடைசியில் அனைத்திலிருந்தும் அறவே பற்று நீங்கி, பதரிகாசிரமத்தில் தியான பராயண நிலைத்து நின்றான்.

உதய சந்திரன் போல் திசைகளையெல்லாம் பிரகாசப்படுத்திக் கொண்டு விமானமொன்று வந்தது.

பகவான் விஷ்ணுவின் திவ்விய ரூபத்தையே பெற்ற கிங்கரர்களாகிய நந்தனும் சுநந்தனும் விமானத்திலிருந்து இறங்கி வந்தனர். விநயத்துடன் நிற்கும் துருவனிடம், ''அடைதற்கரிய விஷ்ணுபதம் தங்களால் அடையப்பட்டது. நித்யசூரிகளும் எந்த உயர்நிலையை அடைய முடியாமல் பார்த்துக் கொண்டு மட்டும் உள்ளனரோ, எந்த ஸ்தானத்தை சந்திரனும், சூரியனும், சகல கிரகங்களும், நட்சத்திரங்களும் பிரதட்சிணம் புரிகின்றனவோ அங்கு தாங்கள் தாரகையாக நிலைத்து நிற்கலாம். அங்கு தங்களை அழைத்துச் செல்ல பகவானே இவ்விமானத்தை அனுப்பி வைத்தார்'' என்றனர்.

விமானத்தில் ஏற வந்த துருவனின் முன்பு யமதர்மராஜன் வணங்கினான். ''தாங்கள் பக்தியால் காலத்தை வென்று, சுருசி சொன்னது போல் சிரஞ்சீவி நிலைக்கு எழுந்தருளும் இப்போது காலனாகிய என் மீது கால் வைத்து விமானத்தில் ஏற வேண்டும்'' என்று விண்ணப்பம் செய்தான்.

யமதர்மனைப் பாத பீடம் போல் கருதி, அவன் சிரத்தில் பாதம் பொறித்து, சிவிகையில் ஏறினான் துருவன்.

விமானம் கிளம்புகையில், ''நிறுத்துங்கள்'' என்றான் துருவன். ''என் அன்னை காட்டிய வழிதான் என்னை இந்த இலட்சியத்தில் கொண்டு நிறுத்தியது. அவளும் என்னுடன் வர வேண்டும். எளிய மாதாவை விட்டுத் தனியே வரமாட்டேன்'' என்றான்.

''அதோ, முன்னே பாருங்கள்!'' என்றனர் கரோத்தமர்கள்.

துருவனுக்கு முன்பாக சுநீதி விமானத்தில் சென்று கொண்டிருந்தாள்.

அன்புருவான விஷ்ணுவின் தவத்தில் துருவன் நிலைத்து நின்றதைவிடப் பெரிய அதிசயம், அலட்சியத்தின் உருவான பதியிடம் கற்புத் தவத்தில் சுநீதி இம்மியும் வழுவாது நிலைத்து நின்றதே அல்லவா?

சப்த ரிஷி மண்டலத்தைக் கடந்து துருவ மகாராஜன், துருவ மகாஞானி, துருவ மகாபக்தன், துருவ நட்சத்திரமாகி பரம உத்தம பதத்தில் நின்று விட்டான்!

அசையாத தாரகை அது!

நடுக் கடலில் வழி தெரியாதவருக்குத் திசை தெரிவிக்கும் தாரகை அது!

சம்சாரக் கடலில் வழி தெரியாத நமக்கெல்லாம் திசை காட்டித் தாரகம் தருவது துருவ சரித்திரம்.

'துருவ' என்பது அசையாத நிலையைக் காட்டும். பற்பல விநோதங்களில் மனம் மாறி மாறித் திளைக்கும் பிள்ளைப் பிராயத்தில், மனத்தை ஒருமுகப்படுத்தி ஆடாமல் அசையாமல் பகவத் ஸ்மரணை புரிந்தவன் துருவன். 'அசையாத மன நிலை' என்று நரசி மேதா கூறும் வைஷ்ணவ குணத்துக்கு அவனையே ரூபகமாக்குகிறார் ஓவியர் கனுதேசாய்.




வயது அறுபதை எட்டிப் பிடிக்கப் பார்த்துக் கொண்டிருந்தாலும் தளர்ச்சியைக் காட்டிக் கொடுக்காத கச்சலான நெடிய உருவம். சிரசில் மாத்திரம் வயதைக் காட்டிக் கொடுக்கிற மாதிரி ஓரிரு இடங்களில் நரை பனிச் சென்று தெரியும். எதையும் நெடு நாட்களாகத் தூண்டித் துருவியே பார்த்துப் பழகிவிட்டதனால் கண்களில் ஓர் அசாதாரண நீட்சண்யம். பந்தய மைதானங்களில் பல காலமாக நடந்து நடந்து பழகிவிட்ட அநுபவத்தின் காரணமாக நடையிலே மிடுக்கும் சுறுசுறுப்பும் தானாகவே அமைந்து விட்டன. ராமுவுக்கும் குதிரைகளுக்கு மிடையே இருந்த நெடுநாளையத் தொடர்பு, சதா சர்வ காலமும் அவைகளைப் பற்றிய சிந்தனைகள், ஆராய்ச்சிகள், இதன் விளைவாக அவர் உடல்வாகு, குரல் இவைகளிலேயே கணிசமான மாற்றம் ஏற்பட்டு விட்டது. சிறுவயதில் அவருக்கு உருண்டையான முகம். இப்போது நீண்டு, குதிரை முகச் சாயலுடையதாகி விட்டது. குரல்வளையிலும் கரகரப்பேறி, குதிரைக் கனைப்பின் நாதத்தை ஒத்திருக்கிற மாதிரியாகி விட்டது அவர் குரல்.

குதிரை ராமு ஓய்வுபெற்றவுடன் முதல் காரியமாகச் செய்தது சைதாப்பேட்டைக்கும் கிண்டிக்கும் நடுவே, பந்தய மைதானம்—குதிரை லாயங்களுக்கு அருகே யுள்ள ஒரு 'ஜாகை'க்குத் தன் இருப்பிடத்தை மாற்றிக்கொண்டதுதான். 'டிரெயினர்களில் ஓரிருவர், ஜாக்கிகளில் சிலர், குதிரைச் சொந்தக்காரர்களில் பலரை ராமுவுக்குப் பரிச்சயம் உண்டு. அவர்களுக்கே ராமுவுக்கு இருக்கும் குதிரைகளைப் பற்றிய அறிவுத் தேர்ச்சி முதிர்ச்சி இருக்குமா என்பது சந்தேகம்.

இன்று கிண்டியில் பெரிய குதிரைப் பந்தயம் என்று வைத்துக் கொள்ளுங்கள். 'குதிரைச் சாமியார் இல்லம்' ஜே ஜே என்றிருக்கும். பால்கார மன்னார், லாண்டரி ஓனர் சபாபதி, சலூன் முதலாளி சங்குண்ணி முதலியவர்கள் பவ்வியமாக ஜன்னலுக்கு வெளியில் நின்று கொண்டிருப்பார்கள். உள்ளே சாமியாரைச் சுற்றிப் போடப்பட்டிருக்கும் நாற்காலிகளிலும் சோபாக்களிலும் பிரபலஸ்தர்கள் உட்கார்ந்து கொண்டிருப்பார்கள். எல்லோருக்கும் நடுநாயகமாக ஒரு சுழலும் நாற்காலியில் அமர்ந்து தான் இந்தக் கூட்டத்துக்குக் குரு ஸ்தானம் வகிக்கிறோம் என்ற நினைப்பினால் ஏற்பட்ட மகிழ்ச்சி பொங்க உற்சாகத்துடன் ஒரு கனைப்புக் கனைத்துக் கொண்டு ஆரம்பிப்பார். (கனைப்பு அசல் குதிரைக் கனைப்புத்தான்!) உள்ளே உட்கார்ந்து கொண்டிருக்கும் பிரபலஸ்தர்களை உங்களுக்கு அறிமுகப்படுத்தி வைக்க வேண்டாமா? சாமியாருக்கு அருகில் சோபாவில் உட்கார்ந்திருப்பவர்தான் ஏ.எல்.ஓ.ஆர்.வி. எம். காளியண்ணன் செட்டியார். பிரபல பாங்கர் — வர்த்தகர். பல பரிகளின் சொந்தக்காரர். சாமியாரின் அபிப்பிராயத்தில் திடமான நம்பிக்கை வைத்திருப்பவர். அடுத்தபடியாக அமர்ந்திருப்பவர் சர்க்காரில் பெரிய அதிகாரி மிஸ்டர் வைத்தீசுவரன். அவருக்குப் பக்கத்தில் மிஸ்டர் நாயகம்—பெரிய ஹோட்டல் முதலாளி. அதோடு கூட சினிமா வட்டாரத்தில் பெரிய விநியோகஸ்தர். 'பைனான்சியர்'; பல லட்சம் தேறும். சாமியாரை அழைத்துக் கொண்டு பம்பாய் போய் நல்ல குதிரைக் குட்டிகளாக வாங்கத் திட்டமிட்டிருக்கிறார். சாமியார் பார்த்து வாங்கினால் சுழி சுத்தமாக நல்ல ஜாதியாக அமையுமென்ற திட நம்பிக்கை நாயகத்துக்கு உண்டு. ஆரம்பத்தில் நாயகத்துக்குக் குதிரைப் பந்தய மோகத்தை ஏற்படுத்தியதே சாமியார்தான். அது இப்போது குதிரை வாங்கும் அளவுக்கு வலுத்து விட்டது.

அடுத்தபடி வக்கீல் வராகமூர்த்தி. அவர் பக்கத்தில் சேமங்கலம் சேர்மன் சிவராஜன், மாயவரம் மிராசுதார் மார்த்தாண்டம் இவர்கள்தான் குறிப்பிட்டுச் சொல்லக்கூடிய நபர்கள். இன்னும் பலர் நாற்காலிகள் நிறைந்து விட்டதால் சுவரை யொட்டித் தரையிலேயே குந்திக் கொண்டு உட்கார்ந்திருக்கிறார்கள். எல்லார் கைகளிலும் ஒவ்வொரு ரேஸ் புத்தகம் இருந்தது.

கனைப்புக்குப் பிறகு சுற்றி ஒரு கண்ணோட்டம் விட்டு விட்டு வெள்ளி வெற்றிலைச் செல்லத்தைத் திறந்து சீவலை வாயில் அடக்கிக் கொள்வார். துளிர் வெற்றிலை நான்கைந்தைக் கையில் எடுத்துக் கலர்ச் சுண்ணாம்பைத் தடவிக் கொண்டே ''என்ன காவண்ணா? இன்னி டெர்பிக்கு என்ன பார்த்து வைத்திருக்கேள்?'' என்று கேட்பார். காளியண்

ணன் செட்டியாரைக் 'காவன்னு' என்றுதான் சாமியார் அழைப்பது வழக்கம்.

''சாமியார் அய்யாதான் சொல்லவேணும். எல்லாக் கழுதையும் ஒண்ணாத் தெரியுது நமக்கு!''

''என்ன காவன்னு! எல்லாத்தையும் கழுதேன்னு ஒரே வார்த்தையிலே சொல்லிட்டேள். நீங்ககூட என்ன சாதாரண மனுஷன் மாதிரிப் பேசறேள். 'ஜிப்ஸி க்வீன்' அது தான் நம்ம சிவசாமியினுடைய குதிரை. அதையும் எல்லாத்தோடேயும் சேர்த்து எடை போட்டு விட்டேளே?''

''ஜிப்ஸி க்வீன் இதுவரைக்கும் ஒண்ணும் பெரிசாச் சாதிக்கல்லியே, சாமியாரே! ஏதோ இரண்டு தரம் நாலாவதாக வந்திருக்கு அம்பிட்டுத்தானே!''

''அங்கேதான் நீங்க 'மிஸ்டேக்' பண்றேள். நீங்க என்ன? எல்லாரும் பண்ணறுள். டெர்பி தூரம் என்ன? 2400 மீட்டர். இதுவரைக்கும் ஒண்ணும் பெரிசாச் சாதிக்கலேன்னு இலேசாச் சொல்லிவிட்டேள். என்ன தூரம் இது வரைக்கும் ஓட்டியிருக்கான்? 1600 மீட்டருக்கு மேலே ஓட்டவேயில்லே, காவன்னு! அது 'டிஸ்டன்ஸ் அனிமல்'. அந்தத் தூரம் அதுக்குப் போறுது. டெர்பிதான் அதற்கு 'ஐடியல் டிஸ்டன்ஸ்'. தொடர்ச்சியா ஏழு பெரிய கப்புகளை அடிச்சது. மணிப்பூர் மகாராஜா அந்தக் காலத்திலே அதனுலே பத்து லட்சம் சம்பாதிச்சார். அந்தக் காலத்திலே! அதைக் கவனிக்கணும். இன்னிக்குப் பத்து லட்சம் சர்வ சாதாரணம்'' என்று கூறி நிறுத்தி வாசனைப் புகையிலையை அமுக்கி எடுத்துத் தாம்பூலக் கலவையில் சேர்த்து அடக்கிக் கொள்வார். அனைவரும் திறந்த வாய் திறந்தபடி இமை கொட்டாமல் சாமியார் பேச்சிலேயே லயித்துப் போய் உட்கார்ந்திருப்பார்கள்.

சாமியார் சற்று நிதானப்படுத்திக்கொண்டு அருகிலுள்ள மேஜையிலிருந்து ஒரு பெரிய பைண்ட் புத்தகத்தை எடுத்துக் கிடுகிடுவென்று ஏடுகளைப் புரட்டுவார். ஒரு நோட்டம் விடுவார். அதில் மணி மணியாக அச்செழுத்து மாதிரி அழகாக அட்டவணைகள் போட்ட குறிப்புகள் இருக்கும். அது முப்பது வருஷத்திய அகில இந்திய குதிரைப் பந்தயங்களின் 'ரெக்கார்ட்'. சாமியாரே சின்ன வயதிலிருந்து அயராமல் தயாரித்தது. அதை ஒரு பெரிய பொக்கிஷமாகவே போற்றி வந்தார் அவர்.

எழுந்து கொண்டே, ''கடைசியா ஒண்ணு சொல்லிடறேன். இன்னிக்கு 'நியூமராலஜி' பிரகாரம் 'பஞ்சமம்' பேசணும். ''ஜிப்ஸி'' ஐந்தாவது பந்தயத்திலே ஐந்தாம் நம்பர் குதிரையா ஓடறது. 'டிரா' நம்பரும் ஐந்து'' என்று அர்த்த புஷ்டியுடன் ஒரு புன்சிரிப்பை உதிர்ப்பார்.

எல்லோரும் போனபிறகு தனியாக மறுபடியும் 'காவன்னு' உள்ளே வந்து ''சாமி! ஒரு நிமிஷம். உங்களுக்குத்தான் சிவசாமியைத் தெரியுமே! ஒரு போன் அடிச்சு ஒரு வார்த்தை கேட்டுப்பிடுங்களேன்'' என்பார்.












''நாசமாய்ப் போச்சு. நீங்க ஒண்ணு.. அவனே காலம்பற என்னைக் கேட்டான். எப்படித் தன் 'அனிமலுக்கு' சான்ஸ் இருக்குன்னு. பயப்படாதே உன்னதுதான் 'டெர்பி' என்று தைரியப்படுத்தி வைச்சிருக்கேன். போய் மேற்கொண்டு ஆகவேண்டிய வேலையைப் பாருங்கோ காவன்னு!'' என்று அவரையும் அனுப்பி வைக்கிறார் சாமியார்.

ஃ ஃ ஃ

**ம**ணி ஒன்று. ரேஸ் மைதானத்தில் 'பைனகுலர்ஸ்', ரேஸ் புத்தகம்,—வெள்ளி வெற்றிலைச் செல்லம், பிரித்துத் தயாராக இருக்கும் பவுண்டன் பேனா இத்தியாதி சம்பிரமங்களோடு பறக்கப் பறக்கச் சாமியார் நுழைகிறார். அவரைத் துரத்திக் கொண்டு இருபது முப்பது பேர் அங்கும் ஓடி வருகிறார்கள். சாமியாரின் துரித நடைக்கு ஈடு கொடுக்க வேண்டுமென்றால், அவர்கள் ஓடினால்தான் முடியும். பந்தயப் பூமியில் அவர் கால்களுக்கு அசாத்திய வேகம் தானாகவே வந்துவிடும். கூட்டம் மேலும் தொடரவே பொறுமை இழந்து, சற்று நின்று, ''அடடா! என்ன இது? இப்பத்தான் நுழையறேன்'' என்று அலுத்துச் சலித்துக் கொண்டு தொடர்ந்து வரும் கூட்டத்தை ஒரு நோட்டம் விட்டார். பரிச்சயமானது, பரிச்சயமில்லாதது, தூரத்து உறவினன் ஒருவன் — இப்படிப் பலரகப்பட்டவர் முகங்கள் அந்தக் கூட்டத்தில் இருந்தன. ஆனால் அவர் கருணையை வேண்டிக் கெஞ்சும் பாவனையில் அத்தனை முகங்களும் அவரை நோக்குகின்றன. 'வெடுக்' என்று ஒருவர் வைத்திருக்கும் புத்தகத்தை வாங்கி ஏதோ படபடவென்று அங்குமிங்கும் குறித்துக் கொடுத்துவிட்டு அந்தக் கூட்டத்திலிருந்து விடுபடுகிறார். குறிப்பிடப்பட்ட புஸ்தகக்காரர் இப்போது அவஸ்தைக்குள்ளாகிறார். அவரை எல்லோரும் மொய்த்துக் கொள்ளுகின்றனர்.

இதோ நாலு பந்தயங்கள் முடிந்து விட்டன. மணி பிற்பகல் 3.40. இன்னும் ஐந்து நிமிஷங்களில் 'டெர்பி' ஆரம்பமாகப் போகிறது. ராமு சிவசாமியிடம் ஓடி வருகிறார். ''மிஸ்டர் சிவா! உங்களுக்குத்தான் வெற்றி. சும்மா தைரியமா இருங்கோ'' என்று அவர் முதுகில் ஷொட்டுக் கொடுக்கிறார். சாமியாரின் வாக்குப் பலிக்குமென்ற நம்பிக்கை அவரைக் கம்பீரமாக நிமிர்ந்து உட்கார வைக்கிறது. சாமியார் அங்கிருந்து அவருக்கு ஆகிவந்த இடத்துக்குத் தாவிப் போய் நின்று கொள்கிறார். 'பைனகுல'ரைச் சரிசெய்து கொண்டு அந்த மகா பந்தயத்தில் கலந்து கொண்ட பரிகளின் சாதனையைக் காணத் தம்மையும் தயார் செய்து கொண்டிருந்தார். இதோ பந்தயம் ஆரம்பமாகி விட்டது. பந்தய மைதானத்தில் ஒரே அலறல்கள், அவரவர்களின் அபிமானக்குதிரைகளின் பெயர்கள் விண்வெளியை எட்டிப் பிடிக்கின்றன. இதோ பரிகள் அசுர வேகத்தில் நேர் பாதைக்கு வந்துவிட்டன. இன்னும் சில விநாடிகளில் வெற்றி நிர்ணயமாகிவிடும். அந்த ஆரவாரத்தில் — அலறல்களுக்கு மத்தியில் ''ஜிப்ஸி!'' என்ற சாமியாரின் கர்ஜனை தனியாக ஒலித்தது. என்ன பிரயோசனம்? கண் மூடித் திறப்பதற்குள் முடிவு வேறு விதமாகப் போய்விட்டது. வெற்றி எதற்கோ? 'ஜிப்ஸி' ஐந்தாவதாகப் போய்விட்டது!

புஸ்தகத்தால் தலையில் ஓங்கி ஓர் அடி அடித்துக் கொண்டு யாரையோ வசைமாரி பொழிந்து கொண்டு ஸ்டாண்டிலிருந்து இறங்கினார் சாமியார். தொங்கிய முகத்துடன் சிவசாமி எதிர்ப்பட்டார். ''பார்த்தீங்களா காலை வாரிவிட்டுடுச்சு நம்ப குதிரை, சாமியாரே!'' என்றார் அழாக் குறையாக.

''என்ன அப்படிச் சொல்றேள், சிவா! அது ஒண்ணும் காலை வாரிவிடல்லே. நான் ஆயிரம் சத்தியம் பண்ணுவேன். 'பெடிகிரி' போய் ஆயிடுமா? 'கிளாஸ்' போய் ஆயிடுமா? கண்டிப்பா ஆகாது.

''இன்னிக்கு என்ன கிழமை? செவ்வாய்—கேட்டை மூட்டை செவ்வாய் என்று சொல்கிறது வழக்கம். பழுவான நாள். 'டெர்பிக்கு டைம் எப்படிப் பார்த்து வைச்சிருக்கான் பார்த்தேளா? 3.45 மணிக்கு! செவ்வாய்க்கு 3–4–30 ராகுகாலம். அதுவும் 3.45க்குக் கொழுத்த 'ராகுஸ் டைம்'

''அது போருதுன்னு ஜாக்கிக்குக் 'கறுப்பு டிரஸ் வேறே மாட்டியாச்சு. இது போருதா? பழுவான நாள் — கொழுத்த ராகுகாலம் — இதற்கெல்லாம் சிகரம் வைக்கிறாற்போல 'கறுப்பு' டிரஸ். எல்லா தோஷங்களும் சேர்ந்து உம்ம 'ஜிப்ஸி'யை அமுக்கிடுத்து. இல்லாட்டா 2400 மீட்டர்லே தோற்றிடு ஜாதியா? வெள்ளைக்காரனுக்கு வேணா இதெல்லாம் கிடையாது. அவன்களுக்கு நம்பிக்கையுமில்லே. நீர் நம்மவர். 'டெர்பி' நம் ஊரில் நடக்கிறது. 'ஜிப்ஸி' உம் குதிரை. நமக்கு இதெல்லாம் உண்டு. நேரம், காலம் பார்க்காமே நாம் ஏதாவது நல்ல காரியம் செய்யலாமா? நீர் ஜிப்ஸியை மட்டமா மட்டும் நெனைக்கக் கூடாது'' என்று வீராவேசமாகச் சாமியார் சொற்பொழிவு அடிக்கவே சிவசாமிக்கு அதில் உண்மை இருப்பதாகவே புலப்பட்டது.

''நீங்க சொல்றதும் ஒரு வகையிலே சரிதான்'' என்றார்.

''ஒரு வகையிலே என்ன? நீங்க வேணும்னு பாருங்கோ, சிவா. இந்த வருடம் 'செயின்ட் லீஜர்'லேயும் சரி, பங்களூர் டெர்பியிலேயும் சரி — ஜிப்ஸி துண்டா தனியா வரும்! இது மாதிரி தோஷங்கள் ஏற்படாத தினமாக அமையணும். அதைப் பார்த்துங்கோ'' என்று முடித்து விட்டுச் சாமியார் நகர்ந்து விட்டார்.

சிவசாமி என்ன? சாமியார் அது கண்டிப்பாக அது ஜெயிக்குமென்று தகுந்த காரணங்களுடன் அடித்துப் பேசும்போது திடமாக நம்பும் அதே மனிதர்கள். அது வராமல் போனதும் அதுக்காக அவர் கூறும் காரணங்களையும் நம்பாமல் இருக்க முடியாது. நம்புகிறார்கள். அவருக்கென்று ஒரு தனிக் கூட்டமே இருக்கிறது!

## ஹவா - காடி

இந்தியாவுக்கு மோட்டார் கார்கள் எப்பொழுது வந்தன தெரியுமா? எழுபது ஆண்டுகளுக்குமுன் முதன் முதலாக மூன்று கார்கள் பம்பாய்க்குக் கப்பலில் வந்திறங்கின. இக் கார்களின் பெயர் ஒல்ட்ஸ்மொபைல். முதல் காரைப் பிரபல தொழிலதிபரான காலஞ்சென்ற ஜாம்ஷெட்ஜி டாட்டாவும் இரண்டாவது காரைப் பிரபல வழக்கறிஞரான ருஸ்தம் காமாவும் மூன்றாவதை வாடியா என்பவரும் வாங்கினார்கள்.



கார்களைச் சோதனை ஓட்டத்துக்காக பம்பாய்த் தெருச் சாலைகளில் ஓட்டிய போது ஏதோ அதிசயத்தைக் காண்பது போல் மக்கள் வாயைப் பிளந்து கொண்டு பார்த்தனராம்! விரைவிலேயே பணக்காரர்களுக்குக் "கார் மோகம்" அதிகமாகிப் பலர் கார்களை வாங்கினார்கள்.

தமது ஒல்ட்ஸ்மொபைல் காரைப் பற்றி ஸ்ரீ ருஸ்தம் காமா வர்ணிக்கும் போது சொல்கிறார்:

"அந்தக் கார் முப்பது மைல் வேகமாவது செல்லுமா என்பது சந்தேகமாக இருந்தது. ஆனால் அதே வேகத்தில் பம்பாயிலிருந்த செங்குத்தான மலைகள் மீதுகூடச் சிரமமில்லாமல் ஏறியது. அதில் ஸ்டீரிங் சக்கரத்திற்குப் பதிலாக ஒரு ஸ்டீரிங் ராடுதான் இருந்தது. ஹாரனுக்குப் பதிலாக ஒரு சைக்கிள் மணியும் சாதாரண மண்ணெண்ணெய் விளக்குகளும்தான் இருந்தன. 'ஸ்டார்டிங்'கைப்பிடி சீட்டின் மீது இருந்தது. பெரிய ஃப்ளீவீலில் (Flywheel) ஒன்றுடன் சங்கிலி சேர்க்கப்பட்டு இந்தக் கார் ஓடியது. மொத்தத்தில் அது ஒரு நாய் வண்டி போலத் தோற்றமளித்தது!"

அவருடைய அருமைக் கார் பல பேர்கள் மீது ஏறியபோதும் அவர்களில் ஒருவர்கூடச் சாகவில்லையாம். சிறிதளவு அடியையும் அவர்கள் பொருட்படுத்தாது உற்சாகமாகச் சென்றனராம்.

அந்தக் காலத்தில் கார்களை என்ன பெயரிட்டு அழைத்தார்கள் தெரியுமா? "ஹவா காடி"! ஹவா என்றால் காற்று அல்லது புகை என்று பொருள்.

1913ல் இந்தியாவில் 4521 கார்கள் இருந்தன. இன்று சுமார் பதினொரு லட்சம் கார்கள் நமது நாட்டில் உள்ளன.

தகவல்: மோட்டார் மாகஸீன்
எழுதியவர்: எம். என். சுந்தர ராகவன்

---

மார்க்கட்டில் எந்தக் காய்கறி மலிவு என்று தெரிந்து கொள்ள வேண்டுமா?

*சாப்பாடு ஹோட்டல் 'மெனு' போர்டைப் பாருங்கள், போதும்!*

'பாபு'





இங்கிலாந்தில் சில பாங்குகள் வாடிக்கையாளர்களின் குழந்தைகளுக்கு இனாமாக ஒரு செக் புத்தகம் கொடுக்கின்றன. அதில், "ஒரு குச்சி மிட்டாய் மட்டும்" என்று எழுதி இருக்கும். குழந்தை கையெழுத்துப் போட்டுப் பாங்கில் கொடுத்தால் அந்தக் குழந்தைக்கு ஒரு 'லாலிபாப்' மிட்டாய் கொடுப்பார்கள்.

ஆதாரம்: "லிங்க்"

தகவல்: கே. ராஜாமணி

---

## இசையின் ஆழம்!

ஓர் இசைத்தட்டில் நாம் வட்டமான பல மெல்லிய கோடுகளைப் பார்க்கிறோம். அந்தக் கோடு ஒன்றின் ஆழம் எவ்வளவு தெரியுமா? 0.00152 அங்குலம். உலகத்திலேயே முதன் முதலாக இசைத் தட்டில் பதிவான குரல் யாருடையது? இசைத் தட்டைக் கண்டுபிடித்த 'எமிலி பெர்லினர்' என்பவருடையதுதான். அவர் பாடிய கடவுள் வணக்க பாடல்தான் முதல் இசைத் தட்டில் பதிவாகியது. 1884ஆம் வருடம் அது நடந்தது. லண்டன் பி. பி. ஸி. நிலையத்தில் இன்றும் அந்த இசைத்தட்டு இருக்கிறது.

ஆதாரம்: "டெக்கான் ஹெரால்ட்"
தகவல்: சரோஜா ராமச்சந்திரன்



# தலைசிறந்த மின்விசிறியைத் தேர்ந்தெடுப்பது எப்படி?

(ஃபேன் வாங்கக் கடைக்குச் செல்லும்போது இந்த விளம்பரத்தை எடுத்துச் செல்லுங்கள்)

**வடிவைக் கவனியுங்கள்:**
இணையற்ற அழகு கொண்ட மின்விசிறி ராலி:ஃபேன் அதிநவீன பாணியில் அழகாக வடிவமைக்கப் பட்டது. கண்ணுக்கு இதமான நான்கு வண்ணங்களில் கிடைக்கிறது—நீலம், பச்சை, பேஜ், தவிட்டு. பிடித்தமான வண்ணத்தைத் தேர்ந்தெடுங்கள்.





**அமைப்பைக் கவனியுங்கள் :**
ராலி:ஃபேனின் பாகங்கள் சீராக இயங்கும் வண்ணம் அமைக்கப்பட்டுள்ளன. எடுத்துச் செல்வது சுலபம். குழந்தைகளுக்கு ஆபத்து ஏற்படாமலிருக்கப் பாதுகாப்பு வலை பொருத்தப் பட்டுள்ளது. இயக்கத்தைக் கட்டுப்படுத்த புஷ்-பட்டன் வசதி உள்ளது.

**இயக்கத்தைக் கவனியுங்கள் :**
ராலி:ஃபேன் ஓசையின்றித் திறம்பட இயங்குகிறது. பக்கத்துக்குப் பக்கம் நன்றாக ஆடிச்சுழன்று, அதிகக் காற்றை அள்ளி வீசுகிறது.

**பெயரைக் கவனியுங்கள்:**
உறுதியான ராலி:ஃபேன் முற்றிலும் நம்பகமானது. ஏனெனில் இது புகழ்பெற்ற ராலி தயாரிப்பு! இதற்கு இரண்டு வருட உத்தரவாதம் உண்டு.




----- புள்ளிக் கோட்டை ஒட்டி வெட்டவும் -----

ராலி:ஃபேன் பற்றிய முழு வண்ணப் பிரசுரத்தை இலவசமாகப் பெற விரும்புவோர், இந்தக் கூப்பனைப் பூர்த்தி செய்து 'ராலிஸ் இந்தியா லிமிடெட் 21, ரேவலின் ஸ்ட்ரீட், பம்பாய்-1' என்னும் முகவரிக்கு தபாலில் அனுப்பவும்.

பெயர் ........................................

........................................

முகவரி ........................................

........................................

K.


RALLIFAN



# அந்த ஒரு பொய்

மயிலை மூர்த்தி

அலுவலகத்திலிருந்து அன்று சற்றுத் தாமதமாக வீடு திரும்பிய ரகு, உள்ளே நுழையும்போதே ''கீதா'' என்று அழைத்துக் கொண்டே வந்தான்.

''கீதா பக்கத்து வீட்டு ராஜியுடன் கோயிலுக்குப் போயிருக்கா. இப்போ வந்துடுவா. நீ உடையை மாற்றிக் கொண்டு வா, காப்பி சாப்பிடலாம்'' என்று அழைத்தாள் அன்னை பாகிரதி.

''ஏனம்மா, தபால் ஏதாவது வந்ததா?'' வழக்கமாக மாலையில் வீடு திரும்பியதும் ரகு கேட்கும் கேள்விதான் அது.

''ஆமாம்பா, ஒண்ணு வந்திருக்கு'' என்றவள், ஹாலில் இருந்த கடிகார ஸ்டாண்டிலிருந்து, அன்றையத் தபாலில் வந்திருந்த அந்தக் கடிதத்தைக் கொண்டு வந்து கொடுத்தாள். கடிதத்தைப் பிரித்து வேகமாகப் பார்வையை ஓட்டியவன், அடுத்த சில விநாடிகளில் அதை நான்காக மடித்து, மறுபடியும் தாயாரிடமே கொடுத்துவிட்டான்.

''யார் எழுதியிருக்கா? என்ன எழுதியிருக்கு?'' என்றாள் அவன் தாயார் ஆவலுடன்.

''ஏம்மா, இந்தக் கடிதாக வந்தது கீதாவுக்குத் தெரியுமா?''

''தெரியாது; தபால்காரர் வரும்போது அவன் மாடியில் இருந்தான். அப்படி என்னப்பா பெரிய விஷயம் அதிலே இருக்கு? கீதாவின் உடன் பிறந்தவன் ஏதாவது எழுதியிருக்கானா?''

''அதெல்லாம் இல்லே அம்மா; கிராமத்திலிருந்து மிராசுதார் கிருஷ்ணமூர்த்திதான் எழுதியிருக்கார். இரண்டு வருஷங்களுக்கு முன்னால் நம்ப மாலதி கல்யாணத்துக்காக அவரிடம் வாங்கின பணத்தில் பெருமளவு அப்படியே இருக்கு. இல்லையா? மாதாமாதம் வட்டி மட்டும் கட்டிக்கொண்டு வந்தால் போதாதாம்; அசலும் சேர்த்து அனுப்பணுமாம். அடுத்த மாதமே எதிர்பார்க்கிறாராம். மிகவும் கண்டிப்பாக எழுதியிருக்கார் அம்மா.''

''ஏற்கனவே, கிட்டத்தட்ட இருநூறு ரூபாய்க்குக் குறையாமல் அனுப்பறோம் இல்லையா? இன்னும் எங்கே போவது? குடும்பத்தில் அத்தியாவசியச் செலவுகளைக்கூட எவ்வளவோ குறைத்து விட்டோம்.''

''அம்மா! தயவுசெய்து கீதாவிடம் இதையெல்லாம் பற்றி மூச்சுக்கூட விட்டுவிடாதே. தன் கணவனுக்கு மூந்நூறு ரூபாய்தான் சம்பளம் என்ற நினைவிலேயே அவள் இருக்கட்டும். நம் குடும்பக் கஷ்டம் எல்லாம் அவளுக்குத் தெரிய வேண்டாம்.'' — அவன் குரலில் இனம் புரியாத ஒரு தவிப்பு.

''எனக்குத் தெரியாதா அப்பா!'' என்று அர்த்த புஷ்டியுடன் அவனை ஒரு முறை ஏற இறங்கப் பார்த்தவள், ''இன்னிக்குக்கூட நீ வந்ததும் சினிமாவுக்குப் போகணும்னு சொல்லிண்டு இருந்தாள்'' என்றாள்.

''அப்படியா? காலையில் என்னிடம் ஒரு வார்த்தைகூடச் சொல்லவில்லையே?'' என்றவன், ''சரி,சரி, ஒரு பத்து ரூபாய் இருந்தால் கொடும்மா, கீதா வரட்டும், சினிமாவுக்குப் போய் வந்துவிடுகிறோம்'' என்றான்.

பாகிரதி அந்த அறையை விட்டு வெளியே வந்தபோது, கீதா அறை வாசலில் நின்று கொண்டிருந்தாள். பாகிரதியின் உடம்பில் ஒரு படபடப்பு ஏற்பட்டது.

''நீ எப்போ வந்தே கீதா?''

''இப்போதானம்மா வந்தேன். வாசலில் சைக்கிளைப் பார்த்தேன். இவர் வந்துவிட்டார்னு தெரிஞ்சது. வேகமாக வந்துவிட்டேன். நான் உள்ளே வருவதற்கும் நீங்கள் அவர் அறையிலிருந்து வெளியே வருவதற்கும் சரியாக இருந்தது.''

''சரி! நல்ல வேளை. சீக்கிரம் 'டிரஸ்' பண்ணிக் கொண்டு கிளம்பு. அவன் தயாராகி விட்டான்.''

''எங்கேம்மா?''

''ஏண்டி, இன்னிக்குச் சினிமாவுக்குப் போகணும்னியே. ம், போ, ஒரு டாக்ஸியைப் பிடித்துச் சீக்கிரமாப் போங்கோ.''

''அம்மா, இன்னிக்குச் சினிமா வேண்டாம் அம்மா; எனக்கு உடம்பே சரியில்லே, ஒரே தலைவலியாக இருக்கு.''

''அட பைத்தியக்காரப் பெண்ணே! என்ன பூஞ்சையான உடம்பு உனக்கு'' என்று பாகிரதி சொல்லி முடிப்பதற்குள் ''என்னம்மா, கீதா 'ரெடியா?'' என்று கேட்டுக்கொண்டே வெளியே வந்தான் ரகு.

''அவள் வரவில்லையாம்பா'' என்றவாறே அந்த இடத்தை விட்டு நகர்ந்தாள் பாகிரதி.

''ஏன் கீதா, நான் 'லேட்டாக' வந்தேன்னு கோபமா?'' என்றான் ரகு, வாஞ்சையோடு.

''ஆமாம், கோபந்தான்'' — ரகு திடுக்கிட்டான்.

''நானும் கவனித்துக் கொண்டுதான் வருகிறேன். என்னை இவ்வளவு அக்கறையுடன் பார்த்துக் கொள்ளும் நீங்களும் அம்மாவும் உங்களைப் பற்றிக் கவலைப்படுவதே இல்லை. பாவம், அம்மாவுக்கு ஒரு வாரமாக உடம்பு

சரியில்லே; டாக்டரிடம் காண்பியுங்கள் என்றேன். எல்லாம் தானே சரியாகிவிடும் என்கிருர். உங்களிடம் சொல்லலாம் என்ருல், நீங்களும் எப்போதும் ஒரே சிந்தனை மயமாக இருக்கிறீர்கள். இந்த நிலேயில் எனக்கு மட்டும் சினிமா எதற்கு?''

''ஆமாம், கீதா! நீ சொல்வது ஓரளவு உண்மை. குழப்பத்துக்குக் காரணம், ஆபிசில் சில நாட்களாகவே அதிகரித்துள்ள வேலைப் பளுதான். வீட்டில் வந்து விழுந்தால் போதுமென்று ஆகிவிடுகிறது. அது போகட்டும், அதற்காக ஏன் போட்ட 'புரோகிராமை' மாற்ற வேணும்?''

கீதா லேசாகச் சிரித்தாள்.

''எனக்கும்தான் வீட்டில் வேலே அதிகமாக இருக்கு, களைப்பாக இருக்கு, ஓய்வு தேவையாக இருக்கு. போதுமா?''

''சரி, உன் இஷ்டம்'' என்று கூறிவிட்டு ரகு போய்விட்டான்.

கீதா நின்றுகொண்டே யிருந்தாள், மனம் சிந்தனை வசப்பட்டு. உண்மையிலேயே அவள் பாக்கியசாலிதான். எவ்வளவோ இடங்கள் தட்டிப் போனபிறகு, 'மனிதர்கள் நல்லவர்கள்; இந்த இடத்தை எப்படியும் முடித்துவிட்டால், தாயில்லாத தன் மகளுடைய எதிர்காலத்தைப் பற்றிக் கவலைப் படவேண்டாம்' என்று அவளுடைய தகப்பனர் செய்த தீர்மானம், இன்று அவளே அந்தக் குடும்பத்தில் ஒருத்தியாக ஆக்கிவிட்டது. பாகீரதி அம்மாள் அவளே மிகவும் பிரியமாகத்தான் நடத்திஞள். கண்ணின் மணியெனப் பாதுகாத்தாள் என்று கூடச் சொல்லலாம். தினம் மாலேயில் தானே தன் மருமகளுக்காகப் பூ வாங்கி வைப்பது முதல் அவளுக்காக வாங்கியிருந்த தையல் மிஷினைப் பராமரிப்பது வரை எல்லாமே அந்த அம்மாளுடைய பொறுப்புத்தான்.

கீதா திருமணமாகி வந்த புதிதில்தான் மாலதியின் திருமணம் நடந்தது. தகப்பனர் இல்லே என்ற குறையைப் போக்கி, அவள் கணவர், சிறப்பாக, சக்திக்கு மீறியே அதை நடத்தி விட்டார். வீட்டில் வேறு பொறுப்புகள் எதுவும் இல்லே. இதையெல்லாம் எண்ணிப் பூரிப்படையவேண்டிய அவள் மனத்தில் மட்டும் கடந்த சில மாதங்களாகவே ஒரு குழப்பம்; தனிமை; அதற்கேற்றபடி அந்த வீட்டில் நடைபெற்ற அடுத்தடுத்த சில சம்பவங்கள்!

அன்று: பாகீரதி எங்கோ வெளியே போயிருந்தாள். தபால்காரரின் குரல் கேட்டு வாசலுக்கு ஓடி வந்தாள் கீதா.

வழக்கமாகக் கடிதம் வந்தால் அதை வாங்கி யாரிடமிருந்து வந்திருக்கிறது என்று பார்த்துவிட்டு ஹாலில் உள்ள கடிகார ஸ்டாண்டில் வைக்க வேண்டுமென்பது அந்த வீட்டில் ஒரு நியதி. ஆனுல் அப்போது வீட்டில் நிலவி[illegible] தனிமை, தனக்கும் அந்த வீட்டில் உரி[illegible]ம இருந்தது என்ற சில நாட்களாகவே, தலேதூக்கிய உணர்வு, வந்தது தா[illegible]னே, படித்துப் பார்த்தால் என்ன என்[illegible] ஆர்வம்; எல்லாமே சேர்ந்து அவளேக் கடி[illegible]த்தைப் படிக்க வைத்தன. பதற்றத்துடன் ஒருமுறை கடிதத்தின் மீது பார்வையை ஓட்டியவள், அதைப் பத்திரமாக வைத்துவிட்டுத் தன் வேலேயில் ஆழ்ந்து விட்டாள்.

வெளியேயிருந்து வந்த பாகீரதி, வரும் போதே கட்டுக் கதம்பத்தை வாங்கிக் கொண்டு வந்தவள், ''கீதா, இந்தா, கடைத் தெருவுக்குப் போயிருந்தேன். இன்னிக்கு வெள்ளிக் கிழமைங்கிறது நினைவு வந்தது. பூவைக் கையோடு வாங்கி வந்துவிட்டேன். இந்தா வைத்துக் கொள்'' என்றவாறே பொட்டலத்தை அவளிடம் நீட்டினுள். தொடர்ந்து உள்ளே சென்றவள், ஸ்டாண்டில் கடிதத்தைப் பார்த்துவிட்டு, ''யார் போட்டிருக்கா?'' என்ருள்.

தெரியவில்லேயம்மா. இங்கிலீஷில் எழுதியிருக்கு'' என்று சட்டென்று பதிலளித்தாள் கீதா.

அன்று இரவு: தாயும் மகனும் அறையில் வெகுநேரம் பேசிக் கொண்டிருந்தனர்.

''ஏண்டா, யார் எழுதியிருக்கா?''

''யார் எழுதுவார்கள்? யாருக்கு அக்கறை நீயும், நானும் இந்தக் குடும்பமும் சௌக்கியமாக இருக்கணும்னு? எல்லாம் அந்தக் கிருஷ்ணமூர்த்திதான். அவர் சொன்னபடி இரண்டு மாசமாக நாம் பணம் அனுப்பவில்லே அல்லவா? தான் உதவி செய்த சந்தர்ப்பத்தையும், அதன் அவசியத்தையும் அதை நாம் எவ்வாறு மதித்து நடந்து கொள்ள வேண்டும் என்பதைப் பற்றியும் நினைவுபடுத்திவிட்டு, உடனே பணம் அனுப்பா விட்டால் வேறு வழிகளைப் பின்பற்ற வேண்டியிருக்குமென்கிருர். இவ்வளவையும் வேண்டுமென்றே ஒரு கார்டில் எழுதியிருக்கிருர். சீ, என்ன மனுஷன்? சரி, சரி, இப்போது இருக்கிற நிலேயில் இன்னும் நூறு ரூபாய் அனுப்புவது என்பது நினேத்துக்கூடப் பார்க்க முடியாது. என்ன செய்துகொள்ளுகிருரோ செய்யட்டும்!'' —

அந்த அமைதியான இரவு நேரத்தில் ரகுவின் ஒவ்வொரு வார்த்தையும் தெளிவாகக் கேட்டுக் கொண்டிருந்தது. பாகீரதி வருத்தத்தில் ஆழ்ந்துவிட்டாள். எவ்வளவோ பெரிய காரியத்துக்குச் சமயத்தில் உதவியவர் அவர். அவருக்கு ஒரு நெருக்கடி வந்தபோது அவருடைய பணத்தைத் திரும்பக் கொடுக்கமுடியவில்லே. மௌனமாகத் தவித்தாள் அவள்.

வீட்டின் செலவுகள் தொடர்ந்து சிக்கனப் படுத்தப்பட்டன, கீதாவுக்குத் தெரியாத வகையில். இடையில் கீதா ஒரு முறை பிறந்தகம் செல்ல வேண்டிய நிர்ப்பந்தம் ஏற்பட்டது. அவளுடைய மன்னிக்குப் பூச்சூட்டல் என்ற விஷயத்தை அறிந்த கீதா மகிழ்ச்சியால் துள்ளினுள். அவர்கள் வீட்டில் நீண்ட நாள் எதிர்பார்த்த ஒரு வைபவம் அது. ரகு, தாயாரைக் கலந்து ஆலோசித்தான். ''ஆமாம்மா, கீதா ஒரே தங்கை. மன்னிக்குப் பட்டுப் புடவை வாங்கிக் கொண்டு போக வேண்டாமா? நம்ம செட்டியார் கடைக்கு அவளே அழைத்துக்கொண்டு போய் நல்லதாக ஒன்று வாங்கிக் கொடுத்துவிடு'' என்ருன்.

கீதாவும் ஊருக்குப் போய்த் திரும்பிவிட்டாள். இடையில் கிருஷ்ணமூர்த்தி, வாரி விருந்து வருபவர்களிடம் எல்லாம் சொல்லி

அனுப்ப ஆரம்பித்து விட்டார். குடும்பச் செலவுகளோ சிக்கனத்தின் எல்லைக்கே போய் விட்டன.

இந்த நிலையில்தான் ஒரு நாள் மாலை, அன்றைய தினசரிப் பத்திரிகையுடன் தன் கணவன் அறையில் நுழைந்தாள் கீதா.

''இதோ பாருங்க. இந்த விளம்பரத்தைப் பாருங்க. ஒரு பெண் குமாஸ்தா வேணும்னு போட்டிருக்கு. மாதம் முந்நூறு ரூபாய் சம்பளம்.''

''ஆமாம், அதற்கென்ன இப்போது?'' என்று அசிரத்தையாகப் பத்திரிகையைக் கையில் வாங்கிய ரகு, அந்த விளம்பரத்தின் மீது பார்வையை ஓட்டினான்.

''வந்து, வந்து. ரொம்ப நாளா எனக்கு ஓர் ஆசை. வீட்டிலே பொழுதே போகவில்லே. நீங்க அனுமதிச்சா எங்கேயாவது வேலே பார்க்கலாம்னு. நீங்க அனுமதிச்சாத்தான்!'' தயங்கினாள் அவள்.

பெரிதாகக் கடகடவென்று சிரிக்க ஆரம்பித்தான், ரகு.

''ஐயோ பாவம், இதற்கு நீ இவ்வளவு தயங்கவே வேண்டாம். பொறுமையாக அந்த விளம்பரத்தை மறுபடியும் படித்துப் பார். பி. ஏ. பட்டதாரி தேவை என்று போட்டிருக்கிறார்கள்.''

''தெரியும்.''

''தெரியுமா? கீதா, என்ன சொல்றே? நீ ஹைஸ்கூல் வரைக்கும்தான் படிச்சிருக்கே இல்லையா?''

''ஆமாம், அப்படித்தான் அப்போது சொன்னோம்.''

''எனக்குப் புரியவில்லே கீதா.''

''என்னே மன்னிச்சிடுங்க. ஒரு பொய்யைச் சொல்லி எங்கப்பா என்னைக் கல்யாணம் பண்ணிக் கொடுத்து விட்டார் உங்களுக்கு.''

''பொய்யா?'' — பதறினான் ரகு.

''ஆமாம்; முதலில் அப்பா எல்லோரிடமும் தன் பெண் ஒரு பட்டதாரி, அறிவாளி, திறமைசாலி, பல பேச்சுப் போட்டிகளில் பரிசுகள் எல்லாம் ஏராளமாக வாங்கியிருக்கிறாள் என்றெல்லாம் பெருமையுடன் சொல்லிக்கொண்டுதான் இருந்தார். பாவம் அப்பா; திருமண மார்க்கெட்டில் ஒரு பெண்ணின் இத்தகைய தகுதிகள் எல்லாம் அவளுக்குப் பாதகத்தையே விளைவிக்கும் என்று அறியவில்லை. பலன்: பட்டதாரிப் பெண் குடும்பத்துக்கு ஒத்துவருமா என்ற சந்தேகம் தலை தூக்க, வந்த பல நல்ல இடங்கள் கைநழுவிப் போய்க் கொண்டிருந்தன. அந்த நிலையில் தான் நீங்கள் என்னைப் பெண் பார்க்க வந்தீர்கள். நீங்கள் ஒரு எம். ஏ. பட்டதாரி என்றவுடன் என் மனம் மகிழ்ச்சியால் துள்ளியது. கூடவே வழக்கமான பயம், எங்கே இந்த இடமும் கிட்டாமல் போய்விடுமோ என்று. இந்த நல்ல இடத்தை இழந்துவிடக் கூடாது என்ற சுயநலத்தினால்தான் அப்பாவிடம், நான் ஹைஸ்கூல்வரை படித்திருப்பதாகக் கூறும்படி சொன்னேன். தன் பெண்ணின் வருங்காலத்தை மனத்தில் கொண்டு நீண்ட நேர ஆலோசனைக்குப் பிறகு கடைசியாக அப்படியே சொல்லிவிட்டார்'' — மனத்



தில் அடித்தளத்தில் உருவான உணர்ச்சி அலைகள், அவன் பேச்சைத் தடை செய்தன.

''கீதா!'' என்றான் ரகு.

''என்னை மன்னித்துவிடுங்கள். இரண்டு வருடங்களாகவே இதை எப்படியும் உங்களிடம் சொல்லிவிட வேண்டுமென்றுதான் துடித்தேன். ஆனால் அதற்குச் சந்தர்ப்பமே கொடுக்காமல், நீங்களும் அம்மாவும் உங்கள் அன்பால் என்னை எல்லாவற்றையும் மறக்கச் செய்துவிட்டீர்கள். என்னை என் நினைவுக்குக் கொண்டு வந்தது, சில நாட்களுக்கு முன்னால் வந்த அந்தக் கடிதம்தான். இந்தக் குடும்பத்தில் நானும் ஒருத்தியாகி இரண்டு வருடங்கள் ஓடிய பிறகு, இன்னுமா என்னை நீங்கள் ஒரு வேற்று மனுஷியாக நடத்த வேண்டும்? இந்தக் குடும்பத்தின் சுகங்களில் பங்கு கொள்ளச் செய்யும் நீங்கள் உங்கள் சோதனைகளிலும் பங்கு கொள்ளும் உரிமையையும் அளிப்பீர்கள் என்று எதிர்பார்த்தேன். நீங்கள் தயங்கவே அந்த உரிமையை நானே எடுத்துக்கொண்டு விட்டேன்.'' — இரண்டு ஜோடிக் கண்கள் கண்ணீரால் பளபளத்தன அங்கே. கீதா தொடர்ந்தாள்.

''வீட்டுக்கு வீடு நடக்கும் சாதாரண நிகழ்ச்சிதானே இது. மாலதியின் கல்யாணத்தை நினைவுபடுத்திப் பாருங்கள். அது, அன்று அவ்வளவு சிறப்பாக நடந்தேற உதவிய உங்கள் நண்பர் கிருஷ்ணமூர்த்தியைத் தெய்வமாகத்தான் நினைக்க வேண்டும். ஆம், அந்த ஒரு நிறைவை, கடமையை ஆற்றிய பெருமிதத்தை நமக்களித்த அந்தக் கிருஷ்ணமூர்த்தி தெய்வமாக இல்லாமல் வேறு எப்படி இருக்க முடியும்? அவருக்கு இப்போது ஒரு நெருக்கடி ஏற்பட்டுப் பணத்தைத் திருப்பிக் கேட்கும்போது கொடுக்க வேண்டியதுதானே நம் கடமை? தயவுசெய்து எனக்கும் அந்தப் புனிதமான பொறுப்பான பணியில் ஈடுபட்டோம் என்ற பெருமையை அளியுங்கள். வாழ்நாளில் உங்கள் சுகதுக்கங்களைச் சமமாகப் பகிர்ந்துகொள்ள வந்தவள் என்ற உரிமையுடன்தான் கேட்கிறேன். தயவு செய்து என்னுடைய கோரிக்கையை நிறைவேற்றுங்கள்!'' திடீரென்று ரகுவின் கால்களில் விழுந்து நமஸ்கரித்தாள் அவள்.

பதறியவாறே விலகி நின்றான் ரகு.

''எழுந்திரு கீதா! என்ன இதெல்லாம்? நீ சொன்ன ஒவ்வொரு வார்த்தையையும் கொடுத்த அதிர்ச்சியையும் கொஞ்சம் கொஞ்சமாக ஏற்றுக் கொண்டு இணைகிறேன் நான். அடேயப்பா, எவ்வளவு பெரிய உண்மை; எவ்வளவு பெரிய பொய்! கீதா, உன்னைப் பார்க்கும்போது நான் இப்போது எவ்வளவு பெருமைப்படுகிறேன் தெரியுமா? அன்று உன் அப்பா கூறிய அந்த ஒரு பொய் எனக்கு இவ்வளவு அறிவும் அழகும் ஒருங்கே வாய்ந்த பொறுப்பான மனைவியைக் கொடுத்தது என்றால், இதற்காக அவர் வழக்கமாக, அனுமதிக்கப்பட்ட, ஆயிரத்துக்கு மேல் எவ்வளவு பொய் சொல்லியிருந்தாலும் ஏற்றுக்கொள்கிறேன். சரி, உன் முயற்சிகளுக்குக் குறுக்கே நிற்கவில்லை. என்னால் இயன்ற உதவிகளையும் செய்கிறேன்'' என்றவாறே அவளை நெருங்கியவன், ''அடேயப்பா, பெண்மைக்குள் எவ்வளவு சக்தியை அடைத்து வைத்திருக்கிறான் ஆண்டவன்'' என்றான் பெருமிதத்தோடு.

''ஆமாம், பெண்மைக்கு ஆண்டவன் அளித்துள்ள சக்தி உற்சவ விக்கிரகத்தைப் போன்றது. தெருவில் பவனி வரும்போது அது பிரகாசிக்கலாம். ஆனால் கோயிலில் நுழைந்து விட்டாலோ மூல விக்கிரகத்தின் முன்னால் அது அடங்கித்தானே இருக்க வேண்டும்? உங்கள் பொறுமைக்கும், திறமைக்கும் முன் நான் எம்மாத்திரம்?'' — இலேசாக முறுவலித்தாள் கீதா.

''ஏண்டா ரகு, காப்பி ஆறிப் போகிறது. உள்ளே கொண்டு வரவா?'' — அறை வாசலில் நின்று குரல் கொடுத்தாள் பாகீரதி அம்மாள்.

அவள் கண்களும் கலங்கியிருந்தன இப்போது.

## கணக்குக் கணவன்!



தகவல் : ரமணன் ஜீ

ஆதாரம் : யார்க்ஷயர் போஸ்ட்

ஞாயிற்றுக்கிழமையன்று குழந்தைகளை வீட்டில் விட்டுவிட்டுச் செல்லும்போது தன் கணவனிடம், ''குழந்தைகளை ஜாக்கிரதையாகப் பார்த்துக் கொள்ளுங்கள்; மாலை வந்துவிடுகிறேன்'' என்று சொல்லி விட்டுச் சென்றாள். அவளுடைய கணவன் கணக்கிலே மிகுந்த கெட்டிக்காரன். ஆகவே, மனைவி திரும்பி வந்தபோது கணவன் அவளிடம் ஓர் அறிக்கையைச் சமர்ப்பித்தான். அதன் விவரம் :

''கண்ணீர் துடைத்த தடவைகள் 9; ஜோடு மாட்டி விட்ட தடவைகள் 13; பலூன்கள் வாங்கிக் கொடுத்தது ஒவ்வொரு குழந்தைக்கும் 3; ஒரு பலூனின் சராசரி ஆயுட்காலம் 13 செகண்டு; வீதியில் குறுக்கே ஓடாதே என்று எச்சரித்த தடவைகள் 21; எச்சரிக்கையை மீறிக் குழந்தைகள் வீதியின் குறுக்கே ஓடிய தடவைகள் . 1; இனி இந்தமாதிரிக் குழந்தைகளைப் பார்த்துக் கொள்வதாக நான் ஒப்புக் கொள்ளும் ஞாயிற்றுக்கிழமை 0.''

# வட்ட மேஜை

சென்ற 9-3-69 கல்கி இதழில் 'சபாஷ் குடந்தை மாணவர்கள்' என்ற தலைப்பினில் வந்த செய்தி எங்களை மகிழ்ச்சிக்குள்ளாக்கியது. இந்த இடத்தில் எங்களுடைய திருப்பணியையும் குறிப்பிட விரும்புகிறோம். எங்கள் கல்லூரிக்கு எதிரில் அமைந்திருக்கும் விநாயகப் பெருமானின் கோவில் திருப்பணிக்காக, இக்கல்லூரி மாணவர்களாகிய நாங்களே முன்வந்து 1966–67 வருடத்தில் திருப்பணியின் முதல் படியாகக் கோவில் சுற்றுப் புறங்களைச் சீர்திருத்திக் கோவில் உட்பிராகாரங்களைச் செப்பனிட்டு மின் வசதியும் செய்திருக்கிறோம். இதற்காகச் செலவான 1500 ரூபாயைக் கல்லூரி மாணவர்களே முன்வந்து ஏற்றுக் கொண்டார்கள்.

இதன் இரண்டாவது படியாக, கோவில் கோபுரத்தையே செப்பனிட்டுக் கும்பாபிஷேகம் செய்து விடுவதாகத் தீர்மானிக்கப்பட்டுக் கல்லூரி மாணவ, ஆசிரியர்களிடமிருந்து நன்கொடை வசூலிக்கப்பட்டுத் திருப்பணி நடந்து கொண்டிருக்கிறது. இம் மாத இறுதியில் கும்பாபிஷேகம் நடைபெறவிருக்கிறது.

காஞ்சி ஆசாரிய சுவாமிகள் விஜயவாடாவில் இருந்த பொழுது, இக்கோயில் விநாயகருக்கு 'விஜய விநாயகர்' என்று பெயர் சூட்டியது குறிப்பிடத் தக்கது.

ஆஸ்திகப் பெருமக்கள் திருப்பணியில் கலந்துகொண்டு, தங்களால் இயன்ற அளவு நன்கொடை அனுப்புமாறு கேட்டுக் கொள்ளப்படுகிறார்கள். அவர்களுக்கு அர்ச்சனை செய்து பிரசாதம் அனுப்பப்படும்.

வே. பாலசுப்பிரமணியன்

தலைவர், ஸ்ரீ விஜயவிநாயகர் ஆலயக் கும்பாபிஷேகக் கமிட்டி 91, குப்புசாமி நாயுடு வீதி, அழகப்பா பொறி இயல் கல்லூரி, காரைக்குடி-4

★

சென்ற 9–3–69 கல்கி இதழில் திரு ரா. கணபதி அவர்களின் 'வேத விருட்சத்தில் ஒரு கிளி' என்ற தத்துவ விளக்கத்தை நான் படிக்க நேர்ந்தது. என்றும் அழியா ஹிந்து தர்மத்தின் தத்துவ போதனைகளைச் சற்றேனும் பெருகு குறையாமல், மிருதுத்தன்மையுடனும் சொல்லழகுடனும் சுந்தரத் தமிழினில் அவர் விளக்கி விருக்கிறார்.

சென்னை – 7
9–3–69

இராமன் அனந்தன்

★

சர்க்கார் தற்போதுள்ள நில உச்சவரம்பை மேலும் குறைத்துப் பல சீர்திருத்தங்களுடன் புரட்சிகரமான முன்னேற்றத்துக்கு ஒரு சட்டம் இயற்றப் போவதாகச் சட்டசபையில் உணவு அமைச்சர் அறிவித்துள்ளார்.

பெருகும் சமுதாயத்தில் அமோக உணவு உற்பத்தியைக் காண எல்லாவித நவீன சாதனங்களுடன் விவசாயம் இலாபகரமாக இருந்தாலொழிய அதில் முன்னேற்றத்தைக் காண இயலாது. வசதியற்றவர்களிடம் நிலத்தை ஒப்படைத்து அதில் உற்பத்தியைக் காண எல்லோருக்கும் எல்லா உதவியும் சர்க்கார் செய்துவிட முடியாது என்பதோடு, அதில் எதிர்பாராமல் ஏற்படும் நஷ்டத்தையும் ஈடு செய்துவிட முடியாது.

தற்போதுள்ள அமைப்பில் நிலம் சிதறுண்டு சிறு துண்டுகளாக இருப்பதை ஒருமுகப்படுத்தி நவீன சாதனங்களுடன் அதிக உற்பத்தியைக் காண வேண்டுமென்ற ஓர் எண்ணம் உண்டு.

இப்போதுள்ள அமைப்பை உறுதியாக நம்பித்தான் நிலங்களை நன்கு பண்படுத்தி இருபது முப்பது ஏக்கருள்ள சிலர் டிராக்டர் முதலிய நவீன சாதனங்கள், மின்சாரப் பம்பு செட்டு போன்றவைகளைக் கொண்டு பல ஆயிரக் கணக்கான முதலீடு செய்து உணவு உற்பத்தியில் கவனம் செலுத்தி, அதிக உணவு உற்பத்தி செய்து வருகிறார்கள். மேலும் அதிக உணவு உற்பத்தியைக் காண முயற்சி செய்து வருகிறார்கள். தற்போதுள்ள அமைப்பை மேலும் சோதனைக்குட்படுத்தினால் விவசாய உணவு உற்பத்தியும், விளைபொருள் உற்பத்தியும் பாதிக்கப்படும் என்பதைச் சர்க்கார் உணர வேண்டும்.

கிராமங்களில் சிறு கைத்தொழில்களைப் பரவலாக அமைத்து ஏழைமையைப் போக்கச் சர்க்கார் தீவிர கவனம் செலுத்தி உதவ வேண்டும்.

இராசிபுரம் என்.ஆர்.டி.மாரப்ப கவுண்டர்
19–3–69 நகரசபை உறுப்பினர்.

★

பம்பு செட்டுகளைப் பொறுத்தவரை இந்திய உற்பத்தியில் நாற்பது சதவிகிதம் கோவையில் தயாராகின்றன. பம்பு செட்டுகளுக்குத் திரு மொரார்ஜி கடுமையான வரியை விதித்திருப்பது பரிதாபம். இதைப் பம்பு செட்டு வைப்பவர்தான் சுமக்க வேண்டும். கங்கவரி இலாகா கூட்டும் வரியை உற்பத்தி செய்பவர் வியாபாரியிடமிருந்தும் வியாபாரிகள் உபயோகிப்போரிடமும் வசூல் செய்யும் பொழுது, பாதிக்கப்பட இருப்பவர் யார்? நில அடமான வங்கிகளில் கடன் வாங்கும் ஏழையின் தலையில் மிளகாய் அரைப்பதுதான் மொரார்ஜியின் சோஷலிஸமா?

திருநெல்வேலி, வி. டி. ரங்கநாதன்
13–3–69

Printed & published by R. Ananthanarayanan on behalf of Messrs. Bharathan Publications Private Limited at Kalki Press, Chetput, Madras-31
Managing Editor: T. Sadasivam


மோகனச்
சிரிப்பில்
மிதந்ததுண்டோ?
ஃபண்டா ஆரஞ்சு
சுவை இனிதே...
பருகிடவே
எடுக்காதோ தாகம்!
ஃபண்டா கோகா-கோலா
கம்பெனியின் தயாரிப்பு
CMCF-3-152-TAM

REGISTERED No. M. 4392
Registered as a Newspaper in Ceylon

சலவைக்கு சலவை...

# துணிகளுக்கு அதிக ஒளியூட்டுவது ஸன்லைட்




ஸன்லைட் சோப்பினால் சலவைசெய்து பார்த்தீர்களானால் தெரியும் வெட்ட வெளிச்சமான உண்மை: சலவைக்கு சலவை உங்கள் துணிகளுக்கு அதிக ஒளி!

சிறிதே தேய்த்தாலும் செழுசெழுவென்று கொழிக்கும் நுரை—தூய்மை ஓங்க வெளுக்கும் ஒளி நிரக்க. உங்கள் துணிகள் அனைத்துக்கும் உரியது ஸன்லைட்.

**உங்கள் அன்றாடத் துணிகளின் சலவைக்குரியது ஸன்லைட்**

லின்டாஸ்-S, 63-140 TM

இந்துஸ்தான் லீவர் தயாரிப்பு.